# தென்னிந்திய சிற்பங்களும் கோயில்களும்



தி. இராசமாணிக்கம்

# தென்னிந்திய சிற்பங்களும் கோயில்களும்



ஆசிரியர் :

தமிழகக் கோயிற் கலைச்செல்வர்

ஸ்ரீ. இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்., விசாரத்

[கூட்டுறவுச் சங்கங்களின் இணைப் பதிவாளர் (ஓய்வு)]



விற்பனை உரிமை :

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

154, டி. டி. கே. சாலை, சென்னை-18

1992

# முன்னுரை

இறை வடிவங்களை அமைப்பதற்கு ஆகமங்களில் கூறப்பட்ட விதிகளினின்றும் வேறுபட்ட வடிவங்கள் ஆங்காங்கு உள்ள திருக்கோயில்களில் உள்ளன. அத்தகு வடிவங்கள் பத்தொன்பதைப் பற்றிய கட்டுரைகள் இந்த நூலில் இடம் பெற்றுள்ளன. தமிழகக் கோயில்கள் பல சிறப்புகளை உடையனவாக உள்ளன. சில கலைச் சிறப்பு மிக்கனவாகவும், இன்னும் சில சமய மாண்பு உடையனவாகவும் உள்ளன: இறைவடிவங்களில் சில ஒரே ஒரு கோயிலில் மட்டும் மூலவராக அரிதாகக் காணப்படுகின்றன. இந்த அடிப்படையில் பன்னிரண்டு கோயில்களைப் பற்றிய கட்டுரைகள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. ஆந்திர மாநிலத்தில் உள்ள மிகவும் தொன்மையான குடிமல்லம் இலிங்கம், சிவபெருமான் பள்ளி கொண்ட திருக் கோலத்தில் உள்ள அருட்டப்பள்ளி கோயில் ஆகியவை பற்றி இரு கட்டுரைகளும், கர்நாடக மாநிலத்தில் சிறப்புடன் செங்கோலோச்சிய மேலைச் சாளுக்கி யர்கள், போசாளர்கள், மற்றும் விசய நகரப் பேரரசர்கள் ஆகியோரின் கலைச் செல்வங்கள் பற்றிய மூன்று கட்டுரைகளும் இதில் இடம் பெற்றுள்ளன: மேலும் சிற்பங்கள் மற்றும் கோயில்கள் பற்றிய பொதுக் கருத்துக்கள் கொண்ட நான்கு கட்டுரைகளும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்த நூலில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளில் பல செந்தமிழ்ச் செல்வி, தினமணி, மஞ்சரி, திருக்கோயில் மற்றும் சப்தகிரி ஆகிய பத்திரிகைகளில் வெளிவந் துள்ளன. இவற்றை வெளியிட்ட அந்தப் பத்திரிகை ஆசிரியர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றியை உரித்

தாக்கிக் கொள்கின்றேன். இந்த நூலை வெளியிட நிதி உதவி அளித்துத் தனது பேராதரவினைத் தொடர்ந்து அளித்துவரும் திருமலை திருப்பதி திருக்கோயில் நிர்வாகத்திற்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். இதனை நல்ல முறையில் அச்சிட்டு வெளியிட்ட திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகத்தின் ஆட்சியாளர் திருமிகு இரா. முத்துக் குமாரசாமி எம். ஏ., பி. லிப். அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

"என் கடன் பணி செய்து கிடப்பதே"

தி. இராசமாணிக்கம்

# உள்ளுறை

பக்கம்

திருச்சி மாவட்டம்



ஆந்திர மாநிலம்



கர்நாடக மாநிலம்



பொது



சுந்தரமூர்த்தி சுவாமிகள் - திருவெண்ணெய்நல்லூர்



நரசிம்மர் - ஹம்பி



சிவாம்ச துர்க்கை - படாலியூர்



ஆடு ஊர்தியுடன் முருகன் - திருப்போரூர்



வில்லேந்திய வேலன் (ஒரு தலை ஆறு கைகளுடன்)
திருவண்ணாமலை



துர்க்கா கோயில் - ஐ ஹோ லே

# தென்னிந்திய சிற்பங்களும் கோயில்களும்



## "விதிதனைப் படுத்து அருமறை விலக்கிய விமலன்"

(திருச்செந்தூர் முருகன் சிறைவிடந்தாதி)

கயிலையில் இறைவனை வணங்கித் திரும்பிச் சென்ற பிரமனது செருக்கை அடக்க முருகப் பெருமான் திருவுள்ளம் கொண்டான். பிரமன் படைப்புக் கடவுள் என்பதால், அவனை "ஓம்" என்ற பிரணவ மந்திரத்திற்குப் பொருள் சொல்லுமாறு கேட்டான். பிரணவப் பொருளை அறியா அவன் நிலையினை,

> "மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் வீக்கித்
> திகைத்திருந்தனன் கண்டிலன் அப்பொருட்டிறனே"
> (1-16-10)

என வெகு அழகாகத் தம் கந்த புராணத்தில் கச்சியப்ப சிவாசாரியார் சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார். பிரணவப் பொருளை அறியா அவன் நான்கு மாமுடிகளும் குலுங்க முருகப் பெருமான் குட்டினான். அவன் கீழே விழும்படித் தன் திருவடியால் உதைத்து, தன் ஏவலாளர்களால் விலங்கு இட்டு, சிறையிலிட்டான். மண்ணுலகில் உயிரினங்கள் தழைத்து ஓங்கத் தானே படைப்புத் தொழிலை மேற்கொண்டான். இவ்வாறு

பிரமனைத் தண்டித்த முருகப் பெருமானது திருவுரு "பிரமசாத்தா" என்று அழைக்கப் பெறும்.

"குமாரதந்திரம்" என்ற நூலில் கூறப்பட்ட பதினாறு வடிவங்களில் இஃது ஒன்று; இஃது ஒரு முகம், நான்கு கைகள் கொண்டனவாக இருக்கவேண்டும். இதன் முன் இரு கைகள் அபய மற்றும் வரத முத்திரைகளில் இருக்க, பின் இரு கைகளில் அக்கமாலையும் கமண்டலமும் அமைக்கப்படவேண்டும் என்று விதிக்கப் பட்டுள்ளது. தணிகைப் புராணத்திலும் இந்தக் கோலமே கூறப்பட்டுள்ளது:

"வரத மணிக் குண்டிகை இரண்டும்
வாமத் திருக்கைத் தலமாக்கிப்
பரவுபுரியும் அபய மொடு புரைதீர்
அக்கவடம் வலப் பால்
இரவை இரிக்கும் வலத்து அமைத்திட்டு
எல்லா உலகும் இனிது அளித்து
பிரம சாத்தன் எனப் பொலிந்த பெருமான் உருவம்"
(அகத்தியன் அருள்பெறுபடலம்-75)

பிரமசாத்தா வடிவம் பரவலாகத் தொண்டை நாட்டில் காணப்படுகிறது. புகழ் மிக்க காஞ்சிபுரம் குமரக்கோட்டம், பாகசாலை, ஆனூர் சிறுவாபுரி ஆகிய தலங்களில் உள்ள மூலவர் திருவுருவங்களை இதற்குச் சான்றுகளாகக் கூறலாம். இருப்பினும் சிற் சில வேறு பாடுகள் ஆங்காங்குக் காணப்படுகின்றன. எடுத்துக் காட்டாக ஆனூரில் உள்ள மூலவரின் முன்வலக்கை அபய முத்திரையில் இருப்பதற்குப் பதிலாக மலரைப் பிடித்த நிலையில் காணப்படுகிறது. சிங்க ஊர்தியுடன் கூடிய அரிய திருவுரு சென்னையை அடுத்துள்ள திருப் போரூரில் உள்ளது:

"நிகரில் போரூர்" என்றும் "முனிவர் குழாங்கள் புகழ் போரூர்" என்றும் "அருமறையின் ஒலி நிலவு

சமரபுரி'' என்றும் சிதம்பர அடிகளால் தம் ''திருப் போரூர் முருகன் பிள்ளைத் தமிழில்'' பரவிய திருப் போரூர் முருகனது திருக்கோயிலில் இரண்டாவது திருச் சுற்றில் நுழை வாயிலை அடுத்து இந்த வடிவம் காணப் படுகிறது. ஒருதலை நான்கு கைகள் கொண்ட இந்தத் திருவுருவின் முன் இரு கைகள் அபய மற்றும் வரத முத்திரைகளில் இருக்க, பின் இரு கைகளில் அக்க மாலையும், கமண்டலமும் 'குமார தந்திரம்' என்ற நூலில் விதிக்கப்பட்டபடி அமைக்கப்பட்டுள்ளன. மேலே குறிப்பிட்ட நூலில் இந்த வடிவிற்கு எந்த ஊர்தியும் குறிப்பிடப்பட்டதாகத் தெரியவில்லை. புராண வரலாற்றுப்படி, முருகனுக்கு மயிலும், ஆடும் ஊர்திகளாம். இலக்கியங்களில் அவனுக்கு யானை ஊர்தியாகக் கூறப்பட்டுள்ளது. ''ஸ்ரீதத்வநிதி'' என்ற ஆகமத்தில் சரவண பவன் என்ற வடிவிற்குச் சிங்கம் ஊர்தியாக விதிக்கப்பட்டுள்ளது. ''குமார தந்திரத்தில்'' பிரமசாத்தா வடிவிற்கு எந்த ஊர்தியும் குறிப்பிடப்படாததாலும், சிங்க ஊர்தி முருகப் பெருமானுக்கு ''ஸ்ரீதத்வநிதி''யில் அரிதாக விதிக்கப்பட்டமையாலும், இந்தச் சிலையை அமைத்த சிற்பி இந்த வடிவிற்குப் பின்னால் சிங்கத்தை உருவாக்கினான் போலும்!

சிங்க ஊர்தியுடன் கூடிய பிரமசாத்தா திருவுரு ஓர் அரிய கலைப் படைப்பாகும்.

———

## "போருகத் தகரை யூர்ந்த புண்ணியமூர்த்தி"
(திருவருட்பா)

இறைவனின் ஒவ்வொரு திருவுருவிற்கும் ஒவ்வோர் ஊர்தி உண்டு. சிவபெருமானுக்குக் காளை, அன்னை பராசக்திக்குச் சிங்கம், திருமாலுக்குக் கருடன் என்பன ஊர்திகளாம். முருகனுக்கு ஊர்தி மயில் என்பது யாவரும் அறிந்த ஒன்று. மயிலே அன்றி, அவனுக்கு யானையும், ஆடும் ஊர்திகளாம்.

முருகனுக்கு மயில் ஊர்தி என்பதற்குக் கந்த புராணத்தில் ஒரு வரலாறு காணப்படுகிறது. ஆனால் யானைக்குப் புராண ஆதாரம் இருப்பதாகத் தெரிய வில்லை. இருப்பினும் சங்ககால இலக்கியங்களான புற நானூறு, பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகியவற் றில் யானை ஊர்தியாகப் பேசப்படுகிறது. ஆடு ஊர்தி என்பதற்குக் கந்தபுராணத்தில் ஒரு வரலாறு காணப் படுகிறது.

நாரதர் இயற்றிய வேள்வியில் ஆடு ஒன்று எழுந்தது. அதன் சீற்றத்தைக் கண்ட வேள்வி செய்த வர்கள் அஞ்சி ஓடினார்கள். இதன் வலிமையைக் கண்ட,

"எட்டுள திசைக்கரி இரிந்து அலறி ஏங்க" (1-15-7)

என்பர் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் தம் கந்த புராணத்தில். எட்டுத் திசைகளிலும் உள்ள யானை களும் இதன் ஆற்றலைக் கண்டு ஓடினவாம். இதனால் ஏற்பட்ட நாசத்தைக் கண்ட நாரதர் முதலிய முனிவர்கள் அதை அடக்குமாறு முருகப் பெருமானிடம் வேண்டினர். அவனது ஆணையின்படி வீரவாகு தேவர் ஆட்டின் கோட்டைப் பற்றி முருகன் திருமுன் கொண்டு வந்து நிறுத்தினான். அவ்வமயம் முனிவர்கள்,

"கார் தரு கண்டத் தெந்தை காதல வேள் வித் தீயிற்
சேர்தரு தகரின் ஏற்றைச் சிறியரேம் உய்யுமாற்றால்
ஊர்தியாகக் கொண்டே ஊர்ந்திடல் வேண்டும்"
(1-5-23)

என வேண்டினர். அவர்களது வேண்டுகோளுக்கு இணங்கிய முருகப் பெருமான் அன்று தொட்டு அவ் வாட்டுக் கடாவைத் தன் ஊர்தியாகக் கொண்டான். இந்தச் செய்தியைக் "குட்டிக் கந்த புராணம்" எனப் போற்றப் பெறும் "கந்தர்கலி வெண்பா"வில் குமர குருபர சுவாமிகள்,

"நெருப்பில் உதித்து
அங்கண் புவனம் அனைத்தும் அழித்து உலவும்
செங்கண் கிடாயதனைச் சென்று கொணர்ந்து எங்கோன்
விடுக்குதி என்றுஉய்ப்ப அதன்மீது இவர்ந்து எண்திக்கும்
நடத்தி விளையாடும் நாதர்" (வரிகள் 88-90)

எனப் பரவியுள்ளார்; தம் திருவாலங்காடு திருப்புகழில் அருணகிரிநாதர் "தகரேறங்கார் அஜமேவிய குக" எனக் குறிப்பிட்டுள்ளார்.

ஆகமங்களில் முருகனுக்கு ஊர்தியாக மயில், யானை, சிங்கம் ஆகியவை விதிக்கப்பட்டுள்ளனவே யன்றி, ஆடு கூறப்படவில்லை. திருக்கோயில்களில் முருகனது திருமுன் முன்பு மயில்தான் பொதுவாகக் காணப்படுகிறது. சில இடங்களில் யானையும் உள்ளது. புகழ்மிக்க திருத்தணிகை, உத்தரமேரூர், ஆனூர் ஆகிய தலங்களை எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம்.

திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயிலிலும், சிவகங்கையை அடுத்துள்ள திருமலைக் குடைவரைக் கோயிலிலும் முருகனது புடை சிற்பங்களுக்குக் கீழே உள்ள பீடத்தில் ஆடு உருவம் உருவாக்கப்பட்டுள்ளது. மயிலைப் போன்று ஆடு ஊர்தியுடன் கூடிய முருகனது

அரிய திருவுரு சென்னையை அடுத்துள்ள திருப்போரூரில் காணப்படுகிறது.

சமரபுரி எனப்பெறும் இந்தத் திருத்தலம் அருணகிரி நாதரின் நான்கு திருப்புகழ்ப் பாடல்களைப் பெற்றது. மேலும் இந்தத் திருக்கோயிலைத் திருப்பணி செய்த ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சுவாமிகளால் "திருப் போரூர்ச் சந்நிதி முறை" (726 பாடல்கள்) பாடப் பெற்றது.

இந்தத் திருக்கோயிலின் இரண்டாவது திருச் சுற்றில் நுழைவாயிலை அடுத்து இந்த வடிவம் உள்ளது. நாலு கைகள் கொண்ட இந்த வடிவின் பின்வலக்கையில் வச்சிரமும், பின்இடக்கையில் சக்தியும் இருக்க, முன் வலக்கை அபய முத்திரையிலும், முன்இடக்கை வரத முத்திரையிலும் அமைந்துள்ளன. நின்ற திருக்கோலத் தில் உள்ள இந்த வடிவின் பின்னால் ஆடு மிடுக்குடன் காணப்படுகிறது. இதன் ஆற்றலைத் "திருப்போரூர் முருகன் பிள்ளைத் தமிழில்" ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சுவாமிகள்.

"காரா ! திசைமலி போரார்களிறு
  கலங்கிப் பிளிறிடவே
கனகநிறத்துத் திருகுமருப்பிற்
  கனிசின மொடுமோதிப்
பேரா யிரமுடி யுரகன் நெளிக்கப்
  பின்போய் முன்னோடிப்
பேசரு வடவரை குலவரை திசைவரை
  பெயரும் படித்தாவிப்
பார்சூ ழேழ் கடல் குமுறத்துள்ளிப்
  பனி வானை மோதிப்
பகரரு கோளகை சாடிப் பீடுறு
  படிவரு தகருடை யோய்" (24)

என் வெகு அழகாக அருளியுள்ளார். எட்டுத் திசைகளிலும் உள்ள யானைகள் கலங்கிப் பேரொலி செய்யத் தன் பொன்னிறமான திருகிய கொம்பினால் சினத்துடன் தாக்குகிறது; இது பின்னும் முன்னும் ஓடுவதால், ஆயிரம் பணா முடிகளைக் கொண்ட ஆதிசேடன் நெளிகிறான்; மேரு மலையும் ஏனைய மலைகளும் நிலைபெயருமாறு அவற்றின் மேல் தாவுகிறது; உலகைச் சூழ்ந்துள்ள ஏழு கடல்களும் பேரொலி செய்ய இது துள்ளிக் குதிக்கிறது; விண்ணுலகத்தைத் தாக்குகிறது; அண்ட கோளத்தை அழிக்கிறது; இங்ஙனம் இறுமாந்து வரும் ஆட்டினை ஊர்தியாக உடையவன் என்பதாம்.

இந்தத் திருவுரு வேறு எங்கும் காண்டற்கு அரிய ஒன்றாம்.



## "குறு முனிக்குந் தமிழ் உரைக்கும் குழவி"
### (திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ்)

தமிழர்கள் இறைவனது பல்வேறு திருவுருவங்களை வணங்கிய போதிலும் முருகப் பெருமானிடத்துத் தணியாத காதல் கொண்டவர்கள். அவன் தான் தமிழ்க் கடவுள் என்பப் போற்றி வணங்கப்படுகிறான்:

"செந்தமிழ் அங்கவாயா"

"தமிழ் விரக"

"பாடல் முக்யமாது தமீழ் தமீழிறை"

என்பன அருணகிரிநாதரின் திருவாக்குகளாம். இறை வடிவங்கள் பலவற்றில் வேலோன் எவ்வாறு தமிழ்க்

கடவுள் என்று தொழப்படுகிறானோ, அவ்வாறு முனி புங்கவர்கள் பலரில் அகத்திய முனிவன் தமிழ் முனிவன் என்று போற்றப்படுகிறான்.

"வண்டமிழ் மாமுனி" (2-23-5)

"சந்த நூற்றமிழ்த்தாபதன் (2-23-15)

"முத்தமிழ் தேர்முனி" (2-23-27)

எனப் பலவாறாகக் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் தம் கந்தபுராணத்தில் குறிப்பிட்டுள்ளார்; அகத்திய முனிவன் சிவனுக்கு ஒப்பானவன். பண்டைத் தமிழ் இலக்கியமான தொல்காப்பியத்தை இயற்றிய தொல் காப்பியருக்கு ஆசிரியன்.

தமிழ் முனிவனாம் அகத்தியனுக்குத் தமிழ்க் கடவுளாம் கந்தப் பெருமான் தமிழ் கற்பிப்பது எவ்வளவு பொருத்தம்! இதைத் திருவருட்செல்வர்கள் தம் திருப்பாடல்களில் பலபட விதந்து உரைத் துள்ளார்கள்.

"அரசறிய வாமனமுனிக்கு ஒரு தமிழ்த்ரயமும்
அபரிமிதமாக விவரித்த கடவுட் புலவன்"
(திருவகுப்பு–6–வரி 8)

என்றும்,

"மொழி
தித்திக்கு முத்தமிழினைத்
தெரியவரு பொதிகை மலை முனிவர்க் குரைத்தவன்"
(சேவல் விருத்தம்–4)

என்று அருணகிரிநாதரும்,

"தவமெனும் பெருமையுள குறியவன் பெற
வினிய தமிழ்நூல் உரைத்த சதுரா" (100)

என மார்க்க சகாயதேவரும் தம் "திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழிலும்"

"கும்பமுனி இரு செவி மனத்தொடு சரீரமுங்
குளிர முத்தமிழின் இயல்பும்
.........................................................
......................குமரகுருநாதனே
திருவாய் மலர்ந்து உரை செய் (90)

எனக் கவிராச பண்டாரத்தையாவும் தம் "திருமலை முருகன் பிள்ளைத் தமிழிலும்"

"மங்காத செந்தமிழ் குறுமுனிக்கு
உபதேசம் வைத்த மெய்ஞ்ஞான குருவே" (75)

எனக் 'குமரேச சதகத்திலும்' குறிப்பிட்டுள்ளன வற்றைச் சான்றுகளாகக் கூறலாம். இதனால்தான் அறுமுகச் செவ்வேளை அருணகிரிநாதர் "தமிழுக்கினிய குருகுமர" என்று பாராட்டியுள்ளார்.

குறுமுனிக்குக் குமரன் தமிழ் கற்பிக்கும் அரிய திருவுரு சென்னையை அடுத்துள்ள திருப்போரூரில் உள்ளது. திருக்கோயிலின் முகமண்டபத்தை அடுத் துள்ள மண்டபத்தில் உள்ள தூண்களில் முதல் வரிசையில் முகமண்டபத்தை ஒட்டிய தூணில் இந்த வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது. இந்த வடிவை அமைப்பது பற்றி ஆகமங்களில் விதிகள் ஏதும் இருப்ப தாகத் தெரியவில்லை.

நான்கு கைகள் உள்ள உமை மைந்தன் இருக் கையில் கால்களை ஒன்றின்மேல் ஒன்று போட்ட நிலையில் உட்கார்ந்துள்ளான். ஆசிரியன் என்ற நிலைக்கு ஏற்ப இவனது பின் வலக்கையில் அக்க மாலையும், பின் இடக்கையில் கமண்டலமும் உள்ளன. முன்வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கை கத்ய வலம்பித முத்திரையிலும் காணப்படுகின்றன. இவனது இருக்கைக் கீழ் மயில் தன் தோகையை விரித்தநிலை அமைக்கப்பட்டுள்ளது. வடிவேலனது வலக்

கால் மயிலின் தலை மேலும், இடக்கால் அதன் தோள் மீதும் காணப்படுகின்றன. இவனுக்கு அருகில் கடல் குடித்த குறுமுனி இரு கைகளையும் கூப்பிய நிலையில் உருவாக்கப்பட்டுள்ளான்.

இந்தத் திருவுரு,

"கரகமல முடிமிசை குவித்து மனமுருகி
　　யிருகண்கள் நீர் நின்று சொரியக்
கடலேழும் அங்கையிற் கொண்ட குறுமுனியன்று
　　கயிலங் கிரிமேவிச்
சரணதாமரை தொழ மொழிந்த கரனூராளி" (86)

என மார்க்க சகாயத்தேவர் தம் "திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழில்" கூறியிருப்பதற்கு ஓர் இலக்கியமாகத் திகழ்கிறது என்னலாம்.

ஆகமங்களில் விதிக்கப்படாத அரிய திருவுருவம் இது.

---

## "துணிநடம்புரி சமர முருகன்"
### (வேல் விருத்தம்)

இறைவன் தன் முடிவிலாற்றலை உணர்த்தும் அரிய பெரிய செயல்களைச் செய்தபின் அதன் எக்களிப்பில் நடனமிடுகிறான். எடுத்துக்காட்டாக அமரர்களின் வேண்டுகோளுக்கு இணங்கச் சிவபெருமான் முப்புரங்களை எரித்த பின் அதன் வெற்றிக் களிப்பில் "கொடுகொட்டி" என்ற நடனம் ஆடினான். இதை இளங்கோவடிகள் தம் சிலப்பதிகாரத்தில்,

"பாரதி யாடிய பாடிய அரங்கத்துத்
திரிபுரம் எரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப
உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும்"
(6-வரிகள் 39 43)

என்பர்; ஊழிக்காலத்து அவன் ஆடிய நடனம் சங்காரக் கூத்து எனப்படும். மூவுலகங்களையும் தன் தாமரைத் தாள்களால் அளந்த பெருமிதத்தில் திருமால் நடனமாடினான். இதை,

"குடமாடி இம்மண்ணும் விண்ணும்
குலுங்க உலகளந்து
நடமாடிய பெருமான்" (திரு. 38)

என நம்மாழ்வார் போற்றியுள்ளார்;

முருகப் பெருமானும் பெருவலி படைத்த சூரபன்மனாகிய மாமரத்தைத் தன் சத்ரு சங்காரவேலால் இரு கூறாகப் பிளந்தபின் அந்த வெற்றிக்களிப்பில் துடி என்ற உடுக்கையை ஒலித்து நடனமாடினான். இதைத் துடிக் கூத்து என்பர்; இளங்கோவடிகள் தம் "சிலப்பதிகாரத்தில்"

"மாக்கடல் நடுவண்
நீர்த்திரை அரங்கத்து நிகர்த்து முன்தோன்ற
சூர்த்திறங் கடந்தோன் ஆடிய துடியும்"
(6-வரிகள் 49-51)

எனக் குறிப்பிட்டுள்ளார். அவுணர்கள் தாரகாரியுடன் நடந்த போரில் ஆற்றாது தம் படைக்கலங்களைக் கீழே போட்டு விட்டு வருத்தம் அடைந்தனர். அவர்களது ஆற்றாமையை எள்ளி நகைக்கும் வகையில் வடிவேலன் குடையைப் பக்கங்களில் சாய்த்துச் சாய்த்து நடனமாடினான்; இது குடைக் கூத்து எனப்படும். இதனால்

அவன் 'சத்ர நடனமூர்த்தி' என்று சிறப்பிக்கப் பெறுகிறான். இதனை இளங்கோவடிகள் தம் சிலப்பதிகாரத்தில்,

"படைவீழ்த்து அவுணர் பையுள் எய்தக்
குடைவீழ்த்து அவர்முன் ஆடிய கூத்தும்"
(6-வரிகள் 52-53)

என்பர். ஆறுமாமுகன் ஆடிய இந்தக் கூத்துக்களேயன்றி, குரவைக்கூத்து, வெறிக் கூத்து, வள்ளிக்கூத்து என்பனவும் அவனுடன் தொடர்பு கொண்டனவாம்,

அறுமுகச் செவ்வேள் கூடிய நடனத்தை அருணகிரிநாதர் தம் "திருவகுப்பில்"

"முதலி பெரியம்பலத்துள் வரையசல மண்டபத்துள்
முநிவர் தொழ அன்று நிர்த்தம் ஆடினான்
(17-வரி 16)

எனப் போற்றியுள்ளார். சிதம்பரத்தைப் பற்றிய தம் "இரச பாகொத்த மொழி" "சகடமுந்துங் கடலடைந்துங், "மகரமொடுறு குழையோலை" ஆகிய திருப்புகழ்ப் பாடல்களில் முருகப்பெருமானது நடனத்தைச் சொல்லோவியமாகத் தீட்டியுள்ளார். தன் நடனத்தின் இயல்பைக் கண்டு அன்னை துர்க்கையே அஞ்சும் வகையில் மயில் மீது நடனம் புரியவல்லவன் அறுமுகப் பெருமான் என்பர் அருணகிரிநாதர்.

"சதிமுழவு பலவும் இருபக்கத்து இசைப்பமுது
சமயபயிரவி இதயஉட்கி பிரமிக்க உயர்
தணிகை மலைதனில் மயிலின்
நிர்த்தத்தின் நிற்கவல பெருமாளே"

திருவண்ணாமலையில் சம்பந்தாண்டானுடன் வாதிட்டபோது முருகப் பெருமனை "அதலசேட னாராட" என்ற திருப் புகழில் "மயிலுமாடி நீயுமாடி வரவேணும்" எனவேண்டுகிறார். தான் நற்பேற்றினை அடைய

ஞான நடனம் புரிந்து வரவேண்டும் எனவும் வேண்டு கிறார்.

> "காரண மதாகவந்து புவிமீதே
> காலன் அணுகாது இசைந்து கதிகாண
> நாரணனும் வேதன்முன்பு தெரியாத
> ஞான நடமே புரிந்து வருவாயே"

என்பது அவரது திருவாக்காம். இவன் இவ்வாறு நடனம் புரிவது தன் அடியார்களின் கொடியவினைகளை அறுக்கத்தான் என்று பகழிக் கூத்தர் தம் 'திருச் செந்தூர்ப் பிள்ளைத் தமிழில்' பாராட்டியுள்ளார்;

> "அடியவர் கொடுவினை துகள்பட நடமிடும்
> அழகிய சரணம் அளித்த வரதனை" (4)

முருகப் பெருமானது நடனத் திருக்கோலத்தைப் பற்றி ஆகமங்களில் விதிகள் இருப்பதாகத் தெரிய வில்லை. சிவாலயங்களில் ஆட வல்லான் வடிவமும், திருமால் திருக்கோயில்களில் நர்த்தன கிருஷ்ணன், காளிங்க நடனமூர்த்தி ஆகிய வடிவங்கள் சாதாரண மாகக் காணப்படுவது போன்று, கந்தப் பெருமானது நடனத் திருவுரு பொதுவாக இல்லை. ஒரு சில இடங் களில் உள்ளவற்றில் சென்னையை அடுத்துள்ள திருப் போரூரில் உள்ள வடிவம் ஒன்று.

திருக்கோயிலில் உள்ள முகமண்டபத்தை அடுத் துள்ள மண்டபத்தில் உள்ள தூண்களில் மூன்றாவது வரிசையில் முகமண்டபத்தை ஒட்டிய தூணில் முருகப் பெருமானது நடன வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது; நடன நிலையில் உள்ள இவனுக்கு ஐந்து தலைகள், பன்னிரண்டு கைகள் காணப்படுகின்றன. இவனது முன் வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கை கத்யவலம்பித முத்திரையிலும் உள்ளன: இவனுக்கு இருபுறமும் இரு முனிவர்கள் அமைக்கப்பட்டுள்ளனர்;

இந்தப் பெருமானது அரிய வடிவங்கள் பல வற்றைக் கொண்ட இந்தத் திருக்கோயிலில் இதுவும் ஒன்று.



## ''தெய்வப் பிடியுங் குறக்கொடியுஞ் சேரும் பெருமாள்''

### (திருமலை முருகன் பிள்ளைத் தமிழ்)

உலகில் ஆருயிர்கள் திருமணம் புரிந்து, மனையறம் காக்க வேண்டும். இல்லையெனில் அவை யோகநிலை எய்தும். அவ்வாறு அவை யோக நிலையடைந்தால், அவை பல்கிப் பெருகி வாழையடி வாழையாகத் தழைக் காது தடுமாற்றமும் பெருங் குழப்பமும் ஏற்பட்டுவிடும். இதைத்தான் மணிவாசகப் பெருந்தகையார்,

''தென்பால் உகந்தாடுந் தில்லைச் சிற்றம் பலவன்
பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பால் உகந்திலனேற் பேதாய் இரு நிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர் காண் சாழலோ.'' (9)

என்றும்

''மலையரையன் பொற்பாவை
வாணுதலாள் பெண் திருவை
உலகறியத் தீ வேட்பின்
என்னுமது என்னேடீ
உலகறியத் தீவேளா
தொழிந்தனனேல் உலகனைத்துங்
கலை நவின்ற பொருள்களெலாங்
கலங்கிடுங்காண் சாழலோ'' (13)

என்றும் அருளியுள்ளார். இவ்வாறின்றி உலகல் தொடர்ந்து நடைபெற வேண்டியதைக் குறிப்பில் உணர்த்தவே இறைவன் அன்னையுடன் காணப்படு கிறான். திருமால் மலர் மகள் மற்றும் மண் மகளுடனும், சிவபெருமான் அன்னை பராசக்தியுடனும் இருப்பதை எடுத்துக் காட்டுகளாகக்கூறலாம். வேற்படை விமலனாம் முருகப் பெருமானும் வேடமங்கை, வேழமங்கை இரு பாலும் புடைசூழக் காட்சி அளிக்கிறான்.

இறைவனது சக்திகள் மூன்று என்பர் ஆன்றோர். அவை இச்சாசக்தி, கிரியா சக்தி, மற்றும் ஞானசக்தி என்பனவாம். இச்சாசக்தி என்பது அன்பும், அதனால் மனத்தில் ஏற்படும் உணர்ச்சிகளுமாம். கிரியா சக்தி என்பது தன் விருப்பத்திற்கேற்ற வடிவைக் கொண்டு தான் எண்ணியதை முடிக்கும். ஞானசக்தி என்பது நெடுந்தொலைவில் உள்ள நுண் பொருள்களை உணர்த்தல், எல்லா ஒலிகளையும் கேட்டறிதல், கலைகள் யாவற்றையும் உணர்தல் என்பதாம். முருகப் பெருமானது வேல் ஞான சக்தியாகவும், வள்ளி இச்சா சக்தியாகவும், தெய்வயானை கிரியா சக்தியாகவும் போற்றப்படுகின்றனர்.

அகம், புறம் என வாழ்க்கையை இரு பிரிவுகளாகக் கொண்ட பழங்காலத் தமிழர்கள் அகத்தைக் களவியல், கற்பியல் என மேலும் இரு பகுதிகளாகப் பிரித்தனர். வேழமடந்தையான தெய்வயானையை முருகன் திருமணம் புரிந்தது கற்பியலுக்கு ஓர் எடுத்துக்காட்டு. என்றால், அவன் வேடமடந்தையான வள்ளியைக் கடி மணம் செய்தது களவியலுக்குச் சான்றாகத் திகழ்கிறது. தெய்வயானை வானவர் கோன் புதல்வி; வள்ளி மானிடப் பெண். இவர்கள் இருவரையும் முருகப் பெருமான் தன் துணைவியர்களாகக் கொண்டான் என்றால், அது இறைவன் திருமுன் உயர்ந்தோர், தாழ்ந் தோர் என்ற வேறுபாடு கிடையாது; யாவரும் ஒன்றே

என்பதை உணர்த்துகிறது. தெய்வக் கோமானின் மகளை முருகப் பெருமானுக்கு வானவர்கள் திருமணம் செய்து வைத்தனர். ஆனால் ஆறுமாமுகன் வேடுவனாக மாமானின் மடந்தையைத் தேடித், தினைப் புனம் நாடி, வேங்கை மரமாக மாறி, முதுமை வடிவம் எடுத்துத் தன் துணையாகக் கொள்கிறான். இது ஒரு சில பரிபக்குவம் அடைந்த ஆன்மாக்கள் இறைவனைத் தாமாகச் சென்று அடைவதையும், வேறு சிலவற்றை இறைவன் தானே தேடிச் சென்று வலிந்து ஆட் கொள்வதையும் தத்துவ ரீதியாகக் குறிப்பிடுவதாகக் கொள்ளப்படுகிறது.

இத்தகைய சிறப்புகளை உடைய முருகப் பெருமானது துணைவியர்களை எவ்வாறு அமைக்க வேண்டும் என்று ஆகமங்கள் விதித்துள்ளன. வள்ளி வலப் பக்கத்திலும், தெய்வயானை இடப் பக்கத்திலும் இருக்க வேண்டும். வள்ளியின் நிறம் கறுப்பு; அவளது இடக்கையில் தாமரை மலர் இருக்க, வலக்கை கத்ய வலம் பித முத்திரையில் அமைக்கப்பட வேண்டும். தெய்வயானையின் நிறம் சிவப்பு; அவளது வலக்கையில் நீலோற்பல மலர் காணப்பட, இடக்கை கத்ய வலம் பித முத்திரையில் இருக்க வேண்டும். இருவரும் திரிபங்க நிலையில் நின்றபடி அமைக்கப்பட வேண்டும்.

குறக்கொடி முருகப் பெருமானுக்கு வலப் பக்கத்திலும், தெய்வ மடப்பிடி இடப் பக்கத்திலும் தான் பொதுவாகக் காணப்படுவர். இதினின்றும் வேறுபட்ட அமைப்பு பெரும் பேடு அருள்மிகு முத்துக் குமாரசாமி திருக்கோயிலில் உள்ளது.

செங்கல்பட்டு மாவட்டத்தில் பொன்னேரியினின்றும் ஏறக்குறைய ஏழு கி. மீ. தொலைவில் பெரும் பேடு உள்ளது. குமாரசாமி மேடு என்று முன்னாளில் அழைக்கப்பட்ட இடத்தில் 1976ல் பூமியைத் தோண்டிய

போது முருகப் பெருமாள் மற்றும் அவனது இரு துணைவியர் ஆகியோரின் திருவுருவங்கள் கிடைத்தன. ஓர் ஆண்டுக்குப் பின் திருக்கோயில் கட்டப்பெற்று, திருக் குடமுழுக்கு செய்யப்பட்டது. சிலைகள் கிடைத்த இடத்தில் தற்போது சிறிய தேர் ஒன்று செய்து வைக்கப் பட்டுள்ளது.

ஏறத்தாழ ஆறு அடி உயரமுள்ள முருகப் பெருமானது நான்கு கைகளில் முன் வலக்கை அபய முத்திரையிலும், முன்இடக்கை கடி முத்திரையிலும் இருக்க, பின்வலக்கையில் அக்கமாலையும், பின் இடக் கையில் கமண்டலமும் அமைக்கப்பட்டுள்ளன. இவனது தலையைக் கிரீடம் அணி செய்கிறது.

முருகப் பெருமானுக்கு வலப் பக்கத்தில் வள்ளிக்குப் பதில் தெய்வயானை அமைக்கப்பட்டுள்ளாள். இவளது தலையில் கிரீடமும், காதுகளில் மகர குண்டலங்களும் காணப்பட, வலக்கை கடி முத்திரையிலும், இடக்கையில் நீலோற்பல மலருக்குப் பதில் தாமரை மலர் உருவாக்கப் பட்டுள்ளன. வள்ளி மாமயிலோனுக்கு இடப்பக்கத்தில் காணப்படுகிறாள். இதளது தலையைக் கொண்டையும், காதுகளை ஓலை அணிகலன்களும் அலங்கரிக்கின்றன. கொண்டையைச் சுற்றி மாலையும், நெற்றியில் குறவர் பெண்கள் அணிவது போன்ற மணிகளான மாலையும் அமைக்கப்பட்டுள்ளன. இவைதான் இந்த வடிவம் வள்ளி என்பதை உறுதி செய்கின்றன. இவளது இரு கைகளில் வலக்கையில் தாமரை மலருக்குப் பதில் நீலோற்பல மலரும், இடக்கை கடி முத்திரையிலும் காணப்படுகின்றன.

இது ஓர் அரிய அமைப்பு மட்டுமன்றி, இந்தத் திருவுருங்கள் எழில் மிக்கனவாகக் காட்சி அளிக்கின்றனு



## ''மரகத மயிலில் அழகுடன் அருணையில் நின்ற கோ'

(திருப்புகழ்)

ஒவ்வொரு இறை வடிவிற்கும் ஒவ்வொரு படைக் கலம் உரியதெனச் சிறப்பாகப் போற்றப்படுகிறது. எடுத்துக்காட்டாக, சிவபெருமானுக்கு மழு, திருமாலுக்குச் சக்கரம், பலராமனுக்குக் கலப்பை ஆகியவற்றைக் கூறலாம். அதே போன்று உமைமைந்தனுக்கு உரிய படைக்கலம் வேல்.' அதனால் வேலன் என்று அழைக்கப்பெறுகிறான். இருப்பினும் அவனுக்கு ஏனைய படைக்கலங்களுடன் வில்லும் ஆகமங்களில் கூறப் பட்டுள்ளது.

ஆகமங்களில் அறுமுகனுக்கு விதிக்கப்பட்ட இரண்டு நான்கு, ஆறு, எட்டு, பத்து; பன்னிரண்டு கைகள் கொண்ட வடிவங்களில் எட்டுக் கைகள் உடைய கிரவுஞ்ச பேதனன், பன்னிரண்டு கைகள் கொண்ட சேனாபதி, சரவணன், சண்முகன் ஆகிய வடிவங்கள் கையில் வில்லை ஏந்தலாம் என்று உள்ளது. ஆறு கைகள் கொண்ட வடிவங்களுக்கு வில் படைக்கலமாக விதிக்கப்பட்டுள்ளது.

வில்லேந்திய முருகனது திருவுருவங்கள் தஞ்சை மாவட்டம் திருவிடைக்கழி, பட்டீசுவரம், சாயாவனம், திருவையாறு மற்றும் செங்கல்பட்டு அண்ணா மாவட்டம் திருப்போரூர், திருவேற்காடு ஆகிய தலங்களில் உள்ளன. ஆனால் அவற்றிற்கெல்லாம் நான்கு கைகள் தாம் காணப்படுகின்றன. சிதம்பரனார் மாவட்டம் கழுகுமலை, தஞ்சை மாவட்டம் கோடிக்கரை, மற்றும் திருவாரூர், தென்னார்க்காடு மாவட்டம் அறையணி நல்லூர் ஆகிய தலங்களில் உள்ள ஒரு தலை ஆறு கைகள்

கொண்ட முருகனுக்கு வில் அமைக்கப்படவில்லை; ஒரு தலை ஆறு கைகளுடன் வில்லேந்திய வேலனது அரிய வடிவம் திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டத்தில் திருவண்ணாமலையில் உள்ளது.

நினைத்தாலே முக்தி தரும் தலமாகப் பரவப்படுவது திருவண்ணாமலை. ஐம்பூத தலங்களில் இது நெருப்புத்தலம் (தேயுதலம்). சிவபெருமானே இங்கு மலையாக இருப்பதாக வணங்கப்படுகிறது. இறைவனைக் கல்வியாலும் செல்வத்தாலும் அடைய இயலாது என்பதை உணர்த்தும் வரலாறு படைத்த தலம்; சம்பந்தராலும் அப்பராலும் பாடப் பெற்ற நடு நாட்டில் உள்ள இருபத்திரண்டாவது தலம்; இறைவன் வல்லாள மன்னனுக்கு மகனாகத் தோன்றியமையால், இறைவன் நீத்தார் கடன் கழிக்கும் திருவிழாக் கொண்டாடும் பெருமை உடையது. இவ்வாறு இதன் பெருமைகளை அடுக்கிக் கொண்டே போகலாம் என்றாலும், தமிழ் மொழிக்குப் பக்தி இலக்கியத்தில் தனிச் சிறப்பு ஏற்படக் காரணமான தலம் என்ற பெருமையினைச் சிறப்பாகக் கருதலாம். அது வடமொழி விரவிய தித்திக்கும் செந்தமிழில் சந்தக் கவிபாடித் தனக்கென ஒரு வழிவகுத்துக் கொண்ட அருணகிரிநாதரை ஆட்கொண்டது; முருகன் தேமதுரத் திருப்புகழின் முதல் அடியை எடுத்துக் கொடுத்தது; அருணகிரிநாதர் கிளி வடிவில் இங்கு இறைவனை அடைந்ததாகப் போற்றப்படுவது ஆகியவையாம்.

இங்குள்ள அருணாசலேசுவரர் கோயிலில் அருணகிரி நாதர் சம்பந்தாண்டனுடன் வாதிட்டு அறுமுகனை அழைத்த கம்பத்து இளையனார் சந்நிதியில் கருவறையின் நுழைவாயிலுக்கு இடதுபுறம் இந்த அரிய வடிவம் காணப்படுகிறது. ஒரு தலை, ஆறு கைகள் உடைய இந்த வடிவில் வலக் கைகளில் சக்தி, அம்பு மற்றும் கத்தி இருக்க, இடக்கைகளில் வச்சிரம், வில்,

மற்றும் கேடயம் அமைக்கப்பட்டுள்ளன. இந்த வடிவின் பின்புறத்தில் உள்ள மயிலின்மீது இவனது வலக்கால் வைக்கப்பட்டுள்ளது.

அரிய வடிவம் மட்டுமன்றி, கலை அழகுடன் உருவாக்கப்பட்டுள்ள இந்தத் திருவுரு காணத்தக்க ஒன்றாம்.

## "பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவன்"
## (பரிபாடல்)

முருகப் பெருமான் என்றாலே அவனது வேலும் மயிலும் நினைவிற்கு வருவது இயற்கை. திருமலை, திருப்பரங்குன்றம், திருப்போரூர் போன்ற ஒரு சில தலங்களில் அவனுடன் ஆடு காணப்படுகிறது. திருத்தணிகை, உத்தரமேரூர், ஆனூர் போன்ற பதிகளில் யானை மூலவருக்கு எதிரில் அமைக்கப்பட்டுள்ளது. கடம்பனுக்கு மயில், ஆடு ஊர்திகள் என்பதற்குப் புராண வரலாறுகள் உள்ளன. ஆனால் யானை அவனது ஊர்தி என்பதற்குப் புராணத்தில் வரலாறு இருப்பதாகத் தெரியவில்லை.

சங்க கால இலக்கியங்களில் வேற்படை விமலனுக்கு யானை ஊர்தி என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. எடுத்துக்காட்டாக, முருகனைப் பாட்டுத் தலைவனாகக் கொண்ட திருமுருகாற்றுப்படையில் திருச்சீரலைவாய் என்ற பகுதியில் நக்கீரனார்,

> "வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
> வாடா மாலை ஓடையொடு துயல்வரப்
> படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக்
> கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பின்
> கால்கிளர்ந்தன்ன வேழமேல் கொண்டு"
>
> (வரி 78-82)

என முருகன் யானை மீது வருவதை அழகுபடக் கூறியுள்ளார். கூறிய தோட்டியால் ஏற்பட்ட வடு உடைய நெற்றியில் பொன்னரிமாலை பட்டத்துடன் அசைய, மணிகள் இருபுறமும் ஒலிக்க, யானை காற்றெனக் கடுகி வருகிறது. யமனைப் போன்ற தடுக்கலாற்றாப் பெருவலி படைத்த அதன்மீது முருகன் ஏறி வருகிறான் என்பதாம். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை ஆசிரியர் குமட்டூர்க் கண்ணனார் பாடிய ''பதிற்றுப் பத்து'' இரண்டாம் பாட்டில்,

> ''சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
> கடுஞ்சின விறல்வேள் களிறு ஊர்ந்தாங்கு (வரி 4-5)

எனச் சூர்மாவைத் தடிந்த புகழும், சினமும், வீரமும் மிக்க முருகன் யானை மீது வருவதைப் போன்று என நெடுஞ்சேரலாதனைச் செவ்வேளுடன் ஒப்பிட்டுள்ளார்; பரிபாடல், புறநானூறு ஆகிய நூல்களிலும் இத்தகைய குறிப்புகள் காணப்படுகின்றன.

''குமார தந்திரம்'' என்னும் நூலில் விதிக்கப்பட்ட வேலனின் பதினாறு திருவுருவங்களில் கஜவாகனன் ஒன்று. அந்த நூலின் படி அது ஒரு தலை, இரு கண்கள், நான்கு கைகள் கொண்டது. இடக்கை ஒன்றில் கோழியும் மற்றொன்று வரத முத்திரையிலும் இருக்க, வலக்கை ஒன்றில் சக்தியும், மற்றொன்று அபயமுத்திரையிலும் அமைக்கப்படவேண்டும்.

யானை மீது அமர்ந்துள்ள முருகனது திருவுரு ஒரு சில கோயில்களில் காணப்படுகிறது. அவற்றில் ஒன்று சிதம்பரத்தில் உள்ளது. சைவர்களுக்குக் கோயில் என்றாலே சிதம்பரம் என்றால், அதன் பெருமை அளவிடற்கரியது. சைவ, வைணவ அருட்செல்வர்களால் போற்றி வணங்கப்பட்ட திருத்தலம் ஐம்பெரும் பூதத் தலங்களில் இது ஆகாயத்தலம். ஐம்பெரு நடன சபைகளில் இது பொன்னம்பலம். சோழ, பாண்டியப்

பேரரசர்கள் பலரால் திருப்பணிகள் பல செய்யப்பட்ட பதி. கொங்கு நாட்டுத் தங்கத்தால் வேயப்பட்ட விமானத்தைக் கொண்டது. இதன் சிறப்புகள் சொல்லுந்தரமன்று.

இங்குள்ள கீழ்க் கோபுரத்தில் வெளிப்புறத்தில் வாயிலுக்கு வலப்புறம் உள்ளடங்கி இந்தத் திருவுரு காணப்படுகிறது. யானை மீது உட்கார்ந்துள்ள இவனது நான்கு கைகளில், பின் இரு கைகளில் சக்தியும் வச்சிரமும் இருக்க, முன் இருகைகள் அபய மற்றும் வரத முத்திரைகளில் உள்ளன. ஆகமத்தில் விதிக்கப் பட்ட கோழிக்குப் பதிலாக வச்சிரம் உருவாக்கப் பட்டுள்ளது இங்கு காணப்படும் வேறுபாடாகும்.

கலை அழகுடன் திகழும் வடிவம் இது.

---

# ''வெல்போர்ச் சேஎய்''

## (மலைபடுகடாம்)

''முருகு'' என்ற சொல்லுக்குச் சொல்லப்படும் பல பொருள்களில் இளமை என்பது ஒன்று. எனவே அருணகிரிநாதர் முருகப் பெருமானை:

''என்றும் இளையோனே''

என்று அழைக்கிறார். இவன் ''சேய்'' என்றும் இலக்கியங்களில் குறிப்பிடப்படுகிறான். இளவயதினரைக் குமரன் என்பர். என்றும் இளையோனாம் முருகன் குமரன் என்ற சிறப்புப் பெயரை அடைந்தான்: கு: குற்சிதம், அருவருப்பு, மலம், மாரன்: மரிக்கச் செய்பவன். எனவே குமரன் என்றால் ஆன்மாக்களின் மலத்தை அழிப்பவன் என்பது தத்துவ ரீதியாகப் பொருள் கொள்ளப்படுகிறது. ஆன்மாக்கள் இறைவனை வணங்குவதன் முக்கிய குறிக்கோள் ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மலங்கள் அழிக்கப்பட்டு அந்தமில் பேரின்பம் அடைய வேண்டும் என்பதே. எனவே குமரன் என்ற சொல் முருகப் பெருமானது இளமைப் பொலிவினை மட்டுமன்றிச் சிறப்புப் பண்பையும் உணர்த்துகிறது.

''குமார தந்திரத்''தில் விதிக்கப்பட்ட வள்ளி மணாளனது பதினாறு வடிவங்களில் இது ஒன்று. அதன்படி ஒரு தலை, நான்கு கைகள் கொண்ட இந்த வடிவின் வலக்கைகளில் கத்தியும் சக்தியும் இருக்க, இடக்கைகளில் கேடயமும் கோழியும் அமைக்கப்பட வேண்டும். ''ஸ்ரீதத்துவநிதி'' என்ற நூலில் கத்தி கேடயத்திற்குப் பதில் அபய, வரதமுத்திரைகள் கூறப்பட்டுள்ளன.

"குமார தந்திரத்தில்" விதிக்கப்பட்டபடி அமைந்துள்ள வடிவம் கங்கை கொண்ட சோழபுரத்தில் உள்ளது. கி.பி. 1012 முதல் 1044 வரை சோழப் பேரரசனாக விளங்கிய முதலாம் இராசேந்திர சோழன் தன் வடநாட்டு வெற்றியின் நினைவாக நிர்மாணித்தது இது. திருச்சியினின்றும் அணைக்கரை செல்லும் வழியில் ஜெயங்கொண்டத்தை அடுத்து உள்ளது. அக்காலத்திய ஆசியாக் கண்டத்தின் மாபெரும் வல்லரசாக விளங்கிய சோழப் பேரரசின் தலைநகரமாகத் திகழ்ந்த அங்குத் தமிழர்களின் கலைப் பெருஞ் செல்வமாகப் பொலிவுடன் விளங்கும் கங்கை கொண்ட சோழீச்சுரம் என்ற திருக்கோயிலில் இந்த வடிவம் உள்ளது. "அற்புதத் தெய்வம் இதனின் மற்றுண்டே" என இங்கு எழுந்தருளியுள்ள இறைவனைக் கருவூர்த் தேவர் தம் திருவிசைப்பாவில் பரவியுள்ளார்.

ஒரு தலை நான்கு கைகள் கொண்ட குமரனின் பின் வலக்கையில் சக்தியும், முன் வலக்கையில் கத்தியும் அமைக்கப்பட்டுள்ளன. இவை இரண்டும் தற்போது உடைந்த நிலையில் காணப்படுகின்றன. பின் இடக்கையில் கோழியும், முன் இடக்கையில் கேடயமும் உருவாக்கப்பட்டுள்ளன. ஆகமத்தின்படி அமைக்கப்பட்டுள்ள இந்த வடிவம் காண்போர் கண்களையும் கருத்தையும் கவரும் கலை அழகுடன் பொலிகிறது.

குமரன் என்ற முருகப் பெருமானது இந்தத் திருவுரு அரிய கலைப் படைப்பாம்.

## "இரணமுக சண்டமாருத மயிலோன்"
### (திருப்புகழ்)

"திருநயத்தே சேர்ந்தார் தம் தீவினை யெலாம் ஒழியும்
திருநயத்தே சேர்ந்தார் தம் செல்வம் எலாம் பெருகும்
திருநயத்தே சேர்ந்தார்க்குத் திருமுருகன் அருள்
பெருகும்
திருநயத்தே சேர்ந்தாரைத் தேவர் உலகு அமர்த்திடும்"

என்று போற்றப்படும் திரு நயம் என்ற ஊர் தற்காலத்தில் திண்ணியம் என மருவி வழங்கப்படுகிறது. அது இலால்குடி வட்டத்தில் திருச்சியினின்றும் ஏறத்தாழ முப்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. திருச்சியினின்றும் இங்குவர நகரப் பேருந்து வசதி உள்ளது. தேவாரப் பாடல்கள் பெற்ற திருப்பேரன்பில் ஆலந்துறை எனப் பெறும் அன்பில் இங்கிருந்து ஏறக்குறைய ஒன்றரை கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இந்த ஊருக்குத் தென்பால் பல்குனி என்ற ஆறு செல்கிறது. இங்குச் சோழர் காலத்தைச் சார்ந்த சிவனது இரண்டு திருக் கோயில்கள் உள்ளன.

பெரிய நாயகியுடன் கூடிய கோடீசுவரர் எழுந்தருளியுள்ள திருக்கோயிலில் முருகனது திருமுன் தெற்கு நோக்கி உள்ளது. சென்னை மைலாப்பூரில் உள்ள கபாலீசுவரர் கோயிலில் உள்ளது போன்று இங்கும் முருகனது திருமுன் தெற்கு நோக்கி உள்ளது சிறப்பாகக் கருதப்படுகிறது. முற்காலத்தில் சிவனது திருக்கோயிலாக இருந்தது இன்று அருள்மிகு சுப்ரமணிய சுவாமி திருக்கோயில் என்று மகன் பெயரால் அழைக்கப்பட்டு வருகிறது.

முருகன் பொதுவாக மயிலுடன் நின்ற நிலையில் இருப்பான். அவனது இருபுறமும் வள்ளியம்மை மற்றும் தெய்வயானை அன்னை காணப்படுவர். ஒரு சில இடங்களில் அவன் மயில் மீது உட்கார்ந்து இருக்க, இரு துணைவியரும் அவனுக்கு இரு புறமும் நின்றபடி அமைந்து இருப்பர். ஆறு முகங்கள் பன்னிரண்டு கைகள் கொண்ட முருகன் இரு மனைவியருடன் மயில் மீது உட்கார்ந்துள்ள திருக்கோலமும் உண்டு. இந்த வடிவை 'சண்முகன்' என்று 'குமாரதந்திரம்' என்ற நூல் கூறும்.

''குமாரதந்திரம்'' மற்றும் ''ஸ்ரீதத்வநிதி'' என்ற ஆகமங்களில் கூறப்பட்ட முருகனது இருபத்திரண்டு வடிவங்களில் சண்முகன், சிகிவாகனன், தேசிக சுப்ரமணியன் என்ற மூன்று வடிவங்களில் மட்டும் முருகன் மயில் மீது அமர்ந்து இருக்கலாம் என்று விதிக்கப்பட்டுள்ளது. முருகன், வள்ளி மற்றும் தெய்வயானை ஆகிய மூவரும் தனித் தனியாக மயில் மீது உட்கார்ந்து இருக்கலாம் என்று ஆகமங்களில் சொல்லப்பட்டதாகத் தெரியவில்லை.

மயில் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றி எட்டு யுகங்கள் ஆண்ட சூரபன்மாவின் ஒரு கூறு. எனவே அது பேராற்றல் படைத்ததாக இருப்பதில் வியப்பு ஏதும் இல்லை. இதன் ஆற்றலை அருணகிரி நாதர் போன்ற திருவருட் செல்வர்கள் தம் திருப்பாடல் களில் பலவாறாகக் குறிப்பிட்டுள்ளனர். சக்தியைக் குறிக்கும் பாம்பைத் தன் வாயில் அடக்கிய ஆற்றல் மிக்க மயில் மீது இங்கு முருகன் ஆறு தலைகள் பன்னிரண்டு கைகளுடன் சுகாசனத்தில் உட்கார்ந் துள்ளான். அவனது வலக்கைகள் ஐந்தில் சக்தி, சூலம், அங்குசம், அம்பு, வாள் ஆகியவை காணப்பட, இடக் கைகள் ஐந்தில் வச்சிரம், கோழிக் கொடி, பாசம், வில், கேடயம் ஆகியவை உருவாக்கப்பட்டுள்ளன. முன்

இருகைகள் அபய மற்றும் வரதமுத்திரைகளில் உள்ளன; அவனது இருபுறமும் அவனது இரு துணைவியரான வேடமங்கையும், வேழமங்கையும் தனித்தனியாக மயில் மீது உட்கார்ந்து உள்ளனர். இவர்களது இருகைகள் ஒன்றில் மலர் காணப்படுகிறது. இவ்வாறாக இவர்கள் மூவரும் மூன்றும் மயில்கள் மீது உட்கார்ந்துள்ள அரிய அமைப்பு குன்றக்குடித் திருக் கோயிலிலும் காணப்படு கிறது. வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.



## ''தாருகப்பதகன் தன்னைத் தடிந்து அருள் செய்தோன்''

(திருவருட்பா)

வீரத்தின் திருவுருவாகத் தமிழ் மக்களால் போற்றி வணங்கப் பெறும் முருகன் கிரவுஞ்சம் என்ற மலையைப் பிளந்து, சூரபன்மனின் இளவல்களாகிய தாருகன், மற்றும் சிங்க முகனைக் கொன்றது, சூர் மாதடிந்தது ஆகியவை அவனது அளப்பரும் ஆற்றலை உணர்த்து வனவாக உள்ளன. இப்பெருஞ் செயல்களில் கிரவுஞ்ச மலையைப் பிளந்ததைக் கிரவுஞ்சபேதனன் என்ற திருவுருவமாகவும், தாருகனைக் கொன்றதைத் தாரகாரி என்ற வடிவமாகவும் 'குமார தந்திரம்' என்ற நூலில் விதிக்கப்பட்டுள்ள முருகனது பதினாறு வடிவங்களில் இடம் பெற்றுள்ளன, சிங்கமுகனை அழித்ததற்கும், சூர்மா தடிந்ததற்கும் குறிப்பிட்ட வடிவங்களை ஆக மங்கள் விதித்ததாகத் தெரியவில்லை. கிரவுஞ்ச மலையின் ஒரு பகுதியில் அமைந்து இருந்த மாயாபுரியில் தான் தாருகன் வதிந்து வந்தான்; ''தாங்கரும் பெருந்

திறல் தாரகாசுரன்'' எனக் கச்சியப்ப சிவாசாரியரால் குறிப்பிடப்படும் இவன் போரில் திருமாலால் ஏவப்பட்ட சக்கராயுதத்தைத் தன் கழுத்தில் அணியாக ஏற்றவன் என்பதினின்றும் இவனது ஆற்றலை உணரலாம். இவை யாவற்றையும் கருதில் தாருகனுக்கு அளிக்கப்பட்ட சிறப்பு தெரியவரும்.

தாரகாரி என்ற வடிவ அமைப்பிற்கு 'குமார தந்திரம்' என்ற நூலில் விதிகள் ஒருவிதமாகவும், ''ஸ்ரீதத்துவநிதி'' என்ற நூலில் விதிகள் வேறுவித மாகவும் உள்ளன. 'குமாரதந்திரத்தின்'' படி இந்த வடிவிற்கு பன்னிரண்டு கைகள் அமைக்கப்படும். அவற்றில் அங்குசம், கொடி, கத்தி, பாசம், சக்கரம், முசலம், வச்சிரம் மற்றும் கேடயம் இருக்கும். ''ஸ்ரீதத்வ வநிதி'' என்ற நூலின் படி, இந்த வடிவிற்கு ஒரு தலை, மூன்று கண்கள், ஆறு கைகள் உருவாக்கப்படவேண்டும். யானை மீது அமர்ந்துள்ள இவனது வலக்கைகள் இரண்டில் கத்தி மற்றும் சக்தியும், இடக்கைகள் இரண்டில் கேடயமும், அக்கமாலையும் அமைக்கப்பட வேண்டும். ஏனைய வல மற்றும் இடக்கைகள் நிரலே அபய மற்றும் வரத முத்திரைகளில் இருக்கும். 'குமார தந்திரத்தில்' பன்னிரண்டு எனக் கைகளில் எண்ணிக்கை மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளதே தவிரக் தலைகள் எவ்வளவு என்றோ, ஊர்தி எது என்றோ விதிக்கப்பட வில்லை. மேலே குறிப்பிடப்பட்ட இரு நூல்களில் விதிக்கப்பட்டுள்ளவற்றைக் கருத்தில் கொண்டு ஒரு தலை, பன்னிரண்டு கைகளுடன் யானை மீது உட் கார்ந்துள்ள அரிய வடிவம் தஞ்சைப் பெரிய கோயிலில் காணப்படுகிறது.

தமிழகத்தின் தன்னிகரற்ற மன்னன் மாமன்னன் முதலாம் இராசராச சோழனால் கட்டப்பெற்ற கோயில் இது. ''கோயில்களின் சக்கரவர்த்தி'' எனச்

சிற்பக் கலை வல்லுநர்களால் இந்தக் கோயில் புகழப் பெற்றுள்ளது என்பது ஒன்றே போதும் இதன் சிற்பச் சிறப்புகளைப் பறைசாற்ற. இந்தக் கோயிலின் முகப்பில் கேரளாந்தகன் வாயிலைக் கடந்து உள்ளே சென்றால் இராசராசன் திருவாயிலை அடையலாம். இந்த வாயிலுக்கு இடதுபுறம் மேல் பகுதியில் இத்தகைய வடிவங்கள் இரண்டு காணப்படுகின்றன. யானை மீது அமர்ந்துள்ள இந்த வடிவங்களுக்கு ஒரு தலையும், பன்னிரண்டு கைககளும் அமைக்கப்பட்டுள்ளன; கைகளில் உருவாக்கப்பட்டுள்ள படைக்கலங்கள் தெளிவாகத் தெரியவில்லை. ''ஸ்ரீதத்வநிதி'' யில் குறிப்டுள்ளபடி, முன் இரு கைகள் அபய மற்றும் வரத முத்திரைகளில் உள்ளன.

இத்தகைய அரிய படைப்பு வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.



## "அயனைக்கறுவு கோபக்காரன்"

### (திருவகுப்பு)

முருகப் பெருமானது திருவிளையாடல்களில் ஒன்று அகந்தையால் தன்னை வணங்காத அயனைக் குட்டிச் சிறையில் அடைத்து, தானே படைப்புத் தொழிலை மேற்கொண்டது. பிரமசாத்தா எனப்படும் அறுமுகனின் இந்தத் திருவுரு பொதுவாகத் தொண்டை நாட்டிலும் நடு நாட்டிலும் பரவலாகக் காணப்படு கிறது. சோழ வள நாட்டில் தஞ்சாவூர் மாவட்டத்தில் செம்பனார் கோயிலில் உள்ள சிவாலயத்தில் இத்தகு வடிவம் ஒன்று அரிதாக உள்ளது. மேலும் இது ஏனைய பிரமசாத்தா வடிவங்களினின்றும் வேறுபட்டு அமைந் துள்ளது.

"வரையார் சந்தோடகிலும் வருபொன்னித்
திரையார் செம்பொன் பள்ளி" (3)

என்றும்,

"அறையார் புனலோடகிலும் வருபொன்னிச்
சிறையார் செம்பொன் பள்ளி" 4)

என்றும் ஞானவேந்தரால் அருளப்பட்ட இந்தத் தலம் தற்காலத்தில் செம்பனார் கோயில் என்று மக்களால் வழங்கப்பட்டு வருகிறது. மயிலாடு துறையினின்றும் திருக்கடவூர் செல்லும் வழியில் இது அமைந்துள்ளது. தேவாரப் பாடல் பெற்ற காவிரிக்குத் தென்கரையில் உள்ள சிவப்பதிகளில் இது நாற்பத்திரண்டாவது திருத்தலமாகும். இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் "வானவர்க்கும் அறியலாகாத வஞ்சர்" ஆனால் "பத்தர் நெஞ்சுள் தேனும் இன்னமுதுமானார் என இறைவன் அடியார் மாட்டு எத்தகைய அன்புகொண்டவன்

என்பதைத் தாண்டகவேந்தர் வெகு அருமையாக அருளி யுள்ளார்.

இங்குள்ள சிவாலயத்தில் கருவறைக்குப் பின்னால் வேலன் பிரம சாத்தா வடிவில் சுற்றுப்புறத் தெய்வ மாக உள்ளான். இந்த வடிவற்கு ஆகமத்தில் விதிக்கப் பட்டபடி முன் வலக்கை அபய முத்திரையிலும், பின் இரு கைகளில இடக்கையில் அக்கமாலையும் அமைக்கப் பட்டுள்ளன. முன் இடக்கை வரத முத்திரைக்குப் பதில் ஊரு முத்திரையில் இருக்க, பின் கைகள் ஒன்றில் கமண்டலத்திற்குப் பதில் வலக்கையில் சக்தி காணப் படுகிறது.

இந்த வடிவத்தைச் செங்கல்பட்டு அண்ணா மாவட்டத்தைச் சேர்ந்த உத்தரமேரூரில் உள்ள மூலவர் திருவுருவுடன் ஒப்பிட்டால், சில ஒற்றுமை களுடன் சில வேற்றுமைகளும் தெரிய வருகின்றன. உத்தரமேரூர் மூலவர் போன்றே இவனது தலையைக் கரந்த மகுடம் அணி செய்யாது சடாமகுடம் அலங்கரிக் கிறது. எனவே இதையும் கடம்பனது தவக்கோலமாகக் கொள்ளலாம். இந்த வடிவங்களின் முன் இரு கைகள் அபய மற்றும் ஊரு முத்திரைகளில் அமைக்கப் பட்டுள்ளன, உத்தரமேரூர் வடிவத்தின் பின் இரு கைகளில் கமண்டலமும் வச்சிரமும் இருக்க, இங்கு அக்கமாலையும் சக்தியும் காணப்படுகின்றன. பிரம சாத்தா வடிவிற்கு அக்கமாலையும் கமண்டலமும் விதிக்கப்பட்டுள்ளன: உத்தரமேரூரில் கமண்டலம் காணப்பட்டால், இங்கு அக்கமாலை உள்ளது. நான்கு கைகள் கொண்ட முருகப் பெருமானது வடிவிற்குப் பொதுவாகப் பின் இருகைகளில் வச்சிரமும் சக்தியும் அமைப்பது மரபு. உத்தரமேரூரில் வச்சிரம் இருந் தால், இங்கு சக்தி உள்ளது. வேற்றுமையிலும் ஓர் ஒற்றுமை காணப்படுவது வியப்பு அன்றோ!

தவநிலை மேற்கொண்டவர்கள் படைக்கலம் ஏந்தும் வழக்கம் இருந்துவந்தது. எடுத்துக்காட்டாக அருச்சுனன் சிவபெருமானிடம் பாசுபதப் படைக்கலம் பெறத் தவநிலை மேற்கொண்டதை,

''மரவுரியுடையன் சென்னிவகுத்த செஞ்சடையன் தூணிச்
சரமுடன் அங்கிஈந்த தனுவினன் தவத்தின்மேலே
புரிதருமனத்தன் எல்லாப் புண்ணியங்களுக்குத் தானே
உரைபெறு தசரதன் தன்மகனலாது உவமை இல்லான்',
(3-1-29)

என்பர் வில்லிபுத்தூரார். அருச்சுனன் வில், அம்பறாத் தூணியுடன் தவம்புரியச் சென்றான், தவம் புரியும் போது விலங்குகளும் ஏனையோரும் தமக்கு இடையூறு விளைவிக்காது இருக்கத் தவம் புரிவோர் படைக்கலம் ஏந்தினர். எனவே தவநிலை மேற்கொண்ட முருகப் பெருமானும் தன் பின் வலக்கையில் சக்தி என்ற படைக்கலத்தை ஏந்தியுள்ளது சாலப்பொருத்தமே.

தவக்கோலம் பூண்ட பிரமசாத்தா வடிவில் ஓர் அரிய அமைப்பாகத் திகழ்கிறது:



## "ஒற்றியூர் மேய ஒளிவண்ணனார்"
### (அப்பர்)

சிவபெருமானது மகேசுவர வடிவங்கள் இருபத்தைந்து. அவற்றில் ஒன்று தட்சிணாமூர்த்தி. இந்தவடிவம் தெற்கு நோக்கி அமைக்கப்படுவதால் தட்சிணாமூர்த்தி எனப்படுகிறது. இது தமிழில் "தென்முகக் கடவுள்" எனப் பெறும்;

"அறம் பல திறங்கண்டு அருந்தவர்க்கு அரசாய்
ஆலின் கீழ் இருந்த அம்பலவர்" (8)

என்பர் திருமாளிகைத் தேவர் தம் திருவிசைப்பாவில், இங்ஙனம் இவன் சனகாதி முனிவர்களுக்குக் குருமூர்த்தியாகக் கல்லால மரத்தின் கீழ் எழுந்தருளிய காரணம் பற்றி "ஆலமர் செல்வன்" என்றும் போற்றப்படுகிறான். மேலும் இது சிவபெருமானது சங்காரமூர்த்தி முதல் வகைப்படுத்தப்பட்ட ஐந்து பிரிவுகளில் ஒன்று.

இவன் தெற்கு நோக்கி அமர்ந்திருப்பதை நக்கீர தேவநாயனார் தம் "போற்றித் திருக்கலிவெண்பா' வில்,

"தொடுத்து அமைத்த
நாண்மாலை கொண்டணிந்த
நால்வர்க்கு அன்று ஆல்நிழற் கீழ்
வாண் மாலை ஆகும் வகையருளித்—தேன்மாலை
விட்டிலங்கத் தக்கிணமே நோக்கி வியந்த குணம்
எட்டிலங்க வைத்த இறை போற்றி" (வரிகள் 37–39)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

இந்த வடிவம் கோயில்களில் கருவறையின் வெளிப்புறச் சுவரில் தெற்கு நோக்கி உள்ள புரையில்

அமைக்கும் மரபு பண்டைக் காலந்தொட்டுப் பின்பற்றப் பட்டு வருகிறது. மேலும் கருவறையின் மேலே உள்ள விமானத்திலும் தெற்கு நோக்கி இந்த வடிவம் அமைக் கப்பட்டு வருகிறது. இங்குள்ள வடிவங்கள் பொதுவாக இரண்டு அல்லது இரண்டரை அடி உயரம்தான் இருக்கும். மிகப் பெரிய அளவிலான வடிவம் சென் னையை அடுத்துள்ள திருவொற்றியூரில் உள்ளது.

தொண்டை நாட்டுத் (தேவாரப் பாடல் பெற்ற) சிவப்பதிகளில் இருபகாவது தலம் திருவொற்றியூர். மூவராலும பாடபெற்ற பெருமை உடையது. சுந்தரர் சங்கிலியாரை மகிழ மரததடியில திருமணம் செய்த பதி. திருவிளக்குத் தொணடு புரிந்த கலிய நாயனாா பேறு பெற்ற தலம். பல இடங்களில் அலைந்து இந்தப் பேய்க் கரும்பு இனிக்கப் பட்டினத்தடிகள் இறைவன் திருவடி நிழலை அடைநத பதி. இரண்டாம இராசராசன், மூன்றாம் குலோததுங்கன் ஆகிய சோழப் பேரரசர்கள் இங்கு நடைபெற்ற திருவிழாக்களில் கலந்து கொண் டனர் என்பதாகத தெரிகிறது இத்தகைய பல சிறப்பு களைக் கொணட இந்தக் கோயிலுக்கு வெளியில் உள்ள மணடபத்திற்கு எதிரில் இநத அரிய கலை வடிவம காணப்படுகிறது.

ஏனைய இடங்களில் உள்ளன போலன்றி இங்குள்ள வடிவம் ஏறத்தாழ ஆறு அடி உயரம் உடையது. சனகாதி முனிவர்கள் புடைசூழ இருக்கும் இந்த வடிவத்தின் காலடியில் முயலகன் உருவாக்கப்பட்டுளளான் நான்கு கைகள் கொண்ட இவனது பின வலக்கையில் பாம்பு இருக்க, பின் இடக்கையில் உள்ளது சரியாகத் தெரிய வில்லை. முன் வலககை அபய முத்திரையிலும், முன் இடக்கை ஆசி முத்திரையிலும் உள்ளன. முனிபுங்க வர்களுக்கு ஞானத்தை உணர்த்தும் வடிவம் இது; எனவே இதன் முன் வலக்கை சின் முத்திரை அல்லது ஞான முத்திரையில்தான் பொதுவாக ஆகம விதிகளின்

படிக் காணப்படும்; ஆனால் இங்கு ஏனைய இறை வடிவங்களுக்கு உள்ளது போன்று இதன் முன் வலக்கை அபய முத்திரையில் உள்ளது முக்கிய வேறுபாடாகும். மேலும் முன் இடக்கை ஆசி முத்திரையில் உருவாக்கப் பட்டிருப்பதும் அரிய அமைப்பாகும்.

கலை அழகுடன் உருவாக்கப்பட்டுள்ள இந்தத் திருவுரு காண வேண்டிய ஒன்றாம்.

---

## "நால்வர்க்கு ஆலின் கீழ் உரைத்த அறவன்"

(சுந்தரர்)

சிவபெருமானின் வடிவங்கள் ஐந்து வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று யோகத்தையும், ஞானத்தையும், இசையையும் கற்பிக்கும் ஆலமர் செல்வன் வடிவம். இந்த வடிவினை நான்கு வகைகளாக அமைக்க ஆகமங்கள் விதித்துள்ளன. அவை யாவன:-

1) **யோக தட்சிணாமூர்த்தி:** இதில் மூன்று வகைகள் சொல்லப்பட்டுள்ளன. அ) இரு கால்களும் பத்மாசனத்தில் இருப்பது போன்று இருத்தல்; ஆ) உதிகுடி இருக்கையில் அமர்ந்து இருத்தல். உடல் மற்றும் இடக் காலைச் சுற்றி யோக பட்டை காணப்படும்; இ) இரு கால்களும் குத்திட்டு இருக்கை மீது இருக்க, இரு கால்களைச் சுற்றிலும் யோகபட்டை அமைக்கப்பட்டிருக்கும்.

2) **வியாக்யான தட்சிணாமூர்த்தி:** வீராசனத்தில் அமர்ந்து இருக்கும் இந்த வடிவின் முன் வலக்கை சின் முத்திரையில் காணப்படும்.

3) ஞான தட்சிணாமூர்த்தி: இந்த வடிவின் முன் வலக்கை ஞான முத்திரையில் அமைக்கப்பட்டிருக்கும்.

யோகத்தையும் ஞானத்தையும் கற்பிப்பதை இந்த வடிவங்கள் குறிப்பிடுவதால், இவற்றைச் சுற்றி சனகாதி முனிவர்கள் காணப்படுவர். பின் இருகைகளில் உள்ள ஓலைச் சுவடியும், அக்கமாலையும் அறிவையும், தத்துவங்களையும் குறிக்கும்.

4) வீணாதர தட்சிணாமூர்த்தி: வீணைமுன் இரு கைகளில் காணப்படும். இசையில் மட்டுமின்றி இசைக் கருவிகளை இசைப்பதிலும் வல்லவன் இவன் என்பதை உணர்த்தவே இவனது கைகளில் வீணை அமைந்துள்ளது.

மேலே குறிப்பிட்ட வடிவங்களில் வீணாதர தட்சிணாமூர்த்தி வடிவம் தான் நின்ற நிலையில் காணப்படுகிறது. புதுக்கோட்டை மாவட்டத்தைச் சார்ந்த கொடும்பாளூரில் உள்ள மூவர் கோயிலில் நின்ற நிலையில் உள்ள வீணாதர தட்சிணாமூர்த்தி வடிவத்தை எடுத்துக் காட்டாகக் கூறலாம். வீணையின்றி ஆனால் காளையுடன் நின்ற திருக்கோலத்தில் உள்ள ஆலமர் செல்வனின் அரிய வடிவம் திருநாவலூரில் உள்ளது.

நடு நாட்டில் தேவாரப் பாடல் பெற்ற எட்டாவது திருத்தலம். சைவ சமய பரமாசாரியர்களில் ஒருவரான சுந்தரமூர்த்தி சுவாமிகள் தோன்றிய பதி. இது ஒன்றே போதும் இதன் சமயப் பெருமையை உணர்த்த.

"மருவிய தவத்தால் மிக்க வளம்பதி" என்று இந்தத் தலத்தைச் சிறப்பிக்கிறார் சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தில். திருநாமநல்லூர் என்று அழைக்கப் பெறும் இந்தத்தலம் தென்னாற்காடு மாவட்டத்தில் பண்ணுருட்டியினின்றும் உளுந்தூர் பேட்டை செல்லும் வழியில் பண்ணுருட்டி

யினின்றும் ஏறக்குறைய இருபது கி. மீ. தொலைவில் உள்ளது. கெடில நதியின் வடகரையில் அமைந்துள்ள இந்தத் தலத்தில் உள்ள பக்த சனேசுவரர் திருக்கோயி லில் ஆலமர் செல்வனின் இந்த அரிய வடிவம் காணப் படுகிறது.

கருவறையின் வெளிப் புறச்சுவரில் தென்புறமாக உள்ள புரையில் இந்த வடிவம் உள்ளது. நின்ற திருக் கோலத்தில் உள்ள இந்த வடிவிற்குப் பின்னால் ஆணோடு பெண்ணாகிய வடிவத்தில் உள்ளது போன்று அவனது ஊர்தியான காளை அமைக்கப்பட்டுள்ளது. அந்த வடிவத்தில் உள்ளது போன்று இங்கும் ஒரு கை காளை மீது வைக்கப்பட்டுள்ளது. பின் இடக்கையில் பாம்பும், பின் வலக்கையில் அக்க மாலையும், முன் வலக்கையில் ஓலைச் சுவடியும் உள்ளன. இவனது முன் கைகளில் ஒன்று சின் முத்திரை அல்லது ஞான முத்திரையில் இல்லாது இருப்பினும், இவனது கைகளில் அக்க மாலையும், ஓலைச் சுவடியும் அமைந் துள்ளது இவன் ஆசான் என்பதை வலியுறுத்துகிறது. இவனைச் சுற்றிலும் முனிவர்கள் இல்லாதது மட்டு மன்றி இவனது காலடியில் பொதுவாகக் காணப்படும் முயலகன் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்க வேறு பாடாகும். இந்த வடிவம் சுந்தரருக்கு உபதேசம் செய்த ஒன்று என்று இங்குச் செவிவழிச் செய்தி நிலவு கிறது.

காளையுடன் நின்ற திருக்கோலத்தில் உள்ள ஆலமர் செல்வனின் வடிவம் அரிய கலைப் படைப் பாகும்.

---

## "அழலாகிய அண்ணாமலை அண்ணல்"
(சம்பந்தர்)

ஒரு சமயம் திருமாலும் நான்முகனும் தம்மில் யார் பெரியவர் என வாதிட்டுக் கடும் போர் செய்யும் போது, அவர்களுக்கு இடையில் சிவபெருமான் அக்னி மலையாகத் தோன்றினான். இதைக் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் தம் கந்த புராணத்தில்,

"மாகந் தன்னில்
வான்றிகழ் பானாட்கங்குல் மகிபகல்தழுவு நென்னல்
ஞான்றதுதனில் யாங்கண்டு நடுக்குற நடுவணாகத்
தோன்றினன் கனற்குன்றே போல் சொல்லரும்
பரத்தின்சோதி (6-?1-59)

எனக் கூறியுள்ளார். அதாவது மாசி மாதத்தில் அமாவாசைக்கு முதனாளான சதுர்த்தசி திதியன்று நடு இரவில் இறைவன் ஓர் அக்னி மலையாகத் தோன்றினான் என்பதாம். அந்த மலையின் அடி அல்லது முடியை முதலில் காண்பவரே பெரியவர் எனத் தம்மில் முடிவு செய்து, திருமால் பன்றியாகவும், பிரமா அன்னப் பறவையாகவும் அடியும் முடியும் நிரலே தேடமுயன்று தோல்வி அடைந்தனர். அவர்கள் இருவரும் தம் அகந்தை நீங்கப் பெற்று இறைவனைத் தொழ, இறைவன் அவர்கள் முன் தோன்றி அருள்புரிந்தான். இதைக் குறிக்கும் திருவுருவம் தான் இலிங்கோற்பவர்.

திருமாலும் பிரமனும் அடி முடி தேடிய அக்னி மலை அண்ணாமலை எனப் பெயர் உடையதாய் நிலை பெற்றது. அக்னி மலை தோன்றிய இரவே மகா சிவராத்திரியானது. இது கந்தபுராணத்தில்,

''அரியும் யானும் முன்தேடும் அவ்வனற்கிரியனல
கிரியெனும்பல நின்றதால் அவ்வொளி கிளர்ந்த
இரவே சிவராத்திரி யாயின'' (6-21-96)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இத்தகு சிறப்பு வாய்ந்த, தேவாரப் பாடல் பெற்ற நடு நாட்டில் உள்ள இருபத்திரண்டாவது திருத்தலமான திருவண்ணாமலையில் வேறு எங்கும் இல்லாத அரிய வடிவமைப்பைக் கொண்ட இலிங்கோற்பவர் திருவுருவம் உள்ளது.

சிவபெருமானது மகேசுவர வடிவங்கள் இருபத்தைந்தில் ஒன்று இலிங்கோற்பவ மூர்த்தி. ஆகமங்களின் படி இலிங்கத்தின் நடுவில் சிவபெருமான் அமைக்கப்பட வேண்டும் இதன் மேல் பகுதியில் பிரமா அன்னப் பறவையாகவும், கீழ்ப்பகுதியில் திருமால் பன்றியாகவும் உருவாக்கப் படவேண்டும். இவ்வடிவின் இருபுறமும் பிரமனும் திருமாலும் நான்கு கைகளுடனும் தமக்குரிய படைக்கலங்களுடனும் கைகளைக் கூப்பிய நிலையில் காணப்படவேண்டும்.

சிவாலயங்களின் கருவறைக்குப் பின்புறச் சுவரில் கி. பி. 871 முதல் 907 வரை சோழப் பேரரசனாக விளங்கிய முதலாம் ஆதித்த சோழன் காலத்திலிருந்து இலிங்கோற்பவ வடிவை அமைக்கும் மரபு பின்பற்றப் பட்டு வருகிறது. இலிங்கத்தின் நடுவில் சிவபெருமானும், மேல் பகுதியில் பிரமா அன்னமாகவும், கீழ்ப் பகுதியில் திருமால் பன்றியாகவும் உள்ள இலிங்கோற்பவ வடிவம்தான் பொதுவாகக் காணப்படுகிறது. ஒரு சில கோயில்களில் எடுத்துக்காட்டாகத் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த திருவாலீசுவரம் கோயில் போன்றவற்றில் மேலே குறிப்பிட்ட வடிவத்துடன் பிரமனும் திருமாலும் இருபுறமும் அமைக்கப்

பட்டுள்ளனர்; இவற்றினின்றும் வேறுபட்ட அரிய வடிவம் திருவண்ணாமலையில் உள்ளது.

இங்குள்ள கோயிலின் இரண்டாவது திருச்சுற்றில் மேலைக் கோபுரத்தை அடுத்துள்ள சிறிய திருமுன்னில் இந்த அரிய வடிவம் காணப்படுகிறது. இலிங்கத்தின் மேல் பகுதியில் அன்னமும், கீழ்ப்பகுதியில் பன்றியும் எல்லா இடங்களிலும் உள்ளது போன்றுதான் அமைக்கப் பட்டுள்ளன. நடுவில் சிவபெருமான் தனியாக நின்ற நிலையில் காணப்படுவதற்குப் பதிலாக அன்னை பரா சக்தியுடனும் தன் ஊர்தியான காளையுடனும் உருவாக்கப்பட்டுள்ளான்.

அடியார்களுக்கு அருள் பாலிக்கும்போது இறைவன் தன் சக்தியுடன் விடைமீது தோன்றுவதாகத்தான் கூறப் படுகிறது. எடுத்துக்காட்டாக, திருநீலகண்ட நாய னாரை இறைவன் ஆட்கொண்டபோது ''துன்னிய விசும்பினூடு துணையுடன் விடை மேற்கண்டார்'' என்றும், இயற்பகை நாயனாரை ஆட்கொண்டபோது ''தன் துணையுடன் வானிற்றலைவனை விடைமேற் கண்டார்'' என்றும் சேக்கிழார் பெருமான் தம் ''திருத் தொண்டர் புராணத்தில்'' குறிப்பிட்டுள்ளார். ஸ்ரீவில்லி புத்தூரார் தம் ''பாரதத்தில்''

"ஓர்
பச்சை மயில் பாதியுடனே
துய்யவிடைமீது ஒரு செழுஞ் சுடர்நிகர்க்கவரு
தூயவன் எதிர்ந்த அளவிலே''
(ஆரணிய பருவம்-113)

என அருச்சுனனுக்கு அருள்புரியச் சிவபெருமான் தன் துணையுடன் விடைமீது தோன்றியதாகக் கூறியுள்ளார். இதனின்றும் இறைவன் அடியார்களுக்கு அருள்செய்யும் போது அருட் சக்தியாகிய அன்னையுடன் அறக்கடவு

ளாகிய விடைமீது தோன்றுகிறான் என்பது தெளிவா

தம் பிழையை உணர்ந்த திருமாலும் பிரமனும் தன்னை வணங்கியபோது அவர்களுக்கு அருளும் இந்த வடிவில் இறைவனுடன் அன்னையையும் விடையையும் அமைத்தது சாலப் பொருத்தமே.



## "சதுர் முகன் கபாலம் ஏந்து சம்பு"

(சம்பந்தர்)

இறைவனது அளப்பரும் ஆற்றலை உணர்த்தும் எட்டு வீரச் செயல்களில் ஒன்று பிரமனது தலையைக் கொய்தது. இது நடந்ததாகப் போற்றப்படும் தலம் தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருக்கண்டியூராகும்.

தன்னை இகழ்ந்த பிரமனது ஐந்தாவது தலையைக் கொய்ய இறைவன் வயிரவனைத் தோற்றுவித்தான். அவனது தோற்றத்தைக் ''கந்தபுராணம்'',

"நீலுறு சுடரின் மெய்யும் நெகிழிகள் அகற்றுந்தாளும்
ஆலமதுயிர்க்குஞ் செங்கேழ் அரவவெற்றரையுஞ்சென்னி
மாலைகள் அநந்தகோடி வயின்வயின் பெயரும்மார்புஞ்
சூலமும் பரசும்நாணும் துடியும்ஏந்திய பொற்றோளும்"
(6-13-165)

"முக்கணுந் திங்களேபோல் முளைத்தவாள் எயிறும்வன்னிச்
செக்கரஞ் சடையின்சீருஞ் செயிர்கெழு நகையுமாக
உக்கர வடிவுகொண்டு ஆங்குஉதித்திடு வடுகன்"
(613-186)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது பைரவர் நீலமேனியும் சிலம்பு ஒலிக்கும் அடியும், பாம்பு அணிந்த அரையும், அளவற்ற தலைகளான மாலைகள் அணிந்த மார்பும், சூலம், பாசு, உடுக்கை ஏந்திய கைகளும், மூன்று கண்களும், பிறைச் சந்திரனை ஒத்த கோரைப் பற்களும், செவ்வானம் போன்ற சிவந்த ஆடையும், கோபச் சிரிப்பும் உடையவனாகத் தோன்றினான் என்பதாம். இவன் பிரமனது தலையைக் கொய்ததை, தலைவனைச் சார்ந்தோர் செயல் தலைவனதாகக் கொள்ளப்படும் வழக்கத்தைப் பின்பற்றி, சிவபெருமானது செயலாகப் பரவசப்படுகிறது.

ஆகமங்களில் பைரவரின் அறுபத்து நான்கு வடிவங்கள் கூறப்பட்டுள்ளன. இவையன்றி ஸ்வர்ணாகர்ஷண பைரவர், வடுகபைரவர் என மேலும் இரு வடிவங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றில் வடுக பைரவருக்கு எட்டு கைகள் விதிக்கப்பட்டுள்ளன. "சில்பரத்னா" என்ற நூலில் பைரவருக்குப் பதினெட்டு கைகள் கூறப்பட்டுள்ளன. மேலே குறிப்பிட்ட எந்த வடிவிற்கும் பத்து கைகள் விதிக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

சிவாலயங்களில் அமைக்கப்படும் எட்டு சுற்றுப் புறத் தெய்வங்களில் பைரவர் ஒன்று. பைரவரின் திருமுன் கோயிலின் வடகிழக்கு மூலையில் இருக்கும். இந்த வடிவிற்குப் பொதுவாக நான்கு கைகள்தான் உருவாக்கப்பட்டிருக்கும். சேலம் மாவட்டத்தைச் சார்ந்த கொக்கராயன் பேட்டை சிவாலயம் போன்ற ஒரு சில கோயில்களில் பைரவர் எட்டு கைகளுடன் காணப்படுகிறான். பத்து கைகள் கொண்ட அரிய வடிவம் தென்னாற்காடு மாவட்டத்தைச் சார்ந்த சேந்த மங்கலத்தில் உள்ளது.

திருச்சி-சென்னைப் பெருவழியில் மடப்பட்டு என்ற ஊரை அடுத்துள்ள சேந்தமங்கலம் கூட்டு ரஸ்தாவி லிருந்து இந்த ஊர் ஏறக்குறைய அரை கி.மீ. தொலைவில் உள்ளது. இது பிற்காலப் பல்லவ மன்னர்களின் தலை நகரமாக விளங்கியது. இங்குப் பல்லவ மன்னன் மண வாளப் பெருமாள் கட்டிய ஆபத் சகாயேசுவரர் கோயிலில் இந்த வடிவம் உள்ளது.

பத்து கைகளுடன் தன் ஊர்தியான நாயுடன் இவன் உருவாக்கப்பட்டுள்ளான். இவனது எட்டு கைகளில் உடுக்கை, பாம்பு, சூலம் ஆகிய படைக் கலங்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஏனைய இரு கைகள் அபய மற்றும் வரத முத்திரைகளில் உள்ளன. இவனது தலையைச்சுற்றிலும் தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பத்து கைகள் கொண்ட இவன் அகோர பைரவர் என இங்கு அழைக்கப்படுகிறான். இத்தகைய வடிவங் களுக்குப் பொதுவாக உள்ள நான்கு கைகளைக் காட்டிலும் இவனுக்கு அதிக கைகள் இருப்பதால், இப் பெயரால் வழங்கப்படுகிறான் போலும். இவன் பெயரில் தான் அகோரபைரவரே ஒழிய, இவனது முகத்தில் தவழும் அமைதி மனதைக் கவருவதாக உள்ளது. முகத்தின் அமைதிக்கு ஏற்றபடி இவனது முன் இரு கைகள் அபய மற்றும் வரத முத்திரைகளில் உருவாக்கப் பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது வடுக பைரவருக்கு மட்டும் ஒருகை அபய முத்திரையில் இருக்கலாம் என ஆகமங்களில் கூறப்பட்டுள்ளது. ஏனைய வடிவங் களுக்கு முன் இரு கைகளை அபய மற்றும் வரத முத்திரை களில் அமைக்க ஆகமங்கள் விதித்திருப்பதாகத் தெரிய வில்லை.

அபய மற்றும் வரத முத்திரைகளுடன் பத்துக் கைகள் கொண்ட இந்த வடிவம் அரிய கலைப் படைப்பாகும்.

---

# "அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி"
## (அபிராமி அந்தாதி)

கோவையினின்றும் நகரப் பேருந்தில் இக்கரை போளுவாம்பட்டி சென்று, அங்கிருந்து ஏறக்குறைய ஒன்றரை கி.மீ, தொலைவில் உள்ள முட்டம் என்ற சிற்றூரை அடையலாம். ஒரு சில வீடுகளே உள்ள இந்த ஊரில் மிகவும் சிதிலமடைந்துள்ள சிவன் கோயில் ஒன்று உள்ளது. தற்போது இறைவன் மற்றும் அன்னைக்குக் கருவறை, முகமண்டலம் ஆகியவற்றைக் கொண்ட தனித்தனி திருமுன்கள் உள்ளன. இறைவனின் திருப் பெயர் நாகேசுவரர்; அன்னையின் திருப்பெயர் முத்து வாளியம்மன் என்பதாகும்.

காஞ்சிமா நதியின் கிழக்குக் கரையில் இந்தக் கோயில் அமைந்துள்ளது. முட்டம் என்றால் முட்டமா யிருக்கும் இடம் அதாவது உயர்ந்து இருக்கும் இடம் என்று சொல்லப்படுகிறது. "நாடும் நகரமும் நளிர் மலை முட்டமும்" என்பது பெருங்கதை. இப்பகுதியில் உள்ள ஏறத்தாழ நூற்றைம்பது ஏக்கர் பரப்பளவு சாம்பல் மேடு உள்ளது. இங்கிருந்து சிவப்பு மண் பொம்மைகள் (Terra coata beads) நிறைந்த அளவில் கிடைத்துள்ளன. இது இப்பகுதியின் தொன்மையைச் சுட்டிக்காட்டுகிறது.

இங்குள்ள அன்னை வலக்கால் நேராகவும், இடக் கால் சற்று வளைந்தும் அதாவது திரிபங்க நிலையில் நின்ற திருக்கோலத்தில் காணப்படுகிறாள். அன்னையை இறைவனுடன் அமைத்தால் இரண்டு கைகளுடனும், தனியாக அமைத்தால் நான்கு கைகளுடனும் அமைக்க வேண்டும் என ஆகமங்கள் விதித்துள்ளன. இங்கு

அன்னை தனியாக இருப்பினும் நான்கு கைகளுக்குப் பதில் இரண்டு கைகள் கொண்டவளதாகத்தான் உருவாக்கப்பட்டுள்ளாள். அவளது வலக்கையில் கடக முத்திரையில் மலரை வைத்துக்கொண்டும், இடக்கை கத்யவலம்பித முத்திரையிலும் உள்ளன. அவளது கிரீடம் ஒன்பது அடுக்குகளுடன் அழகுற அமைக்கப்பட்டுள்ளது. அவளது காதில் முத்தாலான காதணி அணியப்பெற்று இருப்பதால், அவள் முத்துவாளி அம்மன் என அழைக்கப்பெற்றாள், ஓலைச்சுவடிகளில் இப்பெயர் காணப்படுகிறது. தோள்களில் தொடி, கைகளில் கடகம் அழகுற அமைக்கப்பட்டுள்ளன. மேலும் கழுத்தில் மாலைகளும், காலில் நூபுரம் போன்ற அணிகலன்களும் இந்தத் திருவுருவை அழகு செய்கின்றன. அவள் அணிந்துள்ள ஆடையின் மடிப்பு தெளிவாக உருவாக்கப்பட்டுள்ளது. பூரித்துப் பருத்த இரு கொங்கைகளும், நுண் இடையும் உடைய அன்னையின் இடுப்பில் அணிந்துள்ள மேகலை பதினாறு தொளைகள் உடையதாய் உருவாக்கி இருக்கும் சிற்பியின் கலைத் திண்மையை எத்துணை போற்றினும் தகும். தலைக்குப் பின்னால் சடைவில்லையுடன் கூடிய அழகான பின்னல் உள்ளது. தன்னை வணங்குவோர் வேண்டியாங்கு எய்தச் செம்மையாகிய இன்னருள் புரியும் அன்னையின் திருமுகமண்டலத்தை எத்திறம் நோக்கினும் கண்ணில் அடங்காது. உன்னில் கருத்தில் அடங்காது. அவளது திருமுகத்தில் உள்ள புன்னகை காண்போரைப் புல்லரிக்கச் செய்யும். கலைக் கருவூலமாகத் திகழும் இந்தத் திருவுரு.

"இளமாந்

தளிரடிக் காஞ்சி சூழக் கிடந்த
மின்னிகர் மருங்குல் இழை இடைநுழையா
வெம்முலைச் செம்மலர்க் காந்தட்
பொன்னிற வளைக்கை மங்கலக்கழுத்திற்

பூரண மதிக்கலை முகத்தின்
இன்னிசை அளிகூழ் இருட்குழற்கற்றை யிறைவி"

(4-74)

என அன்னையைப் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்தில் கூறியுள்ளதை நினைவூட்டுவதாக அமைந்துள்ளது.

இந்த ஊரின் பழமையான பெயர் "ரவிவர்ம சதுர்வேதிமங்கலம்" என்பதாம். கொங்கு சோழ மன்னர்களான கி. பி 10[illegible] முதல் 1045 வரை ஆண்ட கலிமூர்க்க முதலாம் விக்ரம சோழன் 1207 முதல் 1252 வரை செங்கோலோச்சிய வீர ராஜேந்திர சோழன், 15 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஹோய் சால மன்னன் மூன்றாம் வீரவல்லாளன் ஆகியோரின் கல்வெட்டுகள் இங்கு காணக் கிடைக்கின்றன. கல்வெட்டுகளில் இது "பேரூர் நாட்டு முட்டமான அமரபுயங்க சதுர்வேதி மங்கலம்", "அமர புயங்க நல்லூர்", "திருநாகேசுவர நல்லூர்" என்றெல்லாம் குறிப்பிடப்படுகிறது புயங்கன் என்றால் பாம்பு, நாகம். எனவேதான் ஊர் அமர புயங்க நல்லூர் என்றும், இறைவன் நாகேசுவரர் என்றும் அழைக்கப் பெற்றார்கள். கல்வெட்டுக்களினின்றும் வணிகச் சக்ரவர்த்தியான மருதன் முதலி, வியாபாரி தனபாலன் விழுமிபட்டியான், மன்றாடி சவான் குட்டன் என்ற வணிக நாராயண சக்ரவர்த்தி ஆகியோர் இங்கு வாழ்ந்ததாகத் தெரிகிறது இவற்றினின்றும் இப்பகுதியின் செல்வ வளத்தை நன்கு உணரலாம். இந்தத் திருக்கோயிலில் திருவிழா எடுக்கவும், நந்தா விளக்குகள் எரிக்கவும் ஆகியவற்றிற்கு நிபந்தங்கள் அளிக்கப் பட்டமையும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

"பேரூருக்கும் மேலதிகமானமுட்டம்" என்று சோழன் பூர்வபட்டயத்தில் சிறப்பிக்கப் பெற்ற

செல்வம் கொழித்த பகுதியில் அமைந்து கலைக் கண்களுக்கு மாபெரும் விருந்தாக உள்ள சிற்பச் செல்வமான அன்னை இன்று கேட்பாரற்று, கவனிப்பாரற்று, நாட்பூசை கூட இல்லாதது தாங்க இயலா வேதனையை அளிப்பதாக உள்ளது. இந்தக் கோயில் திருப்பணிக்கு அரசு தொகை அனுமதி அளித்து உள்ளதாகவும், விரைவில் திருப்பணி தொடங்க உள்ளதாகவும் இங்குள்ள மக்கள் தெரிவிக்கிறார்கள். இதை அறிந்த மனம் ஒருவாறு நிறைவு பெறுகிறது.

---

## "இறையொடும் இடமிட்டாடு காரணி"

### (திருப்புகழ்)

சிவபெருமானது திருக்கோயில்களில் கருவறையின் வடபுற வெளிப்புறச் சுவரில் பிரமனையும் துர்க்கையையும் அமைக்கும் மரபு பின்பற்றப்பட்டு வருகிறது. இங்குக் காணப்படும் துர்க்கையின் நான்கு கைகளில் பின் இரு கைகளில சங்கும் சக்கரமும் இருக்க, முன் இரு கைகள் அபய, வரத முத்திரைகளில் காணப்படும். திருமாலைப் போன்று இவளது பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும இருப்பதாலும், திருமாலின் தங்கை எனப்படுவதாலும், இவள் "விஷ்ணு துர்க்கை" என்று அழைக்கப்படுகிறாள்.

இதினின்றும் வேறுபட்ட துர்க்கை வடிவம் பட்டாலியூர் சிவாலயத்தில் காணப்படுகிறது. இந்தத் திருக்கோயிலில் உள்ள முருகனைப் பற்றி 'இருகுழை இடறிக்காது மோதுவ", "கத்தூரியகரும்புகமத", "சங்கைக்கத்தோடு சிலுகிடு" எனத் தொடங்கும்

மூன்று திருப்புகழ்ப் பாடல்களை அருணகிரிநாதர் பாடியுள்ளார். பெரியார் மாவட்டத்தில் காங்கயத்தை அடுத்துள்ள சிவன் மலையினின்றும் ஏறத்தாழ இரண்டு கி. மீ. தொலைவில் இந்தக் கோயில் உள்ளது. பாழடைந்துள்ள இந்தக் கோயிலைப் பற்றி இப்பகுதியில் உள்ள மக்களுக்கும் சரியாகத் தெரியவில்லை என்றால், இதன் பரிதாபநிலை என்னவென்பது!

கோயிலுக்கு வெளியில் அமைந்துள்ள திருமுள்ளில் இந்த அரிய வடிவம் காணப்படுகிறது. நான்கு கைகள் கொண்ட இந்த வடிவின் பின் வலக்கையில் சக்கரமும், பின் இடக்கையில் (விஷ்ணுதுர்க்கை வடிவில் உள்ள சங்குக்குப் பதிலாக) சூலம் அமைக்கப்பட்டுள்ளது. முன் வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கை ஊரு முத்திரையிலும் உள்ளன. இந்த வடிவை ஒட்டி வலது புறத்தில் மானும், இடது புறத்தில் சிங்கமும் செதுக்கப் பட்டுள்ளன. பூரித்துப் பருத்த தனங்களும், நுண் இடையும் இந்த வடிவிற்கு அழகு ஊட்டுவனவாக உள்ளன, தலையில் மகுடம் அழகுற அமைக்கப் பட்டுள்ளது.

ஆகமங்களில் சிவாம்ச துர்க்கை, வன துர்க்கை, அக்னி துர்க்கை, ஜய துர்க்கை, விந்தயவாசி துர்க்கை, ரிபுமாரி துர்க்கை என துர்க்கையின் பல வடிவங்கள் கூறப்பட்டுள்ளன. அவற்றிற்கு இரண்டு, நான்கு, எட்டு கைகள் விதிக்கப்பட்டுள்ளன. நான்கு கைகளை உடைய சிவாம்ச துர்க்கை, மற்றும் ஜயதுர்க்கைக்கு கைகளில் சங்கு, சக்கரம், சூலம், சக்தி ஆகியவற்றை அமைக்கலாம் என உள்ளது. சிவாம்ச துர்க்கைக்கு இரு கண்களும், ஜயதுர்க்கைக்கு மூன்று கண்களும் விதிக்கப்பட்டுள்ளன. இந்த இரண்டு வடிவங்களுக்கும் சிங்கம் ஊர்தியாகக் கூறப்பட்டுள்ளது:

இங்குள்ள வடிவின் நான்கு கைகளில் ஆகமங்களில் விதிக்கப்பட்ட சக்கரமும், சூலமும் உருவாக்கப்பட்டுள்ளன. சங்கு மற்றும் கத்தி கைகளில் இருப்பதற்குப் பதிலாக அபய மற்றும் ஊரு முத்திரைகளில் கைகள் காணப்படுகின்றன. தமிழ் இலக்கியங்களில் துர்க்கை கொற்றவை எனப்படுகிறாள். "பாய்கலைப்பாவை", "கலைப்பரி ஊர்தி" என இவளைச் "சிலப்பதிகாரம்" பேசும். அதாவது விரைந்து செல்லும் கலைமானை ஊர்தியாகக் கொண்டவள் என்பதாம். எனவே ஆகமங்களில் துர்க்கைக்குச் சிங்கம் ஊர்தியாக விதிக்கப்பட்டாலும், மானும் அவளது ஊர்தி என்பது பெறப்படுகிறது. இதனால்தான் இங்கு சிங்கமும் மானும் உருவாக்கப்பட்டன போலும் மேலும் இறைவன் நீதியின் திருவுரு; அவளது திருமுன் எந்தப் பகையுணர்ச்சியும் இல்லை என்பதையும் இது உணர்த்துகிறது.

"இருகுழை இடறிக்காது மோதவ" எனத் தொடங்கும் திருப்புகழில் அன்னை பராசக்தியைப் பலவாறாகத் துதித்து அவள் அருள் பெற்ற பட்டாலியூர் என அவளைச் சிறப்பிக்கிறார் அருணகிரிப் பெருமான்,

"முரண்முடி யிரணச் சூலி மாலினி
சரணெனும் அவர் பற்றான சாதகி
முடுகிய கடினத்தாளி வாகினி மதுபானம்
பருகினர் பரமப்போக மோகினி
அரகரவெறும் வித்தாரியாமளி
பரிபுர சரணக்காளி கூளிகள் நடமாடும்
பறையறை சுடலைக் கோயில் நாயகி
இறையொடும் இடமிட்டாடு காரணி
பயிரவி யருள் பட்டாலியூர்"

என்பது அவரது திருவாக்காம்.

இவளது கையில் சூலம் இருப்பதால், அருணகிரிநாதர் தம் திருப்புகழில் இவளை "முரண்முடியிரணச்

சூலி'' எனக் குறிப்பிட்டுள்ளார். மேலும் இரு கண்கள் மட்டும் இந்த வடிவிற்கு அமைத்து இருப்பதால், இதை இதை சிவாம்ச துர்க்கையாகக் கொள்ளலாம். இது ஒரு அரிய கலைப் படைப்பாம்.

---

## "ஒளிர் மாமலர் மிசை உத்தமன்"

(அப்பர்)

பிரஜாபதி என்று ஒரு காலத்தில் சிறப்பிக்கப் பெற்ற பிரமா நாளடைவில் தன் பெருமையை இழந்தான். தேவர்களுக்கு மட்டுமன்றி அசுரர்களுக்கும் வேண்டிய வரங்களைத் தருவதால், அசுரர்களால் தேவர்கள் பல துன்பங்களை அடைந்தார்கள் என்றும், சிவபெருமான் அல்லது திருமால் குறிப்பிட்ட அசுரர்களைக் கொன்று தேவர்களைக் காப்பாற்றினர் என்றும் புராணங்கள் சிவபெருமான் அல்லது திருமாலைச் சிறப்பித்தது தான் பிரமா தன் பெருமைகளை இழக்கக் காரணம் என ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

அக்கினிமலையாகத் தோன்றிய சிவபெருமானது முடியைத் தான் கண்டதாகப் பொய் கூறியதன் காரணமாக பிரமாவிற்குத் தனிக் கோயில் இல்லை என்று சொல்லப்படுகிறது (கந்தபுராணத்தில் இது பற்றிக் குறிப்பிடப்படவில்லை;) ஜேஷ்டாதேவி, சப்தமாதர்கள் ஆகியோருக்குக் கூடக் கோயில்களில் தனித்தனி திருமுன்கள் உள்ளன. ஆனால் பிரமாவிற்கோ தனியாகக் கோயில் மட்டுமன்றி, தனியாகத் திருமுன் கூடக் கிடையாது. குறிப்பிட்ட தலங்கள் மும்மூர்த்தி தலங்கள் எனப் போற்றி வணங்கப்படுகின்றன. பெரியார்

மாவட்டம் கொடுமுடி மகுடேசுவரர் கோயில், திருச்சி மாவட்டம் ஆயிரவேலி அயிரூர் திருவாலீசுவரர் கோயில் ஆகியவற்றை எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம், ஆனால் இங்கு கூடப் பிரமாவிற்குத் தனியாகத் திருமுன் கிடையாது: இங்கெல்லாம் பிரமா மரத்தடியில் தான் காணப்படுகிறார்.

சிவாலயங்களில் கருவறையின் வடபுற வெளிச் சுவரில் சண்டிகேசுவரர் திருமுன் எதிரில் பிரமாவின் சிறிய அளவிலான வடிவம் அமைக்கும் மரபு பின்பற்றப் பட்டு வருகிறது. அட்ட வீரட்ட தலங்களில் பிரமனது தலையைக் கிள்ளியதாகப் போற்றப்படும் தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருக்கண்டியூரில் பிரமசிரக் கண்டீசுரர் கோயிலில் மகாமண்டபத்தை ஒட்டிப் பெரிய அளவிலான பிரமாவின் வடிவம் உள்ளது: அதே போன்ற பெரிய வடிவம் அதே மாவட்டத்தைச் சார்ந்த செந் தலை சுந்தரேசுவரர் கோயிலில் திருச்சுற்றில் காணப் படுகிறது. ஆனால் இந்த இரு கோயில்களிலும் பிரமா வின் வடிவம் பெரிய அளவில் உள்ளதேயன்றி, தனி யாகத் திருமுன் அமைந்து இருக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இதினின்றும் வேறுபட்டுப் பெரிய அமைப்பினை உடைய பிரமாவிற்குத் தனித்திருமுன் உள்ள கோயில் திருப்பிடவூரில் உள்ளது.

திருச்சியினின்றும் சென்னை செல்லும் பெருவழியில் உள்ள சிறுகனூரிலிருந்து பிரிந்து செல்லும் வழியில் ஏறக்குறைய மூன்று கி. மீ. தொலைவில் இந்த ஊர் உள்ளது. இது தற்காலத்தில் திருப்பட்டூர் என்று அழைக்கப்படுகிறது: இங்குள்ள பழமையான கோயில் களில் பிரமபுரீசுவரர் கோயில் ஒன்று. இந்தக் கோயிலின் கருவறைக்கு வலதுபுறம் பிரமாவின் திருமுன் தனியாக உள்ளது.

உட்கார்ந்த நிலையில் உருவாக்கப்பட்டுள்ள இவன் ஆகம விதிகளின்படி யோக நிலையில் காணப்

படுகிறான். தாமரை இருக்கையில் உட்கார்ந்துள்ள இவனது முன் இருகைகள் ஒன்றின் மேல் ஒன்றாகக் கால்களுக்கு மேல் அமைக்கப்பட்டுள்ளன. பின் வலக் கையில் அக்கமாலையும், பின் இடக்கையில் கமண்டலமும் உருவாக்கப்பட்டுள்ளன. கைகளிலும், மார்பிலும் பல அணிகலன்களையும், முப்புரி நூலையும் அணிந்துள்ளான். இவனது மூன்று முகங்கள் மட்டும் முன்புறமாகக் காணப்படுகின்றன. தலையில் கிரீடத்துடன் முகத்தில் பொலியும் அமைதி மனதைக் கவருவதாக உள்ளது.

கலைக் கண்களுக்குப் பெரு விருந்தாக அமைந்துள்ள இந்த வடிவம் கண்டு களிக்கத் தக்கதாம்.

---

## "கலை மலிந்த சீர்நம்பி கண்ணப்பர்"

(சுந்தரர்)

"வாட்டமிலா மாணிக்கவாசக நின் வாசகத்தைக்
கேட்ட பொழுது அங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறும் என்னில் இங்கு நாளடைதல் வியப்பன்றே"

என வள்ளலார் பெருமான் மணிவாசகப் பெருந்தகையின் கருங்கல் மனத்தையும் கரைந்து உகச் செய்யும் இறையன்பில் ஊறித் திளைத்த வாசகத்தின் திறத்தைப் போற்றுகிறார். அத்தகைய பேரன்புமிக்க பெருமானார்

"கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்ட பின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட்
கொண்டருளி"

என்றால், கண்ணப்பரின் அன்பின் திறத்தை என்ன வென்பது! இவரது செயற்கரிய செயலைச் சம்பந்தப் பெருமாள்,

"வாய்கலசமாக வழிபாடு செயும் வேடன் மலராகு நயனம்
காய் கணையினால் இடந்து ஈசனடி கூடு காளத்தி
மலையே" (4)

என்றும், அப்பர் பெருமான்,

"குவப் பெருந் தடக்கை வேடன்
கொடுஞ் சிலை இறைச்சிப்பாரம்
துவர்ப் பெருஞ் செருப்பால் நீக்கித்
தூய வாய்க் கலசம் ஆட்ட
உவப் பெருங் குருதி சோர
ஒரு கணை இடந்தங்கப்பத்
தவப் பெருந்தேவு செய்தார்
சாய்க்காடு மேவினாரே" (8)

என்றும் பாராட்டியுள்ளனர்; பட்டினத்தடிகள் போற்றிய மூவரில் ஒருவர் கண்ணப்பர்;

"நாளாறில் கண்ணிடந்து அப்பவல்லேன் அல்லேன்.

என்பது அவரது திருவாக்காம்.

இறைவன் இத்தகைய ஈடு இணையற்ற அன்பு கொண்ட கண்ணப்பரைத் தமிழ் இலக்கிய மரபின்படிச் சேக்கிழார் பெருமான் தம் "திருத்தொண்டர் புராணத் தில்"

"பொங்கிய ஒளியின் நிழல்
பொருவில் அன்புருவ மானார்" (753)

என அவரை அன்பின் திருவுருவமாக நயம்பட உரைத் துள்ளார்.

முற் பிறவியில் செய்த தவத்தின் பயனாக அன்பும் ஆர்வமும் உடையவராகக் கண்ணப்பர் மலை மீது

சென்றார் என்பர், சேக்கிழார் பெருமான். அந்தத் திருப்பாடல் வருமாறு :

''முன்பு செய்த தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான
அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம் பொங்கி
மன்பெருங் காதல்கூர வாளலார் மலையை நோக்கி
என்பு நெக்கு நகி இள்ளத்தது எழுபெரு வேட்கை
யோடும்' (751)

முற்பிறவி இன்னது என்பதைச் சேக்கிழார் பெருமான் குறிப்பிடவில்லை.

பாசுபதப்படை பெறச் சென்ற பார்த்தான் இறைவனிடம் முத்தி வேண்டினான், ஆனால் இறைவன் பாசுபத படைக்கலத்தை அளித்தான். மேலும் வேடனென்று தம்மை இகழ்ந்தமையால் வேடனாகப் பிறந்து காலத்தியில் தம்மை அடைய அருளுகிறான். இதை சீகாலத்தி புராணம்.

''எமை
இன்னல் செய் வேடன் என்று இகழ்ந்து கூறினை
அன்னதால் வேட்டுவ வரசனாகியே (65)

''தென்றிசைக் கயிலையைச் சென்று சேர்ந்துநீ
குறைவின் அன்புருக்கொண்டு'' (66)

''கோலமே முதலிய விலங்கு கொன்று நீ
சாலவே தசையமுது அருத்திச் சாரு நாள்
ஏலவே முத்தியும் ஈதும் போ வெனா
நீலமர் களத்திறை நீங்கினானரோ'' (67)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் பதினோராம் திருமுறையில் நக்கீர தேவ நாயனர் இயற்றிய 'கயிலை பாதி காளத்தி பாதி திருவந்தாதி' மற்றும் ''போற்றித் திருக் கலிவெண்பா'' ஆகிய நூல்களினின்றும் பஞ்சவரில் அர்ச்சுனன் கண்ணப்பராகப் பிறந்தது அறியக் கிடக்கின்றது.

சிவாலயங்களில் உள்ள அறுபத்துமூன்று நாயன்மார் திருவுருவங்களில் ஒன்றாகத் தான் கண்ணப்பர் வடிவம் காணப்படுகிறது. திருக்காளத்தி அன்றி வேறு திருத்தலங்களில் அவரது திருவுருவம் தனியாக இருப்பதாகத் தெரியவில்லை. ஏனைய சிவாலயங்களில் உள்ள இவரது சிலா வடிவம் அல்லது செப்புப்படிவம் ஏனைய நாயன்மார் திருவுருவங்களைப் போன்று சிறிய அளவில்தான் உள்ளது.

இதினின்றும் வேறுபட்ட வடிவம் பெருந் தலையூரில் உள்ள தொன்மையான ஆனால் கவனிப்பாரற்ற சிவாலயத்தில் உள்ளது. எல்ல பரிவாரத் தெய்வங்களில் சப்த மாதர்கள், ஜேஷ்டா தேவி (மூதேவி) போன்ற வடிவங்கள் இங்குள்ளன. இந்தக் கோயிலின் பழமையைச் சுட்டிக் காட்டுகிறது. ஈரோட்டினின்றும் கோபி செல்லும் பெரு வழியில் உள்ள கவுந்தப் பாடியினின்றும் இந்த ஊர் ஏறக்குறைய ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இங்குள்ள மகிழீசுவரர் திருக்கோயிலின் திருச்சுற்றில் ஏறத்தாழ ஐந்தடி உயரத்தில் உள்ள கண்ணப்பரது பெரிய வடிவம் மட்டுமன்றி அர்ச்சுனன் வடிவமும் உள்ளது. கண்ணப்பரின் இடக்கையில் வில் காணப்பட, வலக்கையில் உள்ள அம்பால் தன் வலக்கண்ணைக் குத்தியபடி உள்ளார். இவரை அடுத்துள்ள ஏறக்குறைய நான்கு அடி உயரமுள்ள அர்ச்சுனன் இரு கைகளையும் கூப்பிய நிலையில் காணப்படுகிறார். அவரது தலையில் மட்டும் கிரீடம் அமைக்கப் பட்டுள்ளது. இருவரது ஆடை அமைப்புகள் வேறு பட்டு உள்ளன. இரு வடிவங்களும் கலை அழகுடன் உருவாக்கப்பட்டுள்ளன.

திருக்காளத்தித் திருக்கோயில் மற்றும் அதையடுத்துள்ள கண்ணப்பர் மலையில் உள்ள கோயில் ஆகியவற்றில் உள்ள கண்ணப்பரின் வடிவங்களில் ஒரு கையில் வில்லும் மற்றொரு கையில் அம்பும் காணப்படுகின்றன.

ஆனால் இந்த வடிவங்களுடன் அர்ச்சுனன் வடிவம் இல்லை என்பது குறிப்பிடத்தக்கதாம். திருக்காளத்தி யினின்றும் இந்த ஊர் நெடுந்தொலைவில் இருப்பினும், இங்கு வேட்டுவக் கவுண்டர் என்ற வகுப்பினர் பெரும் அளவில் இருப்பதால்தான், கண்ணப்பர் திருவுரு இந்தக் கோயிலில் சிறப்பாக அமைக்கப்பட்டது எனத் தெரிய வருகிறது.

அர்ச்சுனன் கூடிய கண்ணப்பர் வடிவம் அதுவும் தன் கண்ணைக் குத்திய நிலையில் வேறு எங்கும் இருப்ப தாகத் தெரியவில்லை.



## பல்லவர்களின் கலைக் கருவூலம்

ஆதியும் அந்தமும் அற்ற இறைவனுக்குக் காலத் தால் அழிக்க இயலாக் கோயில்களைக்கட்டி வரலாற்றுப் புகழ் படைத்தவர்கள் காஞ்சிபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டு செங்கோலோச்சிய பல்லவப் பேரரசர்கள்: இவர்களது பணி இரு பிரிவின் பாற்படும்-: 1) குடை வரைக் கோயில்கள்: 2) கற்றளிகள்.

தமிழகக் கோயில் கட்டிட மற்றும் சிற்பக் கலையின் வளர்ச்சியில் சிறப்பிடம் பெற்ற இரு பேரரசர்களில் ஒருவன் பல்லவ மன்னன் இரண்டாம் நரசிம்மன், இராசசிம்மன் என்ற பட்டப் பெயரைக் கொண்ட இவன் கி.பி 680 முதல் 700 வரை ஆட்சி புரிந்தான். இவனது காலத்தில் கட்டப் பெற்ற மூன்று கோயில்கள்: 1) கடற்கரைக் கோயில், மாமல்லபுரம், 2) தளபுரீசு வரர் கோயில், பனமலை, 3) கைலாயநாதர் கோயில்,

காஞ்சிபுரம். இவற்றில் சிற்பக்கலை வல்லுநர்களால் போற்றிப் புகழப் பெறும் தனிச் சிறப்பை உடையது கைலாயநாதர் கோயில்:

காஞ்சிபுரம் நகரத்திலிருந்தும் ஏறத்தாழ ஒரு கிலோ தொலைவில் வயல்களுக்கு இடையில் இந்தக் கோயில் அமைந்துள்ளது. இராசசிம்மன் காலத்தில் சதுரமான திருச்சுற்றுடன் கருவறையுடன் கூடிய இந்தக் கோயிலில் மண்டபம் ஒன்றும் தனியாகக் கட்டப்பட்டிருந்தது. பிற்காலத்தில் கருவறையை மண்டபத்துடன் இணைத்து அர்த்த மண்டபம் கட்டப் பெற்றது. இராசசிம்மனுக்குப் பின்னால் அரியணையில் அமர்ந்த மூன்றாம் மகேந்திரவர்மன் காலத்தில் மண்டபத்திற்கும் நுழைவாயிலுக்கும் இடையில் உள்ள வெற்றிடத்தில் மற்றுமொரு கோயில் எழுப்பப் பெற்றது. மகேந்திர கிருகம் என்ற இந்தக் கோயிலின் கருவறையில் பதினாறு பட்டை தீட்டப் பெற்ற இலிங்கத்திருவுருவும், பின் சுவரில் சிவனுமை முருகு வடிவம் புடைச் சிற்பமாகவும் காணப்படுகின்றன. இது கைலாயநாதர் கோயிலை மறைத்தபடி அமைந்துள்ளது.

கிழக்கு நோக்கிக் கட்டப் பெற்றுள்ள இந்தக் கோயிலின் நுழை வாயிலைச் சிறிய கோபுரம் அணி செய்கிறது. நுழை வாயிலுக்கு வலது புறம் இரண்டு சிற்றாலயங்களும் இடதுபுறம் ஆறு சிற்றாலயங்களும் கட்டப்பெற்றுள்ளன. இரண்டு அடுக்குகளுடன் கூடிய இந்தச் சிற்றாலயங்களின் கிரீவம் மற்றும் சிகரம் வட்ட வடிவம், எண் கோண அமைப்பு ஆகியவற்றில் ஒன்றைக் கொண்டவை. உட்கார்ந்த நிலையில் உள்ள சிங்கங்களை அடித்தளமாகக் கொண்ட முகப்புகளை உடைய இவற்றின் உட்புறச் சுவரில் அன்னையுடன் கூடிய இறைவன் அல்லது சிவனுமைமுருகு வடிவம் புடைச் சிற்பமாகக் காணப்படுகிறது.

நுழை வாயிலின் இரு புறங்களில் உள்ள சிற்றாலயங்களைப் போன்று மதிலின் உட்புறமும் ஐம்பத்தெட்டு சிற்றாலயங்கள் அமைக்கப்பட்டுள்ளன. சிற்றாலயங்களை மதிலின் உட்புறமாகக் கொண்ட இத்தகைய அரிய அமைப்பு தமிழகத்தில் வேறு எந்தக்கோயிலிலும் இல்லை. மதிலின் வெளிப்புறத்தில் நின்ற நிலையில் சிங்கங்கள் காணப்படுகின்றன. சிற்றாலயங்களின் உட்புறச் சுவர்களில் சிவபெருமானின் அரிய வடிவங்கள் பல அமைக்கப் பட்டுள்ளன. அன்னையுடன் கூடிய இறைவன் மற்றும் சிவனுமைமுருகு வடிவங்கள் பெரும் அளவில் உள்ளன. அக்கால வர்ணப் பூச்சுகள் ஆங்காங்கு இன்னமும் காணப் படுகின்றன.

அழகான அரிஅரன் வடிவம் கருவறையின் தென்புற வெளிப்புறச் சுவரில் அமைக்கப்பட்டுள்ளது பல கைகளுடன் சிங்க ஊர்தியுடன் கூடிய துர்க்கையின் திருவுரு பல இடங்களில் காணப்படுகிறது. நுழை வாயிலில் உள்ள துர்க்கைக்கு பதினாறு கைகள் அமைக்கப்பட்டிருக்க, தென்புறத்தில் உள்ள ஒரு சிற்றாலயத்தில் எட்டுக் கைகளுடனும், கருவறையின் வடபுற வெளிச்சுவரில் பத்துக்கைகளுடனும் உருவாக்கப்பட்டுள்ளாள். வடபுறச் சிற்றாலயம் ஒன்றில் தனியாக இருக்கும் சேட்டை தென்புறச் சிற்றாலயம் ஒன்றிலும், கருவறையின் வெளிச் சுவரிலும் அக்னி மாதா என்ற மகளுடனும் மகனுடனும் காணப்படுகிறாள். தென்புறச் சிற்றாலயம் ஒன்றில் யோகப்பட்டையுடன் கூடிய ஆலமர் செல்வனும், பிள்ளையாரும், சப்த மாதர்களும் உருவாக்கப் பட்டுள்ளனர். தமிழகத்தில் இங்குதான் சேட்டையும், சப்த மாதர்களும் முதல் முதலில் அமைக்கப்பட்டதாக ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

சிவபெருமானின் "லலாட திலகம்," "குஞ்சிதம்" போன்ற அரிய நடனங்களும் இங்கு உருவாக்கப்பட்டுள்ளன. பிச்சை உகக்கும் பெம்மானின் எழில் மிக்க

வடிவம் ஒன்று கருவறையின் மேல்புற வெளிச்சுவரில் காணப்படுகிறது. இவனது சடையின் அமைப்பு தனி அழகுடன் விளங்குகிறது. சிவபெருமானின் கங்கைவார் சடைக் கரந்தான் வடிவத்தின் சில அரிய திருவுருவங்கள் இங்கு உள்ளன. தென்புறச் சிற்றாலயம் ஒன்றில் எட்டுக் கைகளுடன் கூடிய இந்த வடிவம் கருவறையின் மேல்புற வெளிச்சுவரில் நான்கு கைகளுடன் காணப்படுகிறது. முதல் வடிவத்தில் கைகளைக் கூப்பிய நிலையில் உள்ள கங்கை இறைவனது கையில் அமைக்கப்பட்டுள்ளாள். கங்கையை இறைவன் தன் சடையில் ஏற்றதாகத்தான் புராணங்களும் திருவருட் செல்வர்களும் கூறியிருக்க, இங்கு இறைவன் தன் கையில் கங்கை ஏந்தியுள்ளது அரிய அமைப்பாக உள்ளது: இந்த இரண்டு வடிவங்களில் அன்னை பராசக்தி காணப்படுகிறாள். இதற்கு முற்காலத்தைச் சார்ந்த திருச்சி, திருக்கோகர்ணம் குடைவரைக் கோயில்களில் இத்தகு வடிவங்களில் அன்னை இல்லை. பிற்கால வடிவங்களில் அன்னை தனக்குப் போட்டி ஏற்பட்டுவிட்டது என்று பதற்ற நிலையிலும், இறைவன் அவளது ஊடலைத் தீர்க்கும் நிலையிலும் காணப்படுகின்றனர். ஆனால் இங்கு உள்ள வடிவங்களில் அன்னையிடம் எந்த பதற்றமும் காண வில்லை. எனவே இறைவன் அவளது ஊடலைத் தீர்க்கும நிலையிலும் அமைக்கப்படவில்லை. இவை இந்த வடிவத் தின் வளர்ச்சியின் இடைப்பட்ட காலத்தைக் குறிப்பிடு கிறது.

கருவறையில் இலிங்கத் திருவுருவில் எழுந்தருளி யுள்ள இறைவனது திருப்பெயர் கைலாயநாதர் என்ப தாம், இராச்சிம்மன் பாணியில் இந்த வடிவம் பதினாறு பட்டையுடனும், பின்சுவரில் சிவனுமைமுருகு வடிவத்து டனும் அமைக்கப்பட்டுள்ளது. கருவறையைச் சுற்றி வர உள்ளே வழி உள்ளது. ஏனைய கோயில்களில் உள்ள சுற்று வழிகளுக்கும் இதற்கும் வேறுபாடு காணப்படு

கிறது. நுழை வாயிலும், வெளிவாயிலும் மிகவும் குறுகியபடி இருப்பதால், படுத்தபடிதான் உள்ளே செல்ல இயலும்; வெளியே வர இயலும்: உள்ளே நுழைந்தால், எழுந்து நன்றாக நடந்து செல்லலாம். இது மறு பிறவி எடுப்பதைக் குறிப்பதாகக் கொள்ளப்படு

ஆயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட இந்தக் கோயில் இன்னமும் நல்ல நிலையில் உள்ளது. அழகாக வெட்டப் பட்டுள்ள நான்கு வகையான கல்வெட்டுகள் இங்கு காணப்படுகின்றன. அதிஅற்புத அமைப்பினையும், அரிய மட்டுமன்றி அழகிய பல வடிவங்களையும் கொண்ட இதைக் காண்பவர் தம்மை மறந்து வியப்பின் எல்லையை எய்றுவர் என்றால் அது சற்றும் மிகையாகாது.

———

# பல்லவர்களின் வரலாற்றுக் கருவூலம்

முற்காலத்தில் கோயில்கள் இறைவனை வழிபடும் இடங்களாக மட்டும் இருக்கவில்லை. மக்களிடையே கல்வியைப் பரப்புவதிலும், நோயாளிக்கு வேண்டி மருத்துவ உதவி அளிப்பதிலும் அவை சிறப்பான பங்கை ஏற்று வந்தன. இசை, நடனம், சிற்பம் போன்ற லலித கலைகளை ஊக்குவித்து வந்தன. மக்களுக்கு வேலை வாய்ப்புகளை அளித்து வந்தன. அக்கால சமூக, அரசியல், பொருளதார நிலைகளை அறியப் பேருதவி யாக இருந்து வருகின்றன. வரலாற்றுக் கருவூலங்களாக விளங்கும் நூற்றுக் கணக்கான கோயில்களில் காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் கோயில் சிறப்பிடம் வகிக்கிறது.

கி.பி. 710 முதல் 775வரை ஆட்சி புரிந்த பல்லவப் பேரரசன் நந்திவர்மப் பல்லமல்லனால் கட்டப்பெற்றது. காஞ்சிபுரத்தில் உள்ள மிகப் பழமையான இரு கோயில் கள் இது ஒன்று. மற்றொன்று கயிலாயநாதர் கோயி லாகும். ஊரின் நடுவில் அமைந்துள்ள இது கருவறை, திருச்சுற்று, முன்மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. திருச்சுற்றில் பல்லவர்கள் பாணியில் அமைந்துள்ள சிங்கத் தூண்கள் காணப்படுகின்றன. கருவறை மூன்று நிலைகளை உடையது. கீழே திருமால் வைகுண்டப் பெருமாள் என்ற பெயரில் உட்கார்ந்த நிலையில் உள்ளான். இரண்டாம் தளத்தில் அவன் தனக்கே உரிய சயனத்திருக் கோலத்தில் அனந்த சயனனாகக் காணப் படுகிறான். இங்கு நாபிக் கமலத்தில் பிரமா அமைக்கப் படவில்லை. மேல்தளத்தில் பர வாசுதேவன் என்ற பெயரில் நின்ற நிலையில் உள்ளான். வைகுந்தப் பெருமான் என்ற அமர்ந்த நிலையில் உள்ள இங்குள்ள

வடிதம்தான் அத்தகைய வடிவங்களில் மிகத்தொன்மை யானதாகக் கருதப்படுகிறது. கருவறையைச் சுற்றித் திருமாலின் தோற்றங்களான (அவதாரங்களான) வராகம்' நரசிம்மம் மற்றும் உலகளந்தான் ஆகியோரின் பல வடிவங்களும், இராமாயணம் மற்றும் பாரதம் ஆகிய இதிகாசங்களினின்றும் நிகழ்ச்சிகளும் சுவரில் அமைக்கப்பட்டுள்ளன.

திருச்சுற்றின் உட்பகுதியில் உள்ள சுவரை நூற்று எழுபத்து ஐந்து பகுதிகளாகப் பிரித்து புராண காலத்தி லிருந்து நந்திவர்மப் பல்லவமல்லன் காலம் வரை பல்லவர்கள் வரலாறு கதையில் உருவாக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பிரிவும் இரண்டாகப் பிரிக்கப்பட்டு, நடுவில் அவற்றிற்கான விளக்கங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. முதல் எட்டுப் பகுதிகளில் பல்லவர்களது புராண வரலாறு சித்தரிக்கப்பட்டுள்ளது. முதல் பகுதியில் திருமால் சுகாசனத்தில் அமர்ந்து இருக்க, இருபுறமும் சாமரை வீசுபவர்களும் ஏனையோடும் உள்ளனர். ஒன்பதாவது பகுதியில் அசுவத்தாமனும் மேனகையும் குழந்தை பல்லவனுடன் காணப்படுகின்றனர். குழந்தைக்கு அருகில் இளந்தளிர் (பல்லவம்) அமைக்கப்பட்டுள்ளது. இது 'பல்லவன்' என்ற பெயர் ஏற்பட்ட காரணத்தைக் குறிப்பால் உணர்த்துகிறது.

முதலாம் நந்திவர்மன், இரண்டாம் சிம்ஹ விஷ்ணு, குமார விஷ்ணு போன்ற பல்லவ மன்னர்களின் முடி சூட்டு விழாக்கள் காணப்படுகின்றன. தமிழகத்தில் குடைவரைக் கோயிலைத் தோற்றுவித்த முதலாம் மகேந்திரவர்மனின் முடி சூட்டும் விழாவினைச் சித்திரிக்கும் பாகத்தில் அவனால் உண்டாக்கப் பெற்ற குடைவரைக் கோயிலும் மேல் பகுதியில் உள்ளது: முதலாம் நரசிம்மவர்மனின் வாதாபிப் படையெடுப்புப் போன்ற பல போர்களும் உருவாக்கப்பட்டுள்ளன. சாளுக்கிய மன்னன் முதலாம் விக்ரமாதித்தனுடன்

முதலாம் பரமேசுவரவர்மன் செய்த சண்டையும் அதில் அவனது யானையான ''அறிவாரணம்'' பங்கு கொண்டதும் அமைக்கப்பட்டுள்ளன.

மூத்த பரம்பரை வாரிசு அற்றுப் போக, இரண்டாம் பரம்பரையைச் சார்ந்த நந்திவர்மன் காஞ்சிகடிகைச் சார்ந்தோரின் வேண்டுகோளின்படி அரசுப் பதவியை ஏற்கப் பல வனங்களைக் கடப்பதும், சிற்றரசர்களால் வரவேற்கப்படுவதும் காணப்படுகின்றன. இவனது முடி சூட்டு விழாவும், இவனது சேனாபதி உதயசந்திரன் பாண்டியன் ஆகியோருடன் நடந்த போர்களில் பெற்ற வெற்றிகளும், இவன் நந்திபுரத்தில் முற்றுகையிடப் பட்டதும், ஆகியவை சுதை வடிவங்களாக உருவாக்கப் பட்டுள்ளன.

மங்கை மன்னனால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற கோயில் இது. ஆழ்வாரது திருப்பாசுரங்களில் பல்லவ மன்னன் பாண்டியனை வென்றதை,

''தேர் மன்னு தென்னவனை முனையில் செருவில்
திறல் வாட்டிய திண்சிலையோன்
பார்மன்னு பல்லவர் கோன்'' 2-9 2)

என்றும்

''தெம்பொழில் சூழ் குன்றெயில் தென்னவனைத்
திகைப்பச் செருமேல் வியந்தன்று
சென்ற பாம்புடைப் பல்லவர் கோன் (2-9-3)

என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

''பல்லவன் வில்லவனென்று உலகில் பலராய்ப்
பல வேந்தர் வணங்கு கழற்
பல்லவன் மல்லையர் கோன் (2-9-1)

என்றும்

"பண்புடைப் பல்லவர் கோன்" (2-9-6)

என்றும்

"கறையுடை வாள் மறமன்னர் கெடக் கடல்
போல் முழங்கும் குரல் கடுவாய்
பறையுடைப் பல்லவர் கோன் (2-9-9)

என்றும்

"பார்மன்னு தொல் புகழ்ப் பல்லவர் கோன்"! (2-9-10)

என்றும் பலவாறாக ஆழ்வார் பல்லவப் பேரசனைப் பாராட்டியுள்ளார். ஆழ்வார்களது திருப்பாசுரங்களில் சிறப்பிக்கப்பெற்ற ஒரே மன்னன் என்ற பேறு பெற்றவன் இவன். அவரது திருப்பாசுரங்களில் இந்தக் கோயில் "பரமேசுவர விண்ணகரம்" என்று சிறப்பிக்கப்பெறுகிறது. பல்லவர் கட்டிடக் கலையின் முழு வளர்ச்சியை இங்கு காணலாம்.

கோயில்களில் வரலாற்றைக் குறிக்கும் கல்வெட்டுச் செய்திகள்தாம் காணப்படுமேயன்றி இங்குள்ளதைப் போன்று கல்வெட்டுகளுடன் சுதை வடிவங்களும் தமிழகத்தில் வேறு எந்தக் கோயிலும் இல்லை.

— — —

# சித்ரகுப்தர் கோயில்

தமிழகத்தில் இறைவனின் பல்வேறு வடிவங்களுக்கு ஆங்காங்கு திருக்கோயில்கள் காணப்படுகின்றன. பிள்ளையார், சிவபெருமான், பராசக்தி, முருகன், திருமால் ஆகியோருக்குக் கணக்கற்ற கோயில்கள் உள்ளன. ஒரு சில வடிவங்களுக்கு ஓரிரு கோயில்கள் தாம் உள்ளன. அத்தகைய அரிய கோயில்களில் ஒன்று சித்ரகுப்தரை மூலவராகக் கொண்ட கோயில். அந்தக் கோயிலைப் பற்றி அறியும் முன்பு, அவரது சிறப்புகளைச் சுருக்கமாகக் காண்போம்.

உயிர்களைக் குறித்த காலத்தில் உடம்பினின்றும் கூறாக்கும் காரணத்தால் கூற்றுவன் எனப்படும் யம தருமன் உயிர்களின் முடிவு, அவற்றின் நல்வினை, தீவினைகள் ஆகியவற்றைக் கணக்கிட்டுக் கூறவல்லவன் ஒருவனை அளிக்க இறைவனிடம் வேண்டினான். அந்த நோக்கம் ஈடேறக் கடல் நீரில் தோன்றிய நீலா தேவி யிடத்துச் சூரியனுக்கு ஒரு மகன் தோன்றினான். சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரத்தில் அவன் பிறந்தமையால், சித்திரபுத்திரர், சித்திரகுப்தர் என்று அழைக்கப்பட்டான் அந்தக் குழந்தையின் இடக்கையில் ஏடு, வலக்கையில் எழுத்தாணி, மார்பில் முப்புரி நூல் ஆகிய ரேகைகள் காணப்பட்டன.

சித்திரகுப்தர் சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்து இட்ட சித்தி வரங்களைப் பெற்றார். தக்க காலத்தில் மயப் பிரமன் புதல்வி பிரபாவதி, மனு பிரமன் மகள் நீலாவதி, விசவ பிரமன் செல்வி கர்ணகி ஆகிய மூவரை மணம் புரிந்தார். தன் தந்தையான சூரியன் ஆணையின்படி, யமதருமனிடம் கணித் தலைவராகப் பணிபுரியத் தொடங்கினார். உயிர்களின் நல்வினை,

தீவினைகளைத் தெரிந்து சுவடியில் குறிப்பதே அவரது தொழில்

நவகோள்களில் ஒன்றான கேதுவிற்கு உரிய தேவதை சித்ரகுப்தர். எனவே அமங்கலக்கோள் எனக் கருதப்படும் கேதுவால் ஏற்படும் தீமைகளை நீக்கவும், நன்மைகளைப் பெறவும் சித்ர குப்தரைச் சிறப்பாக வழிபட வேண்டும்.

ஓரிரு கோயில்களில் மூலவராக உள்ள இறை வடிவங்கள் பல கோயில்களில் சுற்றுப்புறத் தெய்வங்களாகக் காணப்படுகின்றன. எடுத்துக் காட்டாக பாண்டியை அடுத்துள்ள சிங்கிரிக் கோயிலில் மட்டும் மூலவராக உள்ள உக்ர நரசிம்மர் பல கோயில்களில் சுற்றுப்புறத் தெய்வமாக உள்ளார். ஆனால் சித்ரகுப்தர் தமிழகத்தில் எந்தக் கோயிலிலும் சுற்றுப்புறத் தெய்வமாக இருப்பதாகத் தெரியவில்லை. இந்நிலையில் காஞ்சிபுரத்தில் அவரை மூலவராகக் கொண்ட ஒரே கோயில் சிறப்பு மிக்கதாகக் கருதலாம்.

நூற்றுக் கணக்கான கோயில்களைத் தன்னகத்தே கொண்டமையால் ''கோயில் நகரம்'' (City of Temples) எனப் பெறும் காஞ்சிபுரம் ஏறத்தாழ 1300 ஆண்டுகளுக்கு முன்பு 'நகரேசு காஞ்சி' (நகரங்களில் சிறந்தது காஞ்சி) என வடமொழிப் புலவர் பாரவியால் பாராட்டப் பெற்றது.

''மெய் வளந்தரு சிறப்பினால் உலகெலாம் வியப்ப
எவ்வுகங்களும் உள்ளது''

என்று யாவரும் ஏத்தும்

''கை விளங்கிய நிலையது காஞ்சி மாநகரம்''
(திருக்குறிப்பு-48)

எனச் சேக்கிழார் பெருமான் தம் திருத் தொண்டர் புராணத்தில் சிறப்பிக்கிறார்: இங்கு பேருந்து நிலையத்

திற்கு அருகில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்திற்குக் கீழ்ப் புறமாக இந்தக் கோயில் அமைந்துள்ளது.

யமதருமனது திக்காகிய தென் திசையை நோக்கி இந்தக் கோயில் உள்ளது குறிப்பிடத்தக்கது. இது கருவறை, முகமண்டபம், திருச்சுற்று ஆகியவற்றை கொண்ட சிறிய அளவிலானது. சுகாசனத்தில் உட்கார்ந்த நிலையில் இருக்கும் மூலவரின் இடக் கையில் ஏடும், வலக்கையில் எழுத்தாணியும் காணப்படுகின்றன. அவரது தோற்றம் உயிர்கள் மனம், வாக்கு, காயம் ஆகியவற்றால் செய்யும் நல்வினை, தீவினைகளைக் குறிப்பது போன்று உள்ளது.

காஞ்சிபுரம் செல்வோர் காணவேண்டிய கோயில் களில் இது ஒன்று.



# பஞ்சவரதர் திருத்தலம்

சென்னையினின்றும் ஏறக்குறைய எண்பது கிலோ மீ. தொலைவிலும், காஞ்சிபுரத்தினின்றும் இருபது கிலோ மீ. தொலைவிலும் உத்தரமேரூர் என்ற தலம் உள்ளது. காஞ்சிபுரம், கும்பகோணம் போன்று கோயில்களின நகரம் என்று சொல்லும்படி பல கோயில்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. வரலாற்றுப் புகழ் பெற்ற குடவோலைக் கல் வெட்டினை உடைய வைகுந்தப் பெருமாள் கோயில், அருணகிரிநாதரால் பாடப் பெற்ற முருகப் பெருமானது அரிய திருவுருவினை மூலவராகக் கொண்ட சுப்ரமணிய சுவாமி கோயில் ஆகியவையன்றி சிறப்புமிக்க சுந்தரவரதப் பெருமாள் கோயிலும் இங்கு உள்ளது.

ஒன்றின் மேல் ஒன்றாக மூன்று தளங்களைக் கொண்ட அமைப்பினை உடையது இந்தக் கோயில். கீழ்த்தளத்தில் கிழக்கு நோக்கி மலர் மகள் மண் மகளுடன் சுந்தர வரதப் பெருமாள் நின்ற திருக்கோலத்தில் உள்ளான். இவனது நான்கு கைகளில் பின் இருகைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன் இருகைகள் அபய மற்றும் ஊரு முத்திரைகளில் காணப்படுகின்றன. இவன் பஞ்சபாண்டவரில் பீமனால் வணங்கப்பட்டவனாகக் கருதப்படுகிறான். முகமண்டபத்தில் காளிங்க நடனக் கண்ணன், ஆஞ்சநேயர், இலட்சுமணன், சீதையுடன் இராமன், சக்கரத்தாழ்வார், தேவியுடன் கூடிய புருஷாமிருகம், ஆகியவற்றின் திருவீதி உலா நாயகர் வடிவங்கள் (உற்சவ வடிவங்கள்) உள்ளன. தெற்கு நோக்கி அர்ச்சுனனால் தொழப்பட்ட அச்சுத வரதன் தன் இரு துணைவியருடன் நின்ற திருக்கோலத்தில் காணப்படுகிறான். இவனுடன் கஜலட்சுமி உள்ளாள். மேற்கு நோக்கி நகுலனால் பூசிக்கப்பட்ட அனுருத்திர வரதன் நின்ற திருக்கோலத்தில் தன் இரு துணைவியருடன் உள்ளான். அவனுடன் இரதியும் மன்மதனும் காணப்படுகின்றனர். வடக்கு நோக்கிச் சகாதேவனால் வணங்கப்பட்ட கல்யாணவரதன் தன் இருதுணைவியருடன் வீற்றிருந்த திருக்கோலத்தில் உள்ளான். உத்குடி இருக்கையில் உட்கார்ந்துள்ள இவனது முன் வலக்கை பின்னால் ஊன்றிய நிலையிலும், முன் இடக்கை முழங்கால் மேல் நீட்டிய நிலையிலும் உள்ளான். இவனுடன் பிருகு முனிவரும் காணப்படுகிறார்.

கீழ்த் தளத்தில் தென்கோடியில் திரௌபதியால் தொழப்பெற்ற ஆனந்தவல்லித் தாயரும், வட கோடியில் சூடிக் கொடுத்த நாச்சியாரும் காணப்படுகின்றனர். தாயாரின் வடிவங்கள் மட்டும் சிலா வடிவங்கள். எனவே இவற்றிற்கு மட்டும் அபிடேகம் செய்யப்படுகிறது. வரதர்களின் வடிவங்கள் தருவால் அதாவது மரத்தால் செய்யப் பெற்றவை. எனவே அவற்றிற்கு

அபிடேகம் கிடையாது. இங்கு விசுவச் சேனர், நம்மாழ்வார், பெரியாழ்வார், மங்கை மன்னன், உடையவர், வேதாந்த தேசிகர் ஆகியோரின் மூலவர் மற்றும் திருவீதி உலா நாயகர் வடிவங்கள் உள்ளன.

இரண்டாவது தளத்தில் கிழக்கு நோக்கி தர்ம ராசரால் வணங்கப் பெற்ற வைகுண்டவரதன் மண் மடந்தை, மலர் மடந்தை இருபாலும் சூழ வீற்றிருந்த திருக்கோலத்தில் காணப்படுகிறான். சுகாசனத்தில் அமர்ந்துள்ள இவனது முன் இடக்கை முழங்கால் மீது நீட்டிய நிலையில் உள்ளது. தெற்கு நோக்கி உள்ள கருவறையில் கைகள் அபய மற்றும் வரத முத்திரை களில் உள்ள கண்ணனும், அவனுக்கு எதிரில் கூப்பிய கைகளைக் கொண்ட அர்ச்சுனனும் காணப்படுகின் றனர். மேற்கு நோக்கி யோக நரசிம்மர் இருகால்களும் குத்திட்ட நிலையில் உட்கார்ந்து உள்ளான். இவனது பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன் இருகைகள் முழங்கால்கள் மீது நீட்டியபடி உள்ளன. வடக்கு நோக்கி சுகாசனத்தில் உட்கார்ந்துள்ள பூவராகர் காணப்படுகிறார். இவரது மடியில் மண் மகள் அமைக்கப்பட்டுள்ளாள். இவரது பின் இருகை களில் சங்கும் சக்கரமும் இருக்க, முன் வலக்கை அன்னை யின் கால்களைப் பிடித்தபடியும், முன் இடக்கை அவளை அணைத்தபடியும் உள்ளன. இருகைகளையும் கூப்பியபடி உள்ள மண் மடந்தை தன் கால்களை நீட்டியபடிக் காணப்படுகிறாள்.

மேல் தளத்தில் சயனத் திருக்கோலத்தில் அரங்கநாதன் உள்ளான். இவனது வலக்கை மார்க் கண்டேயனுக்கு முத்தி அளிக்கும் நிலையினும், இடக்கை நீட்டியபடியும் அமைக்கப்பட்டுள்ளன. இவனது நாபிக் கமலத்தில் பிரமாவும், காலடியும் தாமரைப் பூவும் மதுகைடபரும் காணப்படுகின்றனர். வடக்கு நோக்கி

நான்கு முகங்களுடன் பிரமா தனியாகவும், மார்க்கண்டேயருக்கு எதிரில் மண் மடந்தையும் உள்ளனர்.

அதிட்டானம் கருங்கற்களாலும், அதற்கு மேல் உள்ள பகுதி செங்கல்லால் கட்டப் பெற்று, சுண்ணாம்பு பூசப்பட்டுள்ளதால், இந்தக் கோயில் கலப்பு கோயில் (மிஸ்ரா கோயில்) என்ற வகையைச் சார்ந்தது. இது துலாபாரத் தளி என்றும் அக்காலத்தில் அழைக்கப் பெற்றது. இதினின்றும் இங்குள்ள இறைவனுக்குத் துலாபாரத்தில் காணிக்கை அளிப்பது சிறப்பாகக் கருதப் பட்டுப் பெரும் அளவில் நடைபெற்று இருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. கேரள மாநிலத்தைச் சார்ந்த குருவாயூர் கிருஷ்ணன் கோயிலில் இரு நாட்களில் துலாபாரக் காணிக்கை சிறப்பாக நடைபெற்று வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

கல்வெட்டுகளில் இந்தக் கோயிலின் பெயர் 'ஸ்ரீ வெளி விஷ்ணு கிருகம்' என்றும், இறைவனது திருப் பெயர் 'ஸ்ரீ கோபால் வெள்ளை மூர்த்தி பெருமாள் அடிகள் என்றும் குறிக்கப்பட்டுள்ளன. கி.பி. 786 முதல் 836 வரை ஆட்சி புரிந்த பல்லவ மன்னன் நந்திவர்மனின் பத்தாவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு இங்குக் காணப்படு கிறது. இது அவன் காலத்தில் கட்டப் பெற்றதாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. முதல் பராந்தக சோழன் கல்வெட்டில் இந்தக் கோயிலின் பெயர் 'துலாபார ஸ்ரீ கோயில்' என்றுள்ளது. மூன்றாம் குலோத்துங்க சோழனின் 38ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டினின்றும் கோபால் தேவரடியான் ஆயிரத்தி இருநூற்றுவ மாணிக்கம் என்பவன் வெளிமதில், அபிடேக மண்டபம் ஆகியவற்றைக் கட்டியதாகத் தெரிகிறது. அதே கல்வெட்டில் இந்தக் கோயிலின் பெயர் ''இராஜேந்திர சோழ விண்ணகரம்'' என்று குறிப்பிடப் பட்டுள்ளது. பதினெட்டு நாட்டின் வைணவர்களை வைணவக் கோயில்களுக்குக் காப்பாளர்களாக நியமித்

தை மற்றொரு கல்வெட்டுக் கூறுகிறது. இறையனார்களிடமிருந்து நிபந்தங்களைப் பெறவும், அவற்றை நிர்வகிப்பது பற்றியும் இந்தக் குழுவின் அனுமதி பெற வேண்டும்.

நின்ற திருக்கோலம், விற்றிருந்த திருக்கோலம், மற்றும் சயனத் திருக்கோலம் என்ற திருமாலின் மூன்று திருக்கோலங்களையும் உடைய மூன்று தளங்களுடன் கட்டப் பெற்ற ஒரு சில வைணவத் திருக்கோயில்களில் இது ஒன்று. ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாகியும் சிதிலமாகாது உள்ள இரண்டு வைணவக் கோயில்களில் இது ஒன்று காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் கோயில் மற்றொன்று. சிறப்புமிக்க அஷ்டாங்க விமானத்தை உடைய மூன்று வைணவக் கோயில்களில் இது ஒன்று.' ஏனையாவை திருக்கோட்டியூர் சௌமிய நாராயணன் கோயில், மதுரை கூடல் அழகர் கோயிலாம்:- பஞ்ச பாண்டவர்களால் பூசிக்கப் பெற்றதாகப் போற்றப்படும் சுந்தரவரதர், அச்சுதவரதர், அனுருத்திர வரதர், கல்யாணவரதர் மற்றும் வைகுண்டவரதர் ஆகிய ஐந்து வரதர்களை மூலவர்களாக உடைமையால், இது "பஞ்ச வரதர் திருத்தலம்" என புகழப் பெறுகிறது. பஞ்சவரதர்களேயன்றிக், கண்ணன், யோக நரசிம்மர், பூவராகர் மற்றும் அரங்கநாதன் என மேலும் நால்வர் மூலவர்களாக இங்கு உள்ளனர். மூன்று தளங்களைக் கொண்ட காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் கோயில், மன்னார் கோயில் வேதநாராயணன் கோயில் போலன்றி இங்கு திருமாலின் ஒன்பது மூலவர் வடிவங்கள் உள்ளமை இதன் தனிச் சிறப்பாகும். எனவே இது "நவபெருமாள் கோயில்" எனவும் போற்றி வணங்கப்படுகிறது.

பல்லவர் காலத்தில் கட்டப்பெற்ற இந்தக் கோயிலின் அமைப்பு வேறு எங்கும் காண இயலாத ஒன்றாம். இதை முன்னோடியாகக் கொண்டு அண்மை

யில் சென்னையில் அஷ்டலட்சுமி கோயில் கட்டப் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

---

## திருத்தணிகை வீரட்டானேசுவரர் திருக்கோயில்

*''சிறப்புறப் பிரித்து அறத்திறத்தமிழ்க்கு உயர்த்திசைச்*
*சிறப்புடைத் திருத்தணி''*

எனச் சிறப்பிக்கிறார் அருணகிரிப்பெருமான்; அதாவது சிறப்பினைப் பெறத் தனியாக நின்று, அறநெறி கூறும் தமிழின் உயர்ந்த திசையில் இருக்கும் பெருமையைப் பெற்ற திருத்தணி என்பதாம். இத்தகு மாண்பினை உடைய திருத்தணிகை என்றாலே அது தமிழ்க் கடவுளான முருகப் பெருமானது ஐந்தாவது படை வீடான குன்று தோறாடலில் சிறப்புமிக்கதலம் என்பது தான் நினைவிற்கு வரும். அந்தத்தலத்திற்குச் செல்லும் இறையன்பர்கள் திரை கடல் சூழும் புவிக்கு உயிராகத் திருத்தணி மேவும் தணிகாசலாதிபதியை மட்டும் வணங்கிவிட்டு வந்து விடுவது வழக்கம். அந்தக் காலத்தில் உள்ள பல்லவர்காலக் கோபுரமான வீரட்டா னேசுவரர் கோயிலைப் பற்றி அறிந்தவரே இல்லை என்றால் அது சற்றும் மிகையாது. இந்நிலையில் அந்தக் கோயிலுக்குச் செல்பவர் யார்! வரலாற்றுச் சிறப்பு மிக்க கோயில்களைப் பற்றி அறிந்தவர்கள் மட்டுமே அங்கு சென்று வருகின்றனர்.

திருத்தணியை அடுத்து ஓடும் நந்தி ஆற்றின் கரையில் இந்தக் கோயில் அமைந்துள்ளது. புகழ்மிக்க

பல்லவ பேரரசர்களில் கடைசி மன்னனான அபராஜித வர்மன் (கி. பி. 875-893) காலத்தில் நம்பி அப்பி என்பவரால் இது கட்டப்பட்டது. கருவறையின் தென்புறச் சுவரில் காணப்படும் பல்லவ மன்னனின் பதினெட்டாவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு இதை உறுதி செய்கிறது.

கிழக்கு நோக்கி அமைந்துள்ள இதைக் கோயிலில் கருவறை, அந்தரானம், முகமண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. கருவறையின் உள்ளே சதுரமான ஆவுடையாரின் பேரில் இலிங்கத் திருவுரு காணப்படுகிறது. நான்கு கைகளைக் கொண்ட வாயிற் காப்போர் இருமருங்கும் உள்ளனர். அவர்கள் பல்லவர்கள் பாணியில் பாம்பு சுற்றியுள்ள கதைமீது சாய்ந்த நிலையில் உருவாக்கப்பட்டுள்ளனர். பல்லவ வாயிற்காப்போருக்கு இரு கைகள் தாம் அமைக்கப் பட்டிருக்கும். இங்கு நான்கு கைகள் இருப்பது முக்கிய வேறுபாடாகும்.

முகமண்டபத்தில் உத்குடி இருக்கையில் நான்கு கைகளுடன் ஆலமர் செல்வன் வடிவம் காணப்படுகிறது. முன் வலக்கை வியாக்கரண முத்திரையிலும் முன் இடக்கை தொங்கிய நிலையிலும் இருக்க, பின் வலக்கையில் அக்கமாலையும், பின் இடக் கையில் மானும் உள்ளன. இவனது சடா மகுடம் தனி அமைப்புடன் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும் இங்கு சுகாசனத்தில் அமர்ந்துள்ள சப்த மாதர்கள் காணப் படுகின்றனர். இவர்களது இருக்கைகளுக்குக் கீழே அவர் அவர்களுக்கு ஏற்ற ஊர்திகள் அமைக்கப் பட்டுள்ளன. இந்த ஏழு வடிவங்களும் கலை அழகுடன் உருவாக்கப்பட்டுள்ளன. மேலும் இங்கு சூரியன், பெற்றம் ஊரும் பெம்மான் ஆகியோரின் வடிவங்களும் உள்ளன. இந்த மண்டபத்தில் உள்ள நான்கு தூண்களின் போதிகைகள் முற்காலச் சோழர்களின்

பாணியில் அமைந்துள்ளன. இங்கு தெற்கு நோக்கி அன்னையின் திருமுன்னும் உள்ளது. நான்கு கைகளைக் கொண்ட அன்னையின் திருப்பெயர் ஞானசௌந்தரி என்பதாம்.

கருவறையின் அதிட்டானம் வரி, வரிமானம் முப்பட்டைக்கு முதம் ஆகியவற்றைக் கொண்டது. வெளிப்புறச் சுவர்களில் உள்ள புரைகளுக்கு மேல் மகர தோரணங்களும் அதற்கு மேல் பூதகண வரிசை, கூடுகளுடன் கூடிய கொடுங்கை யாளிவரிசை ஆகியவை காணப்படுகின்றன. கருவறை சதுரமாக இருக்க, விமானம் தொண்டை நாட்டிற்கு உரிய தூங்கானை மாடம் என்ற அமைப்பினை உடையதாக உள்ளது. சுவர்களில் உள்ள புரைகளில் மேல்புறத்தில் திருமால், வடபுறத்தில் பிரமா, துர்க்கை, தென்புறத்தில் பிள்ளையார், ஆலமர் செல்வன் ஆகியோரின் அழகிய வடிவங்கள் காணப்படுகின்றன.

கருவறையின் மேல்புறச்சுவரில் உள்ள கல்வெட்டில் இங்குள்ள இறைவனது திருப்பெயர் திருவீரட்டான முடைய மகாதேவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. தென்புறச் சுவரில் பொறிக்கப்பட்ட தமிழ்ப் பாடல் பல்லவ மன்னன் அபராஜித வர்மனால் இயற்றப் பட்டதாகக் கருதப்படுகிறது. விளக்கு எரித்தல் போன்ற கோயில் திருப்பணிகளுக்காக நம்பி அப்பி ஆயிரம் நிலத்தை வாங்கி அளித்தமையும் அதற்கு இந்த ஊர் சபை இறையிலி செய்தமையும் அங்கே உள்ள மற்றொரு கல்வெட்டு தெரிவிக்கிறது.

இது பல்லவப் பேரரசர்களின் கடைசிக் கோயிலாகும். இது கட்டப் பெற்று ஆயிரம் ஆண்டு களுக்கு மேலாகியும் இன்றும் நல்ல நிலையில் உள்ளது குறிப்பிடத்தக்கது. மேலும் இது கருங்கற்களால் கட்டப்பட்டுள்ளது இதன் சிறப்புகளில் ஒன்று.

வெளிப்புறச் சுவர்களில் உள்ள புரைகளுக்கு மேல் மகர தோரணங்கள் அமைந்துள்ளது; சோழர் கோயில கட்டிடக் கலைக்கு முன்னோடியாக இருப்பதாகக் கருதப் படுகிறது. மேலும் வாயிற்காப்போருக்கு நான்கு கைகள் உள்ளன, தூண்களின் போதிகைகள் முற்காலச் சோழர்களின் பாணியில் அமைந்துள்ளது, வெளிப்புறச் சுவர்களில் யாளி வரிசை உள்ளது. கருங்சற்களால் இது முழுமையாகக் கட்டப்பட்டுள்ளது. ஆகியவற்றி னின்றும் இந்தக் கோயில் பல்லவர்கள் கலைச் சிறப்புகள் மட்டுமன்றிச் சோழர்கள் கலைச் சிறப்புகளையும் தன்னகத்தே கொண்டிருப்பது தெளிவாகிறது. எனவே தமிழகக் கோயில் கட்டிட மற்றும் சிற்பக் கலை வளர்ச்சியில் இது தனி இடம் பெற்றுள்ளது.



# சுந்தரர் தோன்றிய திருத்தலம்

**தலச்சிறப்பு:**

சோழ நாட்டிற்கும் தொண்டை நாட்டிற்கும் இடைப்பட்ட நாடு நடு நாடு என்று அழைக்கப்பட்டது. பேரரசர்களுக்கு உட்பட்ட குறுநில மன்னர்களால் ஆட்சி செய்யப்பட்ட குறுநில மன்னர்களால் ஆட்சி செய்யப்பட்ட பகுதி அவர் தம் குலத்தால் அழைக்கப் படும் மரபு இருந்துவந்தது. அதை ஒட்டி முனையர் என்ற குறு நில மன்னர்கள் ஆண்ட பகுதி முனைப்பாடி நாடு எனப்பட்டது. இது நடு நாட்டில் ஒரு பகுதியாம். இதைப் ''பெருகிய நலத்தான்மிக்க பெருந்திரு நாடு'' என்று சேக்கிழார் பெருமான் தம் திருத் தொண்டர் புராணத்தில் சிறப்பிக்கிறார். அப்பர், சுந்தரர் ஆகிய இரு பெருமக்கள் இந்நாட்டில் தோன்றியமையால் நலங்கள் பெருகிக் கொண்டுவரும் நாடு என்பதாம். இத்தகைய பெருமைமிக்க முனைப்பாடி நாட்டில் அமைந்துள்ளது திருநாவலூர்,

இது நடு நாட்டில் உள்ள தேவாரப் பாடல் பெற்ற ஆறாவது திருத்தலம். திருநாமநல்லூர் என்றும் வழங்கப் பெறுகிறது. பண்ணுருட்டியினின்றும் உளுந்தூர் பேட்டை செல்லும் வழியில் பண்ணுருட்டியினின்றும் ஏறத்தாழ இருபது கிலோ மீ. தொலைவில் இந்த ஊர் உள்ளது. கெடில நதியின் வடகரையில் நாற்புறமும் வயல்களால் சூழப் பெற்றது. நாவல் மரத்தைத் தலமரமாகக் கொண்ட காரணத்தால் இதன் பெயர் திருநாவலூர் என ஏற்பட்டது. இதன் சிறப்பை,

"அருமறைச் சைவம் ஓங்க அருளினால் அவதரித்து
மருவிய தவத்தால் மிக்கவளம்பதி வாய்மைக் குன்றாத்
திருமறையவர்கள் நீடுந்திருநாவலூர் (148)

என்பர் சேக்கிழார் பெருமான். அரிய சைவம் உலகில் ஓங்கி வளரச் சுந்தரர் அவதாரம் செய்யும் பெரிய தவத்தையும் பல்வேறு வளங்களையும் உடையது. மேலும் உண்மை நெறிபிறழாத திருமறையர் வாழும் ஊர் என்பதாம்.

புராணப் பெருமை :

உமையன்னை இங்கு எழுந்தருளியுள்ள இறைவனை நோக்கித் தவம் புரிய, இறைவன் மனமகிழ்ந்து அன்னையைத் திருமணம் புரிந்த தலம் இது. இரணியன் என்ற அசுரர் பேரரசனால் தேவர்கள் சொல்லொண்ணாத் துன்பங்களை அடைந்தனர். அவர்களைக் காக்க வேண்டித் திருமால் இங்கு எழுந்தருளியுள்ள இறைவனை வழிபட்டு நரசிம்ம அவதாரம் எடுக்கும் ஆற்றலைப் பெற்று, இரணியனைக் கொன்று அமரர்களின் துன்பங்களைத் துடைத்தான்.

திரேதாயுகத்தில் திருமாலும், கிரேதாயுகத்தில் சண்டிகேசுவரரும், துவாபரயுகத்தில் பிரமனும், கலியுகத்தில் சுந்தரரும் பூசித்த தலம் இது. இவர்கள் வணங்கிய நான்கு மரங்களான நாவல்மரம், மகிழமரம், வில்வமரம் மற்றும் வன்னிமரம் ஆகியவை இங்குத் தல மரங்களாக உள்ளன. மேலும் இவர்களால் தொழப் பெற்ற இலிங்கங்களும் திருக்கோயிலின் உள்திருச்சுற்றின் மேல்புறத்தில் காணப்படுகின்றன.

ஆதிசேடன் உமிழ்ந்த நஞ்சால் கருடன் கருநிறம் பெற்றான். அதனால் துன்பம் உற்ற அவன் இங்கு இறைவனைப் பணிந்து தன் குறை நீங்கப்பெற்றான். சுக்கிரனால் வணங்கப் பெற்ற தலம் என்ற காரணம் பற்றி இது சுக்ரதலம் என்றும் தொழப்படுகிறது.

தென்பெண்ணை நதிக்ககரையில் பசுபதிஎன்பவரது ஆணையின்படி, இந்த ஊரைச் சார்ந்த கலியாண சிவாசாரியார் மகன் சிவப்பிரியன் பசுக் கூட்டங்களை மேய்ந்துவந்தான். அதில் கிடைக்கும் பாலை இறைவனை அபிடேகம் செய்வதற்கும், அந்தணர் குழந்தைகளுக்குப் பங்கிட்டுக் கொடுப்பதற்கும் பயன் படுத்தி வந்தான்; ஒருநாள் இறை அன்பு மிக்கு ஓங்க, பாலின் பெரும் பகுதியை இறைவனுக்கு அபிடேகம் செய்துவிட்டான். அதனால் கோபமுற்ற அவனது தந்தை அவனைத் தடியால் அடித்தது மட்டுமன்றி, ஆயுதத்தால் வெட்ட ஓங்கினான். அவ்வமயம் இறைவன் வேடன் உருவில் அதைத் தடுத்தான். சிவப் பிரியனுக்கு சண்டேச பதவியைக் கொடுத்து, சிவ பூசையைத் தடுப்பவரைத் நண்டிக்கும் அதிகாரத்தையும் அளித்தான். இதனால் இந்தப்பதி சண்டேசபுரம் எனப்படுவதாயிற்று.

**தீர்த்தச் சிறப்பு :**

கோயிலுக்கு மேல்பால் ஓடமாக ஓடுவது கோமுகி தீர்த்தம். ஊருக்குத் தெற்கில் கெடில நதியும், வடக்கில் தென்பெண்ணை ஆறும் செல்கின்றன. இவை யன்றி, சூலதீர்த்தம், கருடதீர்த்தம், சுக்ரதீர்த்தம் ஆகியவையும் உள்ளன.

**சமய மாண்பு :**

கைலையில் இறைவனுக்கு அணியவேண்டிய மலர் மாலைகளையும் திருநீற்றையும் எடுத்துக் கொடுக்கும் பேறுபெற்றவர் சுந்தரர், ஒரு சமயம் அமரர்களும் அவுணர்களும் சாகாமல் இருக்க அமுதுபெறும் நோக்கத்துடன் பாற்கடலை வாசுகி என்னும் பாம்பைக் கொண்டு கடைந்தனர். அவ்வமயம் தோன்றிய ஆலகாலவிடத்தை இறைவனது ஆணையின்படி சுந்தரர் அதைச் சிறிதாகச் செய்து தன் கையில் கொண்டு வந்து

இறைவனிடம் கொடுத்தார். இதனால் அவர் ஆலால சுந்தரர் என்ற பெயர் பெற்றார். பின்னர் ஒரு நாள் அவர் இறைவிக்கு மலர்களைக் கொய்யும் அனிந்திதை, கமலினி ஆகியோரை நந்தவனத்தில் கண்டு மனம் சஞ்சலம் அடைந்தார். அதனால் இறைவனது ஆணையின்படி இந்தத் தலத்தில் ஆதிசைவர் குலத்தைச் சார்ந்த சடையனாருக்கும் இசைஞானியாருக்கும் மகவாகத் தோன்றினார். இவரது பிறப்பை,

"அருமறைச் சைவம்ஓங்க அருளினால் அவதரித்த" (145)

என்றும்,

'தீதுஅகன்று உலகம் உய்யத்திரு அவதாரம் செய்தார்" (149)

என்றும் சேக்கிழார் பெருமான் வெகு அழகாக அருளியுள்ளார். தீமை நீங்கி உலகம் உய்யவும், சைவ நெறி ஓங்கி வளரவும் இறைவனது திருவருளினால் இவர் தோன்றினார் என இவரதுஅவதாரத்தின் காரணத்தைக் குறிப்பிட்டுள்ளார். ஏனைய உயிர்களைப் போன்று மீண்டும் மீண்டும் பிறந்து இறப்பதற்காக இவர் பிறக்கவில்லை. இவரது பிறப்பு பெருநோக்கை அடிப்படையாகக் கொண்டது. இவரது சமயத் தொண்டினால் மட்டும் சைவ நெறி தழைத்து ஓங்கவில்லை. இவர் அருளிய "திருத்தொண்டத் தொகை"யை முதனூலாகக் கொண்டு சேக்கிழார் பெருமான் "திருத்தொண்டர் புராணத்தை" இயற்றினார், பக்தி மணத்தைப் பரப்புவதில் தன்னிகரற்ற இலக்கியமான திருத்தொண்டர் புராணம் சைவ நெறி உலகில் என்றும் நிலைத்துப் பெருக வற்றாத ஊற்றாக அமைந்துள்ளதைக் கற்றோரும் மற்றோரும் உணர்வர்.

"தவத்தினால் மிக்கோர் போற்றுநம்பி ஆரூரர்" (150)

எனச் சேக்கிழார் பெருமான் போற்றுவதினின்றும் தேவாரம் பாடிய மூவரில் ஒருவரான இவரது

மாண்பினை உய்த்து உணரலாம். 'ஆளுடைய நம்பி' எனச் சிறப்பிக்கப் பெறும் இவர் இறைவனால் 'வன்றொண்டர்' என்று அழைக்கப்பட்டார்; அடியவர்களால் தம்பிரான் தோழர் எனப் பெருமைப்படுத்தப் பட்டார். 'அந்த மில் புகழ் ஆலால சுந்தரன்' 'திருநாவலூராளி என்றெல்லாம் சேக்கிழார் பெருமானால் பலபடப் பாராட்டப் பெற்றார். அத்தகைய பெருந்தகை இந்தத் தலத்தில் தோன்றினார் என்பது ஒனறே போதும் இத்தலத்தின் சமயச்சிறப்பைப் பறைசாற்ற!

ஆண்டுதோறும் பங்குனி மாதத்தில் 23ஆந் தேதி முதல் 27ஆந் தேதி வரை ஐந்து நாட்களுக்கு சூரிய ஒளி இறைவன் மீது படுகிறது. இது சூரியன் இறைவனைப் பூசிப்பதாகப் போற்றப்படுகிறது. இந்த ஐந்து நாட்களில் மட்டும் அன்னைக்குப் பூசை செய்தபின் தான் இறையன்பர்களுக்குத் திருநீறு வழங்கப்படுகிறது.

## திருக்கோயிலின் அமைப்பு :

இரண்டு திருச்சுற்றுகளைக் கொண்ட கோயிலின் வாயிலை ஐந்து நிலை கோபுரம் அணி செய்கிறது. கோபுர வாயிலின் வலது புறம் உள்ள திருமுன்னில் கைகளில் தாளத்துடன் சுந்தரர் பரவையார் மற்றும் சங்கிலியாருடன் காணப்படுகிறார். இறைவனது கருவறைக்கு எதிரில் நந்தி, கொடிமரம், பலிபீடம் ஆகியவை உள்ளன. திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் பிரகாரகணபதியும், மதிலின் மேல் புறச்சுவரில் சுந்தரரின் வடிவம் அமைக்கப்பட்டு, அதற்குக் கீழே யானை காணப்படுகிறது. இது சுந்தரர் வெள்ளை யானை மீது கயிலை சென்றதைக் குறிக்கிறது. திருச்சுற்றின் வடகிழக்கு மூலையில் யாகசாலை உள்ளது. கோயிலுக்கு வெளியில் தேர் காணப்படுகிறது.

இறைவன் மற்றும் அன்னை திருமுன்களுக்கு இடையில் திருமால் திருமுன் உள்ளது. சிக்கல் போன்ற தலங்களில் திருமால் திருமுன் கோயிலுக்குள் தனியாக உள்ளதேயன்றி, மருதமலை போன்ற தலங்களில் இறைவன் மற்றும் இறைவி திருமுன்களுக்கு இடையில் முருகன் திருமுன் இருப்பது போன்று இடையில் இல்லை. இது ஒரு அரிய அமைப்பாக உளளது.

உள்திருச்சுற்றில் வாயிலுக்கு வலப்புறத்தில் நரசிங்க முனையரையர் பூசித்த பதினாறு பட்டை இலிங்கம் உள்ளது. தென்புறத்தில் பிள்ளையார், அறுபத்து மூன்று நாயன்மார் ஆகியோரின் வடிவங்களும் காணப்படுகின்றன. மேலும் இங்கு மகேசுவரர், நாககன்னியர், சப்த மாதர் ஆகியோரும் உள்ளனர். மேல்புறத்தில் வலம்புரிப் பிள்ளையார், மயில் மீது சண்முகன், நான்கு யுகங்களில் வணங்கப்பட்ட இலிங்கங்கள், திருமால், சண்டிகேசுவரர், பிரமா, கஜலட்சுமி ஆகியோரைக் காணலாம். வடபுறத்தில் சப்தரிஷி லிங்கம் உள்ளது. வாயிலுக்கு இடப்புறத்தில் நவகோள்கள் அமைக்கப்பட்டுள்ளன. சூரியன் பொதுவாகக் கிழக்கு நோக்கி இருக்கும். ஆனால் இங்குக் குறிப்பிட்ட தினங்களில் சூரியன் இறைவனைப் பூசிப்பதால், மேற்கு நோக்கி காணப்படுகிறான். மேலும் சக்ரலிங்கம், பைரவரின் இரு வடிவங்கள், சூரியன் திருவுரு ஆகியவையும் உள்ளன.

கருவறையை ஒட்டி அர்த்தமண்டபம், மகா மண்டபம், முக மண்டபம் ஆகியவை அமைக்கப்பட்டுள்ளன. கருவறையின் முன்னால் பல வகைகள் கொண்ட வாயிற் காப்போர் கதையுடன் காணப்படுகின்றனர். மகாமண்டபத்தில் சுந்தரர், அவரது இரு துணைவியர், தாய்தந்தையர், ஆடவல்லான், சிவனுமை முருகு, முருகன், சண்டிகேசுவரர், பிச்சை உகக்கும் பெம்மான், நரசிங்க முனையரையர் ஆகியோரின்

திருவீதிஉலா நாயகர் வடிவங்கள் உள்ளன. அர்த்த மண்டபத்தின் வடப்புறச் சுவரில தேவாரம் பாடிய மூவரின் திருவுருவங்களுடன் சண்டிகேசுவரர் இறைவனைப் பூசித்தல், அவருக்கு இறைவன் சண்டேச பதவியை அளித்தல் ஆகியவை புடைச் சிற்பங்களாக உருவாக்கப்பட்டுள்ளன. கோமுகத்திற்கு அருகில் சண்டிகேசுவரர் திருமுன் உள்ளது.

கருவறையின் விமானம் சதுர அமைப்பினைக் கொண்டது. கூடுகளுடன் கூடிய கபோதத்தை ஒட்டி பூதகணங்களும், நாட்டியப் பெண்களும் அமைக்கப் பட்டிருக்க, கீழ்த்தளத்தில் யாளிகளின் வடிவங்கள் காணப்படுகின்றன. கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் உள்ள புரைகளில் தென்புறத்தில் ஆலமர் செல்வனும், வடபுறத்தில் துர்க்கையும் அமைக்கப் பட்டுள்ளனர்.

இறைவனின் திருப்பெயர், நாவலேசுவரர் என்பது. சுந்தரர் பக்தனாக பூசித்தமையால், இவர் பக்த ஜனேசுவரர் எனப் பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது.

இறைவனின் திருமுன்றுக்கு இடப்புறத்தில் உள்ள அன்னையின் திருமுன் நந்தி, பலிபீடம், முன்மண்டபம், அர்த்தமண்டபம், கருவறை ஆகியவற்றைக் கொண்டது. அர்த்த மண்டபத்தில் பிள்ளையார் மற்றும் துர்க்கை காணப்படுகின்றனர். அன்னையின் திருப்பெயர்கள் சுந்தராம்பிகை, மனோன்மணி என்பனவாம். இவள் முனைப்பாடிக் குறுநில மன்னர்களின் குலதெய்வமாக விளங்கியவள். நான்கு கைகள் கொண்ட இவரது பின் இருகைகளில் அக்கமாலையும், தாமரையும் இருக்க, முன் இருகைகள் அபய மற்றும் வரத முத்திரைகளில் அமைக்கப்பட்டுள்ளன. நான்கு தல மரங்களில் நாவல் மற்றும் மகிழ மரங்கள் [illegible]

வலப்புறத்திலும், வில்வமரம் எதிரிலும் உள்ளன. வன்னிமரம் நந்தவனத்தில் இருக்கிறது.

திருமால் திருமுன் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. கருடன் தன்னை நோக்கி சேவிக்க வரதராஜப் பெருமாள் என்ற பெயரில் திருமால் நின்ற திருக்கோலத்தில் தன் இரு துணைவியருடன் மூலவராக எழுந்தருளியுள்ளான். திருவீதி உலா நாயகரின் திருப்பெயரும் வரதராஜப் பெருமாளே; தாயாரின் பெயர் கனகவல்லித் தாயார் என்பதாம்.

திருக்கோயிலை அடுத்து சுந்தரமூர்த்தி சுவாமிகள் பிறந்த தலத்தில் தற்காலத்தில் மடம் ஒன்று கட்டப் பெற்றுள்ளது.

இலக்கியப் பெருமை:

சுந்தரர் தன்னை இறைவன் திருவெண்ணை நல்லூரில் தடுத்து ஆட்கொண்டபின், திருநாவலூர் திரும்பி வந்து இறைவனைப் பணிந்து திருப்பதிகம் பாடினார். ஆனால் அப்பதிகம் கிடைத்திலது. பிற்காலத்தில் அவர் இங்கு வந்த போது பாடியருளிய ''கோவலன் நான்முகன் எனத் தொடங்கும் திருப்பதிகமே கிடைத்துள்ளது. இது திருநாவலூர் மற்றும் திருவெண்ணெய் நல்லூர் என்ற இருதலங்களையும் சேர்த்துப் பாடியதாகும்.

இந்தத் திருப்பதிகத்தில் உள்ள திருப்பாடல்களில் இறைவன் ஓலையைக் காட்டி இவரைத் தடுத்து ஆட்கொண்டமைக்கு அகச்சான்றுகள் நிறைய உள்ளன. 1, 3, 4, 6 முதல் 9 வரை எண்ணுள்ள திருப்பாடல்களில் திருவெண்ணெய் நல்லூரில் இறைவன் தம்மை ஆட்கொண்டதை ''வெண்ணெய் நல்லூர் வைத்து எனை ஆளுங்கொண்ட'' எனக் குறிப்பிட்டுள்ளார். இரண்டா

வது திருப்பாடலில் தான் இறைவனிடம் வன்மைகள் பேசி வன்றொண்டர் என்ற பெயர் பெற்றமையை, 'வன்மைகள் பேசிட வன்றொண்டன் என்பதோர் வாழ்வு தந்தார்' என அருளியுள்ளார். ஓலையைக் காட்டி இறைவன் தம்மை ஆட்கொண்டதை ''ஓர் ஆவணத்தால் எம்பிரானார் வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை ஆளுங்கொண்ட'' என ஐந்தாவது திருப் பாட்டிலும், ''ஆவணங்காட்டி நல்வெண்ணெயூர் ஆளுங் கொண்டார்'' எனப் பத்தாவது திருப்பாட்டிலும் குறிப்பிட்டுள்ளார். எட்டாவது திருப்பாட்டில் ''வாயாடி மாமறை ஓதி ஓர் வேதியன் ஆகி வந்து'' இறைவன் அந்தணன் உருவில் வந்ததை அருளியுள் ளார்.

இங்கு சுற்றுப்புறத் தெய்வமாக உள்ள முருகன் 'கோலமறை' எனத் தொடங்கும் அருணகிரிநாதரின் திருப்புகழ் பாடல் பெற்றவன்.

## கலைத் திண்மை

கருவறையின் வெளிப்புறச் சுவரில் தென்புறமாக உள்ள புரையில் காணப்படும் ஆலமர் செல்வர் பொது வாகக் காளையின்றி அமைக்கப்பட்டிருப்பான். மயிலாடு துறை, மேலக்கடம்பூர், சேந்தமங்கலம் போன்ற ஒரு சில கோயில்களில் அவன் காளையுடன் உருவாக்கப் பட்டுள்ளான்; இன்னும் ஒரு சில கோயில்களில் உதாரண மாக மூவர் கோயிலில் ஆகம விதிகளின்படி நின்ற நிலையில் வீணையுடன் ''வீணாதர தட்சிணா மூர்த்தி'' என்ற பெயரில் காணப்படுகிறான்; இவற்றினின்றும் வேறுபட்ட வடிவம் இங்கு உள்ளது; நிறை திருக் கோலத்தில் உள்ள அவனுக்குப் பின்னால் ஆணோடு பெண்ணாகிய பெம்மான் வடிவில் உள்ளது போன்று காளை காணப்படுகிறது. அந்த வடிவத்தில் இருப்பது போன்று இங்கும் பின் இருகைகளில் ஒன்று காளை மீது

வைக்கப்பட்டுள்ளது. முன் இருகைகளில் ஓலைச் சுவடியும் அக்கமாலையும இருக்க, பின் இடது கையில் பாம்பு உள்ளது. சுற்றும் முனிவர்களோ அல்லது காலடியில் முயலகனோ அமைக்கப்படவில்லை. இந்த வடிவம் சுந்தரருக்கு உபதேசம் செய்த ஒன்று என்று இங்கு சொல்லப்படுகிறது.

இறைவனின் கருவறைக்கு மேலே உள்ள விமானத்தில் கூடுகளுடன் கூடிய கபோதத்திற்குக் கீழ் நடனப் பெண்கள், இசைக் கருவிகளுடன் கூடிய பெண்கள் காணப்படுவது ஒரு அரிய அமைப்பாகும். இது கிராமம் போன்ற ஒரு சில கோயில்களில் தான் உள்ளது.

இங்குள்ள செப்புச் சிலைகளில் சுந்தரரைத் தன் மகனாகக் கொண்ட முனைப்பாடி நாட்டுக் குறுநில மன்னர் நரசிங்க முனையரையர், மற்றும் பிச்சை உகக்கும் பெம்மான் வடிவங்கள் உலோகப்படிமக் கலையில் தமிழகம் அடைந்திருந்த உன்னத நிலையை உணர்த்துவனவாக உள்ளன.

## கல்வெட்டுச் செய்திகள்

கல்வெட்டுகளில் இந்தக் கோயிலின் பெயர் "திருத்தொண்டீசுவரமுடையார் கோயில்" எனக் காணப்படுகிறது. கி. பி. 907 முதல் 955 வரை சோழ அரியணையை அலங்கரித்த முதல் பராந்தக சோழனின் 29ஆவது ஆட்சி ஆண்டில் அதாவது கி.பி 93[illegible]ல் அவனது மகனான இராஜாதித்ய சோழனால் இது கல்லால் கட்டப் பெற்றது. எனவே இது "இராஜாதித்ய சோழீச்சரம்" என்ற பெயர் பெற்றது. இராஜாதித்யனும் அவனது சேனையைச் சேர்ந்த அலுவலர்கள் மற்றும் வீரர்கள் பலரும் இந்தக் கோயிலுக்குப் பல நிபந்தங்கள் அமைத்துள்ளனர்.

கருவறைக்கு முன் உள்ள மண்டபங்களை இவ்வூர் வியாபாரி ''வேளூர் கிழவர் பள்ளிபட்டண சுவாமி' என்பவர் கட்டியுள்ளார். இந்தச் செய்தியைத் தெரிவிக்கும் கல்வெட்டில் அரசனது பெயர் குறிக்கப் படாமையால், இவை எந்த ஆண்டு கட்டப்பட்டன என்பதை அறிய இயலவில்லை. மாமன்னன் முதலாம் இராசராச சோழனின் இருபத்தொன்றாம் ஆட்சி ஆண்டில் அதாவது கி. பி. 1006இல் மும்முடிச் சோழ பிரமராயக் கன்மி கழுப்பருடையான் சித்ரகுப்தன் ஐயக்குமரடி என்பான் இங்குள்ள ஆடவல்லானுக்கு திருநாவலூரார்க் கோலால் 1750 பலம் நிறையுள்ள பாத பீடம் ஒன்றை நிவந்தமாகக் கொடுத்துள்ளான். பகைதிர ஒருவன் நுந்தாவிளக்கு நிவந்தம் அளித்திருப்பது இவ்வூர்க் கல்வெட்டால் அறியப்படும் புதிய செய்தி யாகும்.

இந்தலூர் முதலாம் பராந்தக சோழன் காலத்துக் கல்வெட்டுகளில் ''திருமுனைப்பாடி திருநாவலூர்'' என்றும், ''பூமியும் திருவும் தானே புணர'' எனத் தொடங்கும்மெய்க்கீர்த்தியையுடையவிசயராசேந்திரன் கல்வெட்டில்'' இராஜேந்திர வளநாட்டுத் திருமுனைப் பாடிமேலூார் நாட்டுத் திருநாவலூர்'' என்றும் ''பூவேலி வளர் திருப்பொன் மாது புணர' எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய குலோத்துங்க சோழன் கல்வெட்டில் ''இராஜராஜ வளநாட்டுத் திருமுனைப்பாடி மேலூார் நாட்டுத் திருநாவலூார்'' என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது.

**திருவிழாக்கள் :-**

இந்தக் கோயிலில் அநேகமாக எல்லா மாதங்களிலும் திருவிழாக்கள் நடைபெற்று வருகின்றன. அவற்றில் குறிப்பிடத்தக்கவை :-

சித்திரைப் பெருவிழா : பத்து நாட்கள் திருவிழா:
வைகாசி மூலம் : ஞானசம்பந்தர் குரு பூசை

| | | |
|---|---|---|
| ஆனி மகம் | : | மணிவாசகர் குருபூசை |
| ஆடி சுவாதி | : | ஐந்து நாள் திருவிழா; சுந்தரர் மற்றும் ஏனைய நாயன்மார்கள் குருபூசை; சுந்தரர் சேரமான் பெருமாள் நாயனாருடன் வெள்ளை யானை மீது கயிலை செல்லும் திருவிழா, |
| ஆடி உத்திரம் | : | சுந்தரர் பிறந்த நாள் |
| ஆவணி உத்திரம் | : | சுந்தரர் அவதார விழா |
| புரட்டாசி சதயம் | : | நரசிங்க முனையரையர் குருபூசை |

பிற :

இங்குள்ள நந்தவனத்தில் ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் செம்பன்னீர் மரம் அளவின்றிப் பூக்கின்றது. தண்ணீர் படாவிட்டால், மூன்று நாட்கள் வரை அது குமையாது நன்றாக இருக்கிறது எனவே இது ஒரு அரிய பூவாகக் கருதப்படுகிறது.

— — —

## சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட திருத்தலம்

இது நடுநாட்டில் உள்ள தேவாரப்பாடல் பெற்ற பதினான்காவது தலமாகும். தென்னார்க்காடு மாவட்டத்தில் திருக்கோயிலூரினின்றும் பண்ணுருட்டி செல்லும் வழியில் இது அமைந்துள்ளது.

அன்னை வெண்ணையாலாகிய கோட்டையுள் இறைவனை நோக்கித் தவம் புரிந்தமையால் இது இது திருவெண்ணெய் நல்லூர் எனப் பெயர் பெற்றது. மறைகள் மூங்கில் வடிவில் இறைவனைப் பூசித் தமையால், வேணு வனம் என்றும், திருமாலால் வணங்கப் பெற்றதால் வைகுந்தபுரி என்றும், அயன் பூசித்ததால் வேதபுரி என்றும் சண்முகன் போற்றிய காரணத்தால் சண்முகபுரி என்றும், சுந்தரரை ஆட்கொண்டமையால் ஆட் கொண்ட புரம் என்றும், பாண்டவர்களில விசயன் பரவிய காரணத்தால் விசயபுரி என்றும், கம்பன் வணங்கியமையால், கம்பமாபுரி என்றும், மெய்கண்டர் போற்றியமையால் மெய்கண்டபுரி என்றும் இத்தலம் அழைக்கப்படுகிறது.

இது பெண்ணையாற்றின் தென்கரையில் அமைந் துள்ளது என்பதை ஆளுடைய நம்பிகள் தம் தேவாரத் திருப்பகத்தில்,

> ''காரூர்புனல் எய்திக் கரைகல்லித் திரைக்கையால்
> பாரூர்புகழ் எய்தித்திகழ் பன்மாமணி உந்திச்
> சீரூர் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர்''
>
> (10)

எனக் குறிப்பிட்டுள்ளார். தற்காலத்தில் இது முன்நாள் ஓடிய வழியில் மலட்டாறு என்ற பெயரில் செல்கிறது.

நீரில்லாக் காரணத்தால் இப்பெயர் பெற்று இருக்கலாம் அல்லது இப்பகுதி மலாடு எனப் பெறுவதால், இது மலட்டாறு என அழைக்கப்பெற்று இருக்கலாம்.

புராணப் பெருமை:

திதி என்பாளின் அறிவுரைப்படி, அவள் மகள் தானவேச்சாரி எருமை வடிவில் அயனை நோக்கித் தவம் புரிந்து அமரர்களை வெல்ல ஒரு மகனைப் பெற்றாள். அவள் எருமை வடிவில் தவம் புரிந்தமையால், எருமை உருவைக் கொண்டிருந்த அவள் மகன் தவத்தால் பெரு வரங்களைப் பெற்றான். அதனால் செருக்குற்று அனைவருக்கும் துயர் விளைவித்தான். அதைக் கண்டு ஆற்றாத சக்தி தன் ஒரு கூறாகிய சாமுண்டியை அனுப்பினாள். அவள் மகிடாசூரனைக் கொன்றாள். அமரர்களின் பூசனையால் சினம் தணிந்த அன்னை இங்கு வெண்ணையைக் கோட்டையாக அமைத்தாள். அதன் நடுவில் அவள் இறைவனை நோக்கி அருந்தவம் புரிந்தாள். இறைவன் அவளது தவத்திற்கு மகிழ்ந்து மகிடாசூரனைக் கொன்ற பழியைத் தீர்த்தான். அவளது நீலி என்ற பெயரை மாற்றி மங்களாம்பிகை எனப் பெயரிட்டான். வெண்ணையின் நடுவில் இருந்து தவம் புரிந்தமையால் வேற் கண்ணி என்றும் வெண்ணெய் நாயகி என்றும் பெயர்களைப் பெற்றாள். இந்தத்தலம் திருவெண்ணெய் நல்லூர் என அழைக்கப்படலாயிற்று.

தாருகாவனத்து முனிவர்கள் அகந்தையில் அபிசார வேள்வி (தீயவேள்வி) இயற்றினர். அதினின்றும் தோன்றிய புலி, சூலம், மான், பாம்புகள், பூதங்கள், வெண்டலை, உடுக்கை முயலகன் ஆகியோரைச் சிவபெருமானைக் கொல்ல ஏவினர். அவர்களது எண்ணம் ஈடேறவில்லை. எனவே அவர்கள் தம் பகையை மறந்து

இந்தத் தலம் இறைவனுக்கு ஏற்றது என்று இங்கு வந்து தவம் ஆற்றினர்.

"மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்து அடையில்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும்
(திருத்தொண்டர்புராணம் 1975)

என்பது சேக்கிழார் பெருமான் திருவாக்கு. பெருங் கருணைக் கடலாகிய இறைவன் அவர்கள் தம் தவறைப் பொறுத்து, அருள்புரிந்தான். இதனால் இங்குள்ள கோயில் 'அருட்டுறை' எனப் பெயர் பெறவேண்டும் என முனிவர்கள் இறைவனை வேண்டினர்.

"மருட்டுறை புகுத்தியாங்கெம்
மமதையாற் புரிந்தவற்றைப்
பொருட்டெனக் கொண்டிடாது பொறுத்து
அருள் புரிதலாலே
அருட்டுறை யெனும்பேர் இந்த
ஆலயந்தனக்குப் பூவில்
சிருட்டி யுள்ளளவும் நின்று சிறப்பிக்க
வேண்டும் என்றார்" (5-26)

என்பது தல புராணம். மேலக் கடம்பூரில் கரக்கோயில் என்றும், கருரில் ஆனிலை என்றும் கோயில் அழைக்கப் படுவது போன்று, இங்குள்ள திருக்கோயில் "திரு அருட் டுறை" எனப் பெயர் பெற்றது. பெரும் பிழை புரிந்த தாருகா வனத்து முனிவர்களுக்கு இந்த இறைவன் அருள் புரிந்த காரணத்தால்' அவன் கிருபா புரீசுவரர் என்ற பெயரைப் பெற்றான்.

இந்த மறைகள் இறைவன் ஆணைப்படி மூங்கில் வடிவில் தவம் புரிய, அவற்றின் நடுவில் இறைவன் தீயுருவாகத் தோன்றினான். அவை கேட்டுக் கொண்டபடி இங்கு அவன் இலிங்கமாக எழுந் தருளினான். நாளடைவில் இலிங்கத் திருமேனியை மூங்கில்கள் மூடிவிட்டன. பாற்குடம் கொண்டு சென்ற

இடையனை இந்த இடத்தில் மூங்கில் தடுக்க, அவன் இடற, பாற்குடம் கீழே கவிழ்ந்தது. அவன் மூங்கிலைத் தறித்த பின்னும் தொடர்ந்து இதுபோன்ற பல நாட்கள் நடந்தன. இதை அறிந்த ஏனையோர்கள் ஆயுதங்களால் மூங்கிலை அடியோடு பெயர்த்து எறிய முற்பட்டபோது இரத்தத்துடன் இலிங்கத் திருவுரு அவர்களுக்குத் தெரிய வந்தது. இதை அறிந்து அப்பகுதி அரசன் ஒரு திருக்கோயிலை எடுப்பித்தான். பாண்டியன் ஒருவன் தென்பாகத்தில் பாண்டிய குளம் என்ற குளத்தை வெட்டினான். பிற்காலப் புலவர் களான இரட்டையர்கள்,

> "வேய் ஈன்ற முத்தர் தம்மை வெட்டினானே இடையன்
> தாய் ஈன்ற மேனிதயங்கவே-பேயர்கள்
> எத்தனைநாள் என்றே இடறுவான் பால்குடத்தை
> அத்தனையும் வேண்டும் அவர்க்கு"
>
> (தனிப்பாடற்றிரட்டு-445)

என இது பற்றி நகைச்சுவையுடன் பாடியுள்ளார்கள். இறைவனை "வேயீன்ற முத்தர்" எனக் குறிப் பிட்டுள்ளார்.

இந்தத் தலத்தில் தரும தேவதை காளையாகப் பூசித்து இறைவனது ஊர்தி மற்றும் கொடியாகும் பேற்றினைப் பெற்றது. அயனும் திருமாலும் வேண்ட, இறைவன் இங்கு நடனம் ஆடி அருளினான். தாருகனைக் கொன்று கிரவுஞ்ச மலையைப் பிளந்தபின், முருகன் இங்கு அன்னையையும் அண்ணலையும் வணங்கி, சூரனாதியரைக் கொல்லச் சத்தி வென்றி வேலினைப் பெற்றான். சூர் மாதடிந்த பின் தன் இரு துணைவி யருடன் முருகன் மீண்டும் இங்கு வந்து மயில் மீது நடனம் புரிந்ததாகத் தலபுராணம் கூறுகிறது. பாண்டவரில் அருச்சுனன் தன் மூத்தோனாகிய தருமனும் பாஞ்சாலியும் தனித்து இருந்ததைப் பார்த்த பாவத்தை இங்கு வந்து போக்கிக் கொண்டான். மேலும்

இறைவனை வேண்டி மகப்பேறு அடையும் வரத்தையும் பெற்றான். கருவுற்ற பசுவை வேள்வி செய்த பாவத்தை வீதி கோத்திரர் என்ற அந்தணன் இங்கு வந்து போக்கிக் கொண்டான். இவனுக்குத் திருவோண நாளன்று இறைவன் காட்சி அளித்து அருள் புரிந்த காரணத்தால், இந்தப்பதி "திருவோணநல்லூர்" என்ற பெயரும் பெற்றது.

**தீர்த்தச்சிறப்பு :**

தென்பெண்ணையின் சிறப்பைத் தல புராணம் பல இடங்களில் புகழ்கிறது. குறிப்பாகப் பதினொன்றாவது படலமான "வீதி கோத்திரர் வீடு பெற்ற படலத்தில்" ஒன்பது முதல் இருபது வரையிலான பாடல்களில் இதன்பெருமை பலபடப் பேசப்படுகிறது. எப்பவழுந்தீர் கங்கையும் இதனுக்கு இணையாகா" (11-10) என்பது தல புராணம். இதன்றி நீலி என்ற பெயரில் அன்னை சக்தி அகழ்ந்திட்ட நீலியாள் தீர்த்தமும், இறைவன் தண்டால் உண்டாக்கிய தண்டு தீர்த்தமும் உள்ளன. தண்டு தீர்த்தம் சிவகங்கை என்றும்; காம தீர்த்தம் என்றும் அருட்டுறை தீர்த்தமென்றும் தலபுராணத்தில் போற்றப் படுகிறது. மேலும் பாண்டவ தீர்த்தம், வைகுண்ட தீர்த்தம், வேததீர்த்தம் எனப் பல இங்கு உள்ளன. அருட்டுறை தீர்த்தத்தில் பங்குனி மாதத்தில் முழு நிலவும் உத்தர நட்சத்திரமும் கூடிய நாளிலும், நீலியான் தீர்த்தத்தில் ஆடிப்பூரத்திலும் நீராடுவது சிறப்பு மிக்கதாகக் கருதப்படுகிறது.

**சமய மாண்பு :**

"மாதவஞ் செய்த தென்திசை வாழ்ந்திட
தீதிலாத் திருத் தொண்டத் தொகை"

(திருத்தொண்டர் புராணம்-35)

பாடி அருளிய தம்பிரானின் தோழராம் சுந்தரர் சாதாரண மக்களைப் போன்று மண்ணுலக வாழ்வில்

சிக்கி உழலாமல் அருமறை சைவம் ஓங்க இறைவன் தடுத்தாட் கொண்ட பதி இது. கைலையில் இறைவன் அணிந்து கொள்ளும் மலர் மாலைகளையும் திருநீற்றையும் எடுத்துக் கொடுப்பவர் சுந்தரர், வானவர்களும் தானவர்களும் அமுது பெற வேண்டிக் கடலைக் கடைந்தபோது தோன்றிய ஆலகாலவிடத்தைச் சிறிதளவு செய்து தன் கையில் ஏந்தி இறைவனுக்கு அளித்தமையால் ஆலால சுந்தரன் எனப்பட்டார். ஒரு சமயம் அவர் இறைவிக்கு மலர்களைக் கொய்யும் அனிந்திதை, கமலினி என்ற இருவரையும் நந்தவனத்தில் கண்டு அவர்கள் பால் மனம் செலுத்தினார். அதனால் இறைவன் ஆணைப்படி அவர் நடுநாட்டில் உள்ள திருநாவலூரில் ஆதிசைவர் குலத்தில் சடையனாருக்கு இசைஞானியார் பால் ''தீதகன்று உலகம் உய்யத் திருவவதாரஞ் செய்தார்''. அந்நாட்டு அரசரான நரசிங்கமுனையரையர் அவர்பால் கொண்ட அன்பால் அவரை வளர்த்தார். மன்னர் திருவும் வைதீகத் திருவும் பொங்கிய அவர் புத்தூர் சடங்கவி சிவாசாரியார் புதல்வியை மணக்க இருந்த சமயம், இறைவன் முதிய அந்தண வடிவில் வந்து சுந்தரரைத் தன் அடிமை என வாதிட்டுத் திருமணத்தைத் தடுத்து விட்டார். தான் திருவெண்ணெய் நல்லூரில் உறைவதாகக் கூறித் தன் வழக்கை எடுத்துக்கூற இறைவன் இங்கு வர, சுந்தரரும் தன் சுற்றத்தாருடன் இங்கு வந்தார். இங்குள்ள அந்தணர்களின் பேரவையில் இறைவன் தன் வழக்கைக் கூற, அவர் காட்டிய ஓலையின் ஆதாரத்தின் பேரில் சுந்தரர் இறைவனாகிய முதிய அந்தணரின் அடிமை என முடிவு கட்டப்பட்டது. இறைவன் தன் இருப்பிடத்தைக் காட்டுவதாகக் கூறித் திருக்கோயிலுள் புகுந்து மறைந்து விட்டார். அவரைப் பின் தொடர்ந்து தனியாக வந்த சுந்தரர் முன் அன்னையுடன் இறைவன் காளை ஊன்றி மேல்தோன்றி உண்மையே உணர்த்திய திருக்கோயில் இது.

"மற்று நீவன்மை பேசி வன்றொண்டன் என்றுநாமம்
பெற்றனை; நமக்கும் அன்பிற்பெருகிய சிறப்பின்மிக்க
அர்ச்சனை பாட்டேயாகும்; ஆதலால் மண்மேல்நம்மைச்
சொற்றமிழ் பாடுக" என்றார் தூமறை பாடும்வாயான்
(திருத்தொண்டர் புராணம்-216)

என அவருக்கு வன்றொண்டன் எனப் பெயரிட்டுத் தம் மீது பாடல்கள் பாடும்படி இறைவன் அருளினான், குணப்பெருங்கடலாகிய இறைவனைத் தாம் எவ்வாறு பாட இயலும் என சுந்தரர் விண்ணப்பித்தார். அவ் வமயம் இறைவன் மணப்பந்தலில் நீ என்னைப் பித்தன் என மொழிந்தாய், அதை வைத்துப் பாடுக" என்றார். உலகெல்லாம் உவப்ப சுந்தரர்: "பித்தா பிறை சூடி" என்ற தம் முதல் திருப்பதிகத்தை இங்கே பாடி யருளினார். இவ்வாறாகப் பாலைக் கொண்டு ஆளுடைய பிள்ளையையும், சூலையைக் கொண்டு ஆளுடைய அரசுகளையும் ஆட்கொண்ட இறைவன் இங்கு ஓலையைக் கொண்டு ஆளுடைய நம்பிகளை ஆட்கொண்டான். இறைவன் இவ்வாறு தம்மை ஆட்கொண்டதைச் சுந்தரர் தம் திருநாவலூர் திருப் பதிகத்தில் ஆவணங்காட்டி நல்வெண்ணையூர் ஆளுங் கொண்டார். (10) எனக் குறிப்பிட்டுள்ளார். சுந்தரரைத் தடுத்தாட்கொண்டமையால், இறைவன் "தடுத்தாட் கொண்டதேவர்" என்ற பெயரைப் பெற்றான்.

அப்பர் பெருமான் 'திருவெண்ணெய் நல்லூரும்... வணங்கி வளந்தமிழ்பாடி' (1413) எனச் சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தில் குறிப் பிடுவதினின்றும் அவரும் இங்கு வந்து இறைவனை வணங்கி, திருப்பதிகம் பாடியது தெரியவருகிறது; ஆனால் அவரது திருப்பதிகம் கிடைத்திலது.

12ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சைவ சமய சந்தானாசாரியர் நால்வரில் முதன்மையானவரான மெய்கண்ட சுவாமிகள் தம் குழந்தைப் பருவத்தில்

வாய் பேசாது இருந்தார். அதனால் அவரது தாய் மாமனான காங்கேய பூபன் (சடையப்ப வள்ளலின் மகன்) இங்கு கூட்டி வந்து இங்கு உள்ள இறைவனிடம் முறையிட்டான். இவர் வீதியில் விளையாடிய காலத்து பரஞ்சோதி முனிவரிடம் உபதேசம் பெற்றார். சுவேதவனப் பெருமாள் என்ற அச்சிறுவன் நாள்தோறும் திருக்கோயிலில் உள்ள பொல்லாப் பிள்ளையார் திருமுன் சென்று அவரிடம் வாய் திறந்து நூற்களைக் கற்று வந்தார். இவ்வாறு கலை பலவும் நன்றாகப் பிள்ளையாரிடம் பயின்றபின்,

> "சிறிய ஆடியுட் பெரும் பொருள்
> செறிந்து தோன்றுவ போல்
> அறிவு நூல்களின் கருத்துஎலாம்
> அகத்து அடக்கிய தோர்
> நெறியில் நீடிய சிவஞான
> போதநூல் நிகழ்த்திச்
> செறிய மாணவர் தமையெலாந்
> தெளிவுறச் செய்தார்"
>
> (தலபுராணம்— 14-52).

இதனால் சைவ சமயம் ஓங்கிப் பரவலாயிற்று.

வரலாற்றுப் பெருமை :

தமிழ் மொழியின் "கதி" எனப் புலவர் பெருமக்களால் சிறப்பிக்கப் பெறும் கம்பன், திருவள்ளுவர் என்ற தமிழ்த் தாயின் தவப்புதல்வர்கள் இருவரில் கம்பன் கற்பனைத் திறம் மிக்க செஞ்சொற் கவிஞன். காப்பியப் புலவர்களில் முதல் வரிசையில் வைத்து எண்ணத் தக்கவன். "கம்பநாடன் கவிதையைப்போல் கற்றோர்க்கு இதயம் களியாதே" 6 என்பது தனிப்பாடல். இவனை ஆதரித்தவன் திருவெண்ணெய் நல்லூரில் வாழ்ந்த சடையப்ப வள்ளலாம்.

கம்ப நாட்டினின்றும் ஒரு கைம் பெண் தன் மகனுடன் இங்கு வந்து சடையப்ப வள்ளலின் ஆதரவில் வாழ்ந்து வந்தாள். கல்விகற்று வந்த அவள் மகன் ஒரு நாள் பசுவின் கன்று ஒன்றைத் தேடிச் செல்லும் வழியில் விந்தையின் கோயிலைக் கண்டு வணங்கினான். அன்னையின் அருளால் புலமை பெற்றான். அவன் கம்ப நாட்டினின்றும் வந்தமையால் கம்பன் என்று அழைக்கப் பட்டான்.

உலக மகாக் காப்பியங்களில் ஒன்றான இராமாயணத்தைக் கம்பன் இயற்றிய பதி இது. இதைக் கம்பன் தம் பாயிரத்தில்,

"நடையின் நின்று உயர் நாயகன் தோற்றத்தின்
இடை நிகழ்ந்த இராமாவதாரப் பேர்த்
தொடை நிரம்பிய தோம் அறு மாக்கதை
சடையன் வெண்ணெய் நல்லூர் வயின் தந்ததே" (11)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

**திருக்கோயில் அமைப்பு :**

ஒரு திருச் சுற்றுக் கொண்டு கிழக்கு நோக்கி அமைந்துள்ள இந்தக் கோயிலின் வாயிலை ஐந்து நிலைக் கோபுரம் அழகு செய்கிறது. திருச்சுற்றின் கீழ்ப்புறத்தில் கலிதீர்த்த பிள்ளையார், பலிபீடம், கொடிமரம், நந்தி மண்டபம் ஆகியவை உள்ளன. கோயில் வாயில் வடபுறம் நவகோள்களும், ஐம்பூத இலிங்கங்களும் உள்ளன. வாயிலுக்குத் தெற்கில் மடப்பள்ளியும், சுந்தரரின் திருவீதி உலா நாயகரின் திருமுன்னும் உள்ளன. இதற்கு எதிரில் சிவனுமைமுருகு (சோமமாஸ்சுந்தர்) திருவீதி உலாநாயகர் திருவுரு உள்ள மண்டபம் அமைந்துள்ளது சிறப்பானதாகும்.

திருச் சுற்றின் தென்புறத்தில் சிவநேயச் செல்வர்களான அறுபத்துமூன்று நாயன்மார்களும், சப்த

கன்னியர்களும், திருஞான சம்பந்தப் பெருமாலும், திருமாலும் உள்ளனர். மேலும் இங்கு இறையருள் பெற்ற மெய்கண்ட சுவாமிகளும, அவரது சீடரான அருள்நந்தி சுவாமிகளும் காணப்படுகின்றனர். கருவறையையொட்டித் தென்புறத்தில் சிவனுமைமுருகு திருமுன் உள்ள மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

திருச் சுற்றின் மேல் புறத்தில் தெற்கு மூலையின் மெய்கண்ட சுவாமிகளுக்கு அருள் புரிந்த பொல்லாப் பிள்ளையார் யோக நிலையில் உள்ள திருமுன் உள்ளது. இவரது நான்கு கைகளில் பின் வலது கையில் கரும்பும், பின் இடது கையில் வாழைப்பழமும், பின் வலது கை சின் முத்திரையிலும் காணப்படுகின்றன. இவர் வலம்புரீ விநாயகர் என்பது குறிப்பிடத் தக்கது. வடக்கு மூலை யில் ஆறு தலைகள் பன்னிரண்டு கைகள் கொண்ட ஆறுமுகன் மயில்மீது தன் இரு துணைவியருடன் (சண்முகன்) உள்ள திருமுன் அமைக்கப்பட்டுள்ளது. இவன் மீது அருணகிரிநாதர் ''பலபலதத்துவம்'' எனத் தொடங்கும் திருப்புகழைப் பாடியுள்ளார். மேலும் அதில்,

'மகிழ் பெணையிற் கரை பொழில்முகில் சுற்றிய
திருவெணெய் நற்பதி புகழ் பெற அற்புத
மயிலின் மிசைக கொடு திரு நடமிட்டுறை பெருமானே''

எனக் குறிப்பிடுவதினின்றும் முருகன் இங்கு அவருக்கு நடனக்காட்சி அருளினான் எனக் கருத வேண்டியுள்ளது. கஜலட்சுமியும் காணப்படுகிறாள்.

திருச்சுற்றின் வடபுறத்தில் சண்டிகேசுவரர் திருமுன் உள்ளது.

திருக்கோயில் கருவறை, அந்தரானம் அர்த்த மண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. கருவறையின் அதிட்டானம் வரி, வரிமானம், குமுதம் ஆகிய உறுப்புகளைக் கொண்டது, கருவறையின் வெளிப்

புறச் சுவரில் தாமரை, பலகையுடன் அரைத் தூண்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதற்கு மேல் பூதகண வரிசை, துருவன், யாளி வரிசை ஆகியவை காணப்படுகின்றன.

கருவறையில் உள்ள இலிங்கத் திருவுருவில் உள்ள இறைவனின் திருப்பெயர்கள் கிருபாபுரீசுவரர் அருட்டுறை நாதர், தடுத்தாட்கொண்ட நாதர், வேணுபுரீசுவரர் என்பனவாம். தலமரமான மூங்கில் தற்போது இல்லை. கருவறையின் வெளிப்புறச்சுவரில் தென புறத்தில் உத்குடி இருக்கையில் முனிவர்கள் நால்வருடனும் காலடியில் முயலகனுடனும் ஆலமர் செல்வன் உள்ளான். இங்கு அமைக்கப்பட்டுள்ள பிச்சை உகக்கும் பெம்மானின் திருவுரு எழில் மிக்கதாகும். ஆலமர் செல்வனுக்கு மேலே திருவாசியிலும் பிச்சை உகக்கும் பெம்மான் காணப்படுகிறான். மேல்புறத்தில் பன்றி மற்றும் அன்னத்துடன் இலிங்கோற்பவர் உள்ளார். இதன்றித் திருமாலும் பிரமனும் தனித்தனியாகவும் காணப்படுகின்றனர். வடபுறத்தில் பிரமனும், துர்க்கையும் அமைக்கப்பட்டுள்ளார்.

மூன்று தளங்களைக் கொண்ட கருவறையின் விமானத்தில் தென்புறத்தில் ஆலமர் செல்வனும், மேல் புறத்தில் திருமால் தன் இரு துணைவியருடனும், வட புறத்தில் பிரமனும் காணப்படுகின்றனர்.

அந்தரானத்தில் திருவீதி உலா நாயகர்கள் திருவுருவங்களும், அர்த்தமண்டபத்தில் இருகைகளுடன் கூடிய வாயிற்காப்போரும் நந்தியும் உள்ளனர். மகா மண்டபத்தில் இரு கைகளுடன் கூடிய வாயிற்காப்போரும், வாயிலுக்கு இடதுபுறம் சூரியனும், வலதுபுரம் பைரவரும் உள்ளனர். இங்கு வடபுறத்தில் தெற்கு நோக்கி ஆடவல்லான் திருமுன் உள்ளது. முகப்பின் மேல் பகுதியில் முனிவர்கள் புடைசூழக் காட்சி கொடுத்த நாதர் (பெற்றம் ஊரும் பெம்மான்) காணப்படுகிறார். இறைவனாகிய கிழ அந்தணனைத் தேடித் தனியாகத்

திருக்கோயிலுள் வந்த சுந்தரர் முன் இறைவன் காட்சி அளித்ததை,

''மாதோடு உம்பரில் விடைமேல் தோன்றி'' (2 ; 2) யதாகச் சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணத்தில் கூறியுள்ளார். அதற்கு ஏற்ப இந்த வடிவம் இங்கு அமைந்துள்ளது என்று கொள்ளலாம்.

இறைவனின் திருவீதி உலா நாயகர் திருமுன்னுக்கு எதிரில் சுந்தரரின் திருவீதி உலாநாயகர் திருமுன் அமைக்கப்பட்டது போன்று கருவறைக்கு எதிரில் சுந்தரரின் மூலவர் திருமுன் உள்ளது சிறப்பானதாகும்;

கோயிலுக்கு வெளியில் சுந்தரரைத் தம் அடிமை என இறைவன் முதிய அந்தணனாக அந்தணர் பேரவையில் வழக்காடிய மன்றம் உள்ளது. இது மிகவும் இடிபாடான நிலையில் காணப்படுகிறது. வெளியில் உள்ள மதிலும் மிகவும் சிதிலமடைந்துள்ளது.

அன்னையின் திருக்கோயில் இரண்டு நிலைக் கோபுரத்துடன் பிற்காலத்தில் தனியாகக் கட்டப் பட்டுள்ளது. கருவறைக்கு முன்பு உள்ள மண்டபத்தில் பிள்ளையாரும், நான்கு கைகளைக் கொண்ட பெண் வாயிற்காப்போரும் உள்ளனர். மேலும் இங்கு மேரு என்ற ஸ்ரீ சக்கரமும் பலிபீடமும், சிங்க ஊர்தியும் காணப்படுகின்றன. கருவறையின் வாயிலுக்கு இரு புறமும் சங்கநிதி மற்றும் பதுமநிதி அமைக்கப் பட்டுள்ளன. நின்ற திருக்கோலத்தில் உள்ள அன்னையின் நான்கு கைகளில் பின்வலக்கையில் அங்குசமும், பின் இடக்கையில் பாசமும், முன்வலக்கை அபய முத்திரை யிலும், முன் இடக்கை வரத முத்திரையிலும் காணப் படுகின்றன.

இந்தக் கோயில் கி. பி. 969 முதல் 985 வரை சோழ அரியணையை அலங்கரித்த உத்தம சோழன்

காலத்தில் அவனது அன்னையான சிவநேயச் செல்வி செம்பியன் மாதேவி அடிகளால் கற்றளியாக அமைக்கப் பட்டதாகத் தெரிகிறது. பிற்காலத்தில் திருப்பணி நடைபெற்றுள்ளது. அன்னையின் கோயில் கி. பி. 1070 முதல் 1120 வரை செங்கோலோச்சிய முதலாம் செங்கோலோச்சிய முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தியதாம்.

கலைச் சிறப்பு :

இங்குள்ள சிவனுமை முருகு திருவுருவில் அன்னை தன் நாயகனாகிய அண்ணல் அருகில் இருப்பதால் நாணம் மேலிட, தன் தலையைச் சற்று சாய்த்து உள்ள நிலை சிற்பியின் கற்பனா சக்தியை எடுத்துக் காட்டுகிறது. ஆடவல்லான் கால்களில் சிதம்பரத்தில் உள்ள வடிவத்தில் இருப்பதுபோன்று பதினெட்டு சதங் கைகள் கொண்ட அணிகலன் அமைக்கப்பட்டுள்ளது.

கலைக் கண்களுக்குப் பெருவிருந்தாக அமைந் துள்ள வடிவம் சுந்தரரின் உலோகப்படிவம். அவரது அழகைப் பற்றித் தல புராணம்.

"பழகிடுதன் ஏவலுக்குஓர் பணியாளன் பெறவிரும்பி
அழகுருவாஞ் சிவபெருமான் ஆடியில்தன் முகநோக்கி
அழகேவா என அழைப்ப அதுதிரண்டேயுருவாகிக்
குழகன்முன்பு வர அவருங் கொண்டேற்றே மகிழ்வுற்றார்

"சுந்தர வடிவாய்த் தோன்றிய அந்தத்
தோன்றலைச் சுந்தரர் என்றே
எந்தையும் அழைத்துப் பணிசெய விடுத்தான்
(12-10-11)

என்று கூறுகிறது. சிவபெருமானின் அழகின் திரட்சி யான திருவுருதான் சுந்தரர், இவரைத் திரு ஆரூர் வீதியில் கண்ட பரவையார்,

"முன்னே வந்து எதிர் தோன்றுமுருகனோ!
பெருகு ஒளியாய்" (திருத்தொண்டர் புராணம்-290)

எனத் தன் வியப்பை வெளியிடுகிறார். இவ்வாறு சுந்தரர் அழகுக் கடவுளான முருகனுடன் ஒப்பிடப் படுகிறார். திருக்கோயில்களில் காணப்பெறும் சுந்தரரின் உலோகப் படிமங்கள் மற்றும் ஓவியங்கள் பொதுவாக அழகாகத்தான் இருக்கும். இருப்பினும் கையில் ஓலையுடன் நின்ற திருக்கோலத்தில் இங்குள்ள அவரது திருவுரு உலோகப் படிமக்கலையில் நம் முன்னோர்கள் அடைந்துள்ள அதியுன்னத நிலைக்குச் சான்றாக அமைந்துள்ளது. அதைக் காண்பார் அதன் அழகில் தம்மை மறந்து திளைப்பர் என்பதில் ஐயமில்லை.

## கல்வெட்டுச் செய்திகள்

இங்குக் காணப்பெறும் கல்வெட்டுகளில், மிகப் பழமையானது பரகேசரியின் பத்தாவது ஆட்சி ஆண்டைச் சார்ந்ததாகும். இது உத்தம சோழனாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. முதற் குலோத்துங்க சோழனின் நான்காவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டால் ராஜேந்திர சோழன் சேதிராயன் என்பான் ஆடவல்லான் திருவுருவை இங்கு எழுந்தருளச் செய்துள்ளது தெரிய வருகிறது. மூன்றாம் குலோத்துங்கனின் மூன்றாவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுக் கூடல் மோகன் ஆளப் பிறந்தான் அரச நாராயணன் என்ற காடவராயனால் கோபுரம் கட்டப்பட்ட செய்தியைக் கூறுகிறது. இவை சோழப் பேரரசர்களின் ஆட்சியின் கீழ் சிற்றரசர்களாக இருந்த பல்லவர்கள் திருப்பணிகள் செய்தமையைத் தெரிவிக்கின்றன. பல்லவ மன்னனான இரண்டாம் கோப்பெருஞ்சிங்க தேவனது நான்கு முதல் இருபத்தேழாவது ஆட்சி ஆண்டு வரையிலான பல கல்வெட்டுகள் இங்கு உள்ளன. இவற்றினின்றும் பிள்ளையாரைக் கோயில் எழுந்தருளச் செய்தது"

திருவிளக்கு எரிக்க நிவந்தம் அளித்தது ஆகிய செய்திகள் தெரிய வருகின்றன.

திருவிழாக்கள் :

இங்கு ஆடிச் சித்திரையில் கொண்டாடப்படும் தடுத்தாட் கொண்ட விழாவும், சுவாதியில் நடைபெறும் அறுபத்து மூவர் குரு பூசையும் குறிப்பிடத்தக்க விழாக்களாகும். முதலை வாய்ப்பட்ட பிள்ளையை சுந்தரர் அழைத்துத் தந்தது. சுந்தரர் திருக் கைலையை அடைந்தது ஆகியவையும் சிறப்பாகக் கொண்டாடப் படுகின்றன. இவையன்றி பங்குனி உத்திரத்தில் பத்து நாட்களுக்கு பிரமோற்சவம் விமரிசையாக நடை பெறுகிறது.

# திருத்தூங்கானை மாடம்

தென்னாற்காடு மாவட்டத்தில் விருத்தாசலத்தி னின்றும் ஏறக்குறைய பதினாறு கிலோ மீ. தொலைவில் பெண்ணாகடம் என்ற தலம் உள்ளது. பெண் + ஆ + கடம் = பெண்ணாகடம், வானவர் மகளிர், காமதேனு மற்றும் வெள்ளை யானை பூசித்துப் பேறு பெற்றதலம், எனவே இப்பெயர் பெற்றது. நடுநாட்டில் உள்ள தேவாரப் பாடல் பெற்ற சிவப்பதிகளில் இது இரண்டாவதாகும்.

இங்கு கிழக்கு நோக்கி அமைந்துள்ள திருக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் மற்றும் முகமண்டபம் ஆகியவற்றைக் கொண்டது.

சதுரமான ஆவுடையாரின் மேல் உள்ள இலிங்கத் திருவுரு ஏனைய தலங்களில் இருப்பது போலன்றி இங்கு நீண்ட வட்ட அமைப்பினைக் கொண்டுள்ளது. இவனது திருப்பெயர்கள் சுடர்க் கொழுந்து நாதர், பிரளய காலேசுவரர் என்பனவாம்.

அர்த்த மண்டபத்திற்கு முன்னால் இருகைகளுடன் கதை மீது சாய்ந்த நிலையில் இரு வாயிற் காப்போர் உள்ளனர். இதன் வாயில் முகப்பில் பூதகண வரிசைகள் அமைக்கப்பட்டுள்ளன. மகாமண்டபத்தில் நந்தி, பலிபீடம், திருவீதிஉலா நாயகர்களும், முகமண்டபத்தில் நவகோள்களும் காணப்படுகின்றன.

வெளிச் சுற்றின் வாயிலை ஐந்து நிலைக் கோபுரம் அழகு செய்கிறது. திருச்சுற்றில் உள்ள நந்தி இறைவனை நோக்கி இருப்பதற்குப் பதிலாக எதிர்த் திசையில் அதாவது கிழக்கு நோக்கி உள்ளது. இறைவனது ஆணை

பின்படி ஊழி வெள்ளத்தைத் தடுத்து நின்றமையால் கிழக்கு நோக்கி உள்ளதாகச் சொல்லப்படுகிறது. இதை ஒட்டிக் கொடிமரம், பலிபீடம், உள்ளன. வாயிலுக்கு இடது புறத்தில் மெய்கண்ட தேவர் திருமுன்றும் மடப்பள்ளியும், வலது புறத்தில் கலிக்காம நாயனார் திருமுன், ஆடவல்லான் சிவகாமியுடன் கூடிய நடன மண்டபம், பைரவர், சூரியன் ஆகியோர் அமைந்துள்ளனர்.

திருச்சுற்றின் தென்புறத்தில் நான்கு முனிவர்களுடன் கூடிய ஆலமர் செல்வன், மேற்புறத்தில் கோடி விநாயகர், பஞ்சமூர்த்திகள், சப்த கன்னியரில் ஐவர், காசி விசுவநாதர், மயிலுடன் ஆறு முகங்களுடன் முருகன், தனியாக வள்ளி, தெய்வயானை, மகாலட்சுமி உள்ளனர். வடபுறத்தில் சண்டிகேசுவரர், துர்க்கை திருமுன்களும், யாக சாலையும் அமைந்துள்ளன. செண்பக மரம் இந்தத் தலத்தின் தலமரமாம்.

கருவறைக்கு வடபுறத்தில் உள்ள கட்டுமலை மேல் உள்ள திருமுன்னில் பதினாறு பட்டை இலிங்கத் திருவுரு காணப்படுகிறது. இறைவனது திருப்பெயர் சௌந்தரேசுவர் என்பதாம். இங்குள்ள விமானம் வட்டமாக உள்ளது. அதன் கிரீவத்தின் தென் புறத்தில் ஆலமர் செல்வனும், மேல்புறத்தில் தன் இரு துணைவியருடன் திருமாலும், வடபுறத்தில் தன் இரு துணைவியருடன் பிரமாவும் காணப்படுகின்றனர்.

அன்னையின் திருமுன் தனியாக உள்ளது. ஆமோதனாம்பாள் என்ற திருப்பெயரை உடைய அன்னையின் பின் இருகைகளில் பூககள் முன் இருகைகள் அபய மற்றும் வரதமுத்திரைகளில் உள்ளன.

கருவறையின் அதிட்டானம் வரி, வரிமானம், முப்பட்டை குமுதம் ஆகியவற்றைக் கொண்டது. கருவறையின் கீழ்ப்புறம் வாயில் இருக்க, ஏனைய

மூன்று பக்கங்களிலும் கல்லினால் பலகணிகள் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றின் இருமருங்கும் பலகையுடன் கூடிய அரைத் தூண்கள் காணப்படு கின்றன. இதற்கு மேல் பூதகணவரிசை, கூடுகளுடன் கூடிய கொடுங்கை, யாளி வரிசை ஆகியவை உள்ளன. அதிட்டானம் முதல் யாளி வரிசை வரை கல்லால் கட்டப்பெற்றுள்ளது. கருவறையின் விமானம் தொண்டை நாட்டிற்கு உரிய தூங்கானை மாட அமைப் பினைக் கொண்டது. சிகரத்தில் ஒன்றின் மேல் ஒன்றாக இறை வடிவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றிற்கு மேல் சிங்க முகப்புகளுடன் திருவாசிகள் காணப்படு கின்றன. வடபுறத்தில் பிரமாவும், ஆனை உரி போர்த்த மூர்த்தியும், அன்னை இலிங்கத்தைப் பூசித்தலும் துர்க்கையும், பைரவரும், தென்புறத்தில் ஆலமர் செல்வனும், ஆடவல்லானும், காமதேனுவும் சிவபெரு மானும், பிள்ளையாரும் இலிங்கமும், மேல்புறத்தில் இரு துணைவியருடன் திருமாலும், கருடன் மேல் திருமாலும் அமைக்கப்பட்டுள்ளனர். கீழ்ப்புறத்தில் பெற்றம் ஊரும் பெம்மானும், பூதகணங்களும் உள்ளன. மேலும் வெள்ளை யானையுடன் இந்திரனும், முருகனும் காணப்படுகின்றனர்.

இந்தக் கோயிலின் விமானம் வளைவுடன் கூடிய நீண்ட அமைப்பினைக் கொண்டது இது தூங்கும் யானையைப் போன்று இருப்பதால், தூங்கானை மாடம் என்ற பெயரைப் பெற்றது. இத்தகைய விமானம் அமைக்கும் மரபு தொண்டை நாட்டிற்கு உரியது. தூங்கானை விமான அமைப்பினைக் கொண்ட திருவொற்றியூர் போன்ற கோயில்களில் மூலவரைக் கருவறையின் வாயில் மூலமாகத்தான் காண இயலும். ஆனால் இங்கு கிழக்கு நோக்கியுள்ள கருவறையின் வாயில் நீங்கலாக ஏனைய மூன்று திக்குகளிலும் பல கணிகள் அமைக்கப்பட்டிருப்பதால், மூலவரை நான்கு

புறங்களினின்றும் காணலாம். இத்தகைய அரிய அமைப்பு வேறு எந்தக் கோயிலிலும் இல்லை. ஒரு யானை நின்றால் அதன் உட்புறத்தைக் கால்களின் இடைவெளி மூலம் நான்கு திக்குகளினின்றும் காண்பது போன்று, இங்கும் மூலவரை நான்கு புறங்களினின்றும் காண இயலுகிறது. விமானமும் தூங்கும் யானையைப் போன்று உள்ளது. கோயிலின் முன்புறம் யானையின் முகம் போல் உயர்ந்தும், பின்புறம் யானையின் பின் பாகம் போல் வட்ட வடிவமாகவும் அமைந்துள்ளன. எனவே தூங்கானை மாட விமானத்தைக் கொண்டுள்ள ஏனைய கோயில்களைப் போலன்றி, இதைக் கோயில் "தூங்கானை மாடம்" என்றே தொன்று தொட்டு அழைக்கப்பட்டு வருகிறது. "தூங்கானை மாடமேயான்" எனச் சம்பந்தப் பெருமானும், "தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே" என அப்பர் பெருமானும் பாடியருளியுள்ளது இங்கு குறிப்பிடத் தக்கனவாம்.

கல்வெட்டுகளில் இறைவனது திருப்பெயர்கள் வடகைலாசமுடைய மகாதேவர் என்றும், திருத் தூங்கானை மாடமுடைய மகாதேவா என்றும் குறிக்கப் பட்டுள்ளன.

"கைதடிந்த வரிச் சிலையான்" எனச் சுந்தரரால் புகழப் பெற்ற கலிக்காம நாயனார் தொண்டு செய்து பேறு பெற்ற தலம் இது. சைவ சித்தாந்த சந்தான பரமாசாரியராகிய மெய்கண்ட தேவநாயனாரின் தந்தையார் அச்சுத களப்பர் வாழ்ந்த தலம் இது. மேலும் இது சைவ சந்தானாசாரியருள் ஒருவரான மறைஞான சம்பந்தர் பிறந்த தலமாகும்.

"கார் வளரும் மாடங்கள் கலந்த மறையொலி வளர்க்குஞ்
சீருடை யந்தணர் வாழும் செழும்பதி" (1414)

என இத்தலத்தைச் சேக்கிழார் பெருமான் தம் திருத் தொண்டர் புராணத்தில் சிறப்பிக்கிறார். சைவ சமயக்

குரவர்களில் ஞான சம்பந்தப் பெருமான் மற்றும் அப்பர் அடிகள் ஆகியோரின் பாடல்களைப் பெற்ற தலம் இது. "பொன்னார் திருவடிக்கு ஒன்று விண்ணப்பம்" என அப்பர் அடிகள் இத்தலத்து இறைவனிடம் விண்ணப்பித்து, "மின்னாரு மூவிலைச் சூலம் என் மேற்பொறி" என்றும் "இடபம் பொறித்து என்னை ஏன்று கொள்வாய்" என்றும் வேண்டிக் கொள்கிறார். இந்த வேண்டுகோளை ஏற்ற இறைவன் சிவபூதம் ஒன்றால் அவரது திருத்தோளில் சூலம் மற்றும் இடபம ஆகியவற்றின் குறிகளைச் சாத்துகிறான். இதனைச் சேக்கிழார் பெருமான்,

"நீடு திருத்தூங்கானை மாடத்து நிலவுகின்ற
ஆடகமேருச் சிலையான் அருளால் ஓர் சிவபூத
மாடொருவர் அறியாமே வாகீசர் திருத்தோளிற்
சேடுயர் மூவிலைச் சூலஞ் சின விடையுடன்
சாத்த' (141')

என அருளியுள்ளார்; வாழ்க்கையில் பல இன்னல்களைக் களையத் தவம் புரிவோர்க்கும் ஏற்றதலம் இது என ஞானக்குழந்தை தம் திருப்பாடல்களில் வலியுறுத்துகிறார்.

கலைச் சிறப்பும் சமயப் பெருமையும் உடைய இந்தக் கோயில் 9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படுகிறது.

---

# அழிவை நோக்கி விரையும் கோயில்

பிற்காலப் பல்லவர்களில் கி. பி 1191 முதல் 1213 வரை ஆட்சி புரிந்தவன் கூடல் ஏழிசை மோகன் மணவாளப் பெருமாள் வாணிலை கண்டராயன காடவ ராயன். இவனது மைந்தனான கோப்பெருஞ்சிங்கன் என்பான் கி. பி. 1213 முதல் 1269 வரை ஆண்டான். இவன் மூன்று நூற்றாண்டுகளுக்கு மேல் தமிழகத்தில் தன்னிகரற்ற பேரரசாக விளங்கிய சோழ வல்லரசுக்கு மரண அடி கொடுத்தவன். புகழ் மிக்க இந்தப் பல்லவ மன்னர்களின் தலைநகரமாக விளங்கிய சேந்தமங்கலம் இன்று வெளியுலகிற்குப் பெயர் கூடத் தெரியாத குக்கிராமமாக உள்ளது. திருச்சி-சென்னை பெருவழியில் மடப்பட்டு என்ற ஊரை அடுத்துள்ள சேந்தமங்கலம் கூட்டு ரஸ்தாவினின்றும் இந்த ஊர் ஏறக்குறைய அரை கிலோ மீ. தொலைவில் உள்ளது.

தன் தலைநகரமாகிய சேந்தமங்கலத்தில் மண வாளப் பெருமாள் எழுப்பிய சிவன் கோயில் அவரது பட்டப் பெயரால் ''வாணிலை கண்டீசரம்'' எனக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் மக்கள் வழக்கில் அது ஆபத்சகாயேசுவரர் கோயில் என வழங்கப்படுகிறது. இது இன்று மிகவும் சிதிலமான நிலையில், கட்டிடத்தின் கற்கள் ஆங்காங்கு சிதறுண்டு காணப்படுகின்றன. எங்கு பார்த்தாலும் புதர்களும், முட்செடிகளும் செறிந்து உள்ளன. பாம்பு போன்ற நச்சுப் பிராணிகளின் நடமாட்டமும் உள்ளது. இதன் நிலை காண இயலாத ஒன்றாம். இந்தக் கோயிலைச் சார்ந்த சிவாசாரியார் காலை, மாலை இருவேளை களிலும் பூஜை நடத்தி வருவது மனதிற்கு சிறிது ஆறுதல் அளிப்பதாக உள்ளது.

இடிபாடுகளுக்கு இடையில் காணப்படும் இந்தக் கோயிலில் மூன்று அரிய சிற்பங்கள் உள்ளன. சிவாலயங்களில் தெற்கு நோக்கி அமைக்கப்பட்டிருக்கும் ஆலபர் செல்வன் பொதுவாக தனியாகவோ அல்லது முனிவர்களுடனோ காணப்படுவான். அவனுடன் அவனது ஊர்தியான காளை இருக்காது. ஆனால் இங்கு அவன் காளையுடன் உருவாக்கப்பட்டுள்ளான். காளை மீது உத்குடி இருக்கையில் அமர்ந்துள்ள இவனது நான்கு கைகளில் முன் வலக்கை சூசி முத்திரையில் இருக்க, முன் இடக்கை ஓலைச்சுவடியுடன் மடிமீது அமைக்கப்பட்டுள்ளது. இவனது பின் வலக்கையில் பாம்பும், பின் இடக்கையில் தீப்பிழம்பும் காணப்படுகின்றன. இவனது காலடியில் முயலகன் உருவாக்கப்பட்டுள்ளான். இத்தகைய அரிய அமைப்பு திருமயிலாடுதுறை வள்ளலார் கோயில், மேலக்கடஊர் அமிர்தகடேசுவரர் கோயில் போன்ற ஒரு சில கோயில்களில்தான் உள்ளது. இவனது முகத்தில் குடிகொண்டிருக்கும் அமைதி மனதைக் கவருதாக இருக்கிறது.

அடுத்துக் காணவேண்டியது பைரவர் வடிவம். சிவலாயங்களில் உள்ள எட்டு சுற்றுப்புறத் தெய்வங்களில் ஒருவனான இவன் பொதுவாக நான்கு கைகளுடனும் தன் ஊர்தியான நாயுடனும் இருப்பான், சேலம் மாவட்டத்தைச்சார்ந்த கொக்கராயன் பேட்டை போன்ற ஒரு சில கோயில்களில் இவன் எட்டு கைகளுடன் உருவாக்கப்பட்டுள்ளான். ஆனால் இங்கு உள்ளது போன்றுக் பத்து கைகளுடன் இந்த வடிவம் வேறு எங்கும் படைக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. இந்த வடிவம் கைகளில் உடுக்கை பாம்பு, சூலம் ஆகியவற்றை ஏந்தியுள்ளது.

கடைசியாகக் காணவேண்டியது ஆறு தலைகள் ஆறு கைகள் கொண்ட முருகனது கார்த்திகேய வடிவம். 'குமார தந்திரம்' என்ற நூலில் கூறப்பட்ட பதினாறு

வடிவங்களில் இது ஒன்று. பின் வலக்கைகளில் அம்பும் சக்தியும் இருக்க, பின் இடக்கைகளில் அக்க மாலையும் கேடயமும் காணப்படுகின்றன. முன் வலக்கை அபய முத்திரையிலும் முன் இடக்கை கோழிக்கொடியை ஏந்திய நிலையிலும் அமைக்கப்பட்டுள்ளன. இவனது ஊர்தியான மயில் வாயில் பாம்புடன் தன் தலையைத் திருப்பியபடி காணப்படுகிறது. இத்தகைய வடிவம் கும்பகோணம் ஆதிகும்பேசுவரர், தாராசுரம் போன்ற ஒரு சில கோயில்களில் அரிதாகக் காணப்படுகிறது. அங்குள்ள வடிவங்களில் பின் வலக்கையில் அக்கமாலை இருக்க, இங்குள்ள வடிவில் பின் இடக்கையில் அது அமைக்கப்பட்டுள்ளது முக்கிய வேறுபாடாகும். துணைவியார் இன்றித் தனியாக உள்ள இந்த வடிவம் கலைத்திண்மையுடன் உருவாக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இத்தகு கலைச் செல்வங்களைத் தன்னகத்தே கொண்ட இந்தக் கோயில் அழிவை நோக்கி விரைந்து கொண்டிருப்பது நெஞ்சில் வலி ஏற்படுத்துகிறது. இந்த அவல நிலையைப் போக்கி, பழமையான இந்தக் கோயில் என்று சீராக்கப்படும்?



# கரக்கோயில்

சிதம்பரத்தை அடுத்துள்ள காட்டு மன்னார் கோயி லிருந்து ஐந்து கிலோ மீ. தொலைவில் மேலக் கடம்பூர் என்ற திருத்தலம் உள்ளது. இந்திரன் தன் கைகளால் இங்குள்ள இலிங்கத் திருவுருவை அகழ்ந்து எடுத்துச் செல்ல முயன்றமையால் இது "கரக்கோயில்" எனப் பெற்றது. "பெருக்காறு சடைக் கணிந்த" எனத் தொடங்கும் அப்பர் பெருமானது திருப்பாடலில் குறிப் பிடப்பட்ட ஏழு வகைக் கோயில்களில் கரக்கோயில் ஒன்று. கடம்பமரத்தைத் தலமரமாக உடைமையால் கடம்பூர் என்ற பெயர் பெற்றது. காவிரிக்கு வட கரையில் உள்ள பாடல் பெற்ற சிவப்பதிகளில் இது முப்பத்து நான்காவது தலமாகும்.

### திருக்கோயிலின் அமைப்பும் சிற்பச் சிறப்புகளும் :

ஒரு திருச்சுற்று, கருவறை, அந்தரானம், அர்த்த மண்டபம், முகமண்டபம் ஆகியவற்றைக் கொண்ட இந்தக் கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இதன் வாயிலை மூன்று நிலைக் கோபுரம் அழகு செய்கிறது. வாயிலுக்கு வலப்புறம் பைரவர், சனீஸ்வரர், சூரியன், காளையுடன் கூடிய சிவபெருமான், இந்திரன், காளி ஆகியோர் காணப்பட, இடப்பக்கம் மடப்பள்ளி உள்ளது. திருச்சுற்றின் மேல்புறத்தில் ஆரவாரப் பிள்ளையார் எழுந்தருளியுள்ளார். இந்திரனது தேரை இவர் ஆரவாரம் செய்து கீழே அழுத்தியமையால், இவர் இப்பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது. இங்கு மயிலுடன் ஆறுமுகனும் வள்ளி தெய்வயானையும், நால்வரும், இலிங்கத் திருவுருவும், கஜலட்சுமியும் உள்ளனர்.

கருவறையில் வட்டமான ஆவுடையாருடன் கூடிய இலிங்கத் திருவுருவில் எழுந்தருளியுள்ள இறைவனது திருப்பெயர் அமுதகடேசுவரர் என்பதாம். அந்த ரானத்தில் போக சக்தியம்மனும், அர்த்த மண்டபத்தில் சிலா வடிவத்தில் ஆடவல்லானும், இரு துணைவியருடனும் நானகு கைகளுடனும் கூடிய வில்லேந்திய வேலனும் காணப்படுகின்றனர். முகமண்டபத்தில் சிவகாமியுடன் கூடிய ஆடவல்லான் மண்டபம், அன்னையின் திருமுன், நவகோள்கள், நந்தி பலிபீடம் ஆகியவை உள்ளன. நான்கு கைகளை உடைய அன்னையின் பின் இரு கைகளில் மலர்களும், முன் இருகைகள் அபய மற்றும் வரத முத்திரைகளிலும உருவாக்கப் பட்டுள்ளனது அன்னையின் திருப் பெயர் வித்யு ஜோதி நாயகி அதாவது சோதிமின்னம்மையாம். இரு கைகளில் ஒரு கையைக் கதை மீது வைத்துள்ள வாயிற்காப்போர் இருபுறமும் உள்ளனர்.

இந்தக் கோயிலின் விமானம் இரதம் போன்ற அமைப்பினைக் கொண்டது. இதன் தென்புறமும் வட புறமும் பக்கத்திற்கு இரு சக்கரங்கள் காணப்படுகின்றன. இரதத்தை இழுத்துச் செல்வது போன்று முன்னால் பாய்ந்து செல்லும் நிலையில் குதிரைகள அமைக்கப்பட்டுள்ளன.

மேடைபோன்ற அமைப்பின் மீது கருவறையின் அதிட்டானம் கட்டப் பெற்றுள்ளது. வரி, வரிமானம், பூவேலை, வரிமானம், தாமரை இதழ், வரந்தையுள்ள வட்டக் குமுதம், மூலையில் சிங்கங்களுடன் சிறிய சிற்பங்கள் தாமரை இதழ், புரைகள், வரந்தையுள்ள கபோதம், மனிதத் தலையுடன் சிங்க முகப்புக் கொண்ட இரு கூடுகள், யாளிவரிசை, வரந்தையுள்ள கொடுங்கை, யாளி வரிசை, நாற்புறமும் சிறிய விமானங்கள், இரு புறமும் பெண்களும் நடுவில் வடிவத்துடன் கூடிய தூபி

ஆகிய பல உறுப்புகள் அதிட்டானத்தின் கீழ்ப் பகுதியி லிருந்து விமானம் வரையில் உருவாக்கப்பட்டுள்ளன.

கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் உள்ள ஒரு சில புரைகளுக்கு முன் சிறிய மண்டபங்கள் அமைக்கப் பட்டுள்ளன. இவற்றிற்குக் கீழே சிங்கமும், இருபுறம் கலசம், பலகையுடன் கூடிய தூண்களும் உள்ளன. மேல் பகுதியில் வரந்தையுள்ள கபோதம், இருபுறமும் மனிதர்கள், நின்ற நிலையில் சிங்கம், இருவரால் சுமக்கப்பெறும் வரந்தையுடன் கூடிய கூடு, இரண்டு பெண்கள் கொண்ட வரந்தையுடன் கூடிய கொடுங்கை, திருவாசி ஆகியவை அமைக்கப்பட்டுள்ளன. கூடு விமானத்தின் கீழ்த்தளத்தைத் தொடுவதாக உள்ளது.

மண்டபங்கள் அமைக்கப் பெறாத புரைகளுக்கு இருபுறமும் கலசம், பலகையுடன் கூடிய தூண்கள் உள்ளன. மேல் பகுதியில் நின்ற நிலையில் ஒரு சிங்கம், இரு சிங்கங்கள் என மாறி மாறிக் காணப்படுகின்றன. மேலும் நடனப் பெண்கள் ஒருவர், இருவர், மூவர் எனவும் அமைக்கப்பட்டுள்ளனர்.

கருவறையின் கிரீவம் இரு தளங்களைக் கொண்டது. கீழ்த்தளத்தில் இரு புறமும் தூண்களும், சிங்கமும், மேலே கூடுகளுடன் கூடிய கபோதம் கொண்ட அமைப்பு உள்ளது. தென்புறத்தில் வீணை ஏந்திய ஆலமர் செல்வன் இருக்க, மேல் புறம், வடபுறம் உள்ள வடிவங்கள் தெளிவாகத் தெரியவில்லை; மேல் தளத்தில் சிங்கமுகம் கொண்ட கூடுகள் காணப்படுகின்றன. தென் புறத்தில் இரு முனிவர்களுடன் ஆலமர் செல்வனும், மேல புறத்தில் இரு துணைவியருடன் திருமாலும், வட புறத்தில் இரு துணைவியருடன் பிரமாவும் உள்ளனர். எண் கோண வடிவங் கொண்ட இந்தத் தளத்தில் சிறிய சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதற்கு மேல் நான்கு

கூடுகளுடன் கூடிய வட்டமான சிகரமும், தாமரை இதழும், தூபியும் காணப்படுகின்றன.

கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் தென் புறத்தில் பிள்ளையார், பெண்ணோடு ஆணாகிய பெம்மான், ஆலமர் செல்வன், அகத்தியர் ஆகியோர் உள்ளனர். பிள்ளையாரின் நான்கு கைகளில் பின் இரு கைகளில் மழுவும் பாசமும் இருக்க, முன் இரு கைகளில் மோதகமும், எழுத்தாணியும் உருவாக்கப்பட்டுள்ளன. வலப் பக்கம் பூதமும, இடப் பககம் பிச்சை உகக்கும் பெம்மானும் காணப்பட, மேல் பகுதியில் அன்னையும் அத்தனும் உள்ளனர். பெண்ணோடு ஆணாகிய பெம் மானின் வலப்பக்கம் இரு கைகளும், இடப் பக்கம் ஒரு கையும் அமைக்கப் பட்டுள்ளன. பின் வலக்கையில் மழு இருக்க, முன் வலக்கை பின்னால் உள்ள காளை மீது வைக்கப்பட்டுள்ளது. இடக்கை கத்ய வலம்பித முத்திரையில் உருவாக்கப்பட்டுளளது. வலக்காதில் குழையும், இடக் காதில் தோடும் அமைக்கப்பட்டுளளன. வலக்காலில ஆடை தொடைவரை இருக்க, இடக் காலில் கணுக்கால் வரை ஆடை உள்ளது. இடது மார்பில் கொங்கை காணப்படுகிறது. இவை யாவும் வலப்பக்கம் ஆண், இடபபக்கம் பெண் என்றும் உணர்த்துவனவாக உள்ளன. கலை அழகு மிக்க வடிவம் இது. அகத்தியர் வடிவத்திற்கு மேல் அன்னை யுடன் கூடிய அத்தன் காணப்படுகிறான். இங்குள்ள காளையுடன் கூடிய ஆலமர் செல்வனின் வடிவம் ஒரு சில கோயில்களில் மட்டும் காணப்படும் ஒரு அரிய கலைப் படைப்பாம். வீராசனத்தில் இருக்கை மீது உட்கார்ந்துள்ள இவனது காலடியில் முயலகன் காணப்பட, கீழே முனிவர்கள் உள்ளனர், இவனது நான்கு கைகளில் பின் வலக்கையில் பாம்பும், பின் இடக்கையில சூலமும் இருக்க, முன் வலக்கை சின் முத்திரையிலும் முன்இடக்கை ஓலையுடன் தொடை மீதும் உள்ளன. நல்ல எழிலார்ந்த திருவுருவம் இது.

இதற்கு மேல் உள்ள கூடில் உத்குடி இருக்கையில் ஆலமர் செல்வனும், அதற்கு மேல் உள்ள கூடில் ஞான தட்சிணா மூர்த்தியும் காணப்படுகின்றனர்.

கருவறையின் வெளிப்புறச் சுவரில் மேல் புறத்தில் இரு கைகளும் கூப்பிய நிலையில் சூரியனும், அதற்கு மேல் இருவர் நடன நிலையிலும், இவர்களது வலப் புறத்தில் இரு சிங்கங்களும், இடப்புறத்தில் ஒரு சிங்கமும் உள்ளன. இங்குள்ள திருமாலின் பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன் இருகைகள் அபய மற்றும் வரத முத்திரைகளில் உள்ளன. இவனுக்குக் கீழே இடப்பக்கம் கருடனும், வலப்பக்கம் அனுமானும் காணப்படுகின்றனர். கூடிற்கு மேலே உத்குடி இருக்கையில் திருமாலும், கூடிற்குள் இரு கிளிகளுடன் கூடிய சிறிய விமான அமைப்பும் உள்ளன. இதை அடுத்துள்ள சந்திரனுக்கு மேலே இருவர் நடன நிலையிலும், இடப்புறம் இரு சிங்கங்களும், வலப்புறம் ஒரு சிங்கமும் உள்ளன. கூப்பிய கைகளுடன் கூடிய ஒருவருக்கு இடப்புறம் ஒருவரும் வலப்புறம் மூவரும் நடன நிலையில் உருவாக்கப்பட்டுள்ளனர்.

கருவறையின் வெளிப்புறச்சுவரின் வடபுறத்தில் உள்ள பிரமாவின் பின் வலக்கையில் அக்கமாலை இருக்க, முன்வலக்கை அபயமுத்திரையிலும் முன் இடக்கை தொடைமீதும் உள்ளன. இவனுக்குக் கீழே வலப்புறம் முனிவர் ஒருவரும், இடப்புறம் பெண் ஒருத்தியும் காணப்படுகின்றனர். இவனுக்கு மேலே உள்ள கூடில் நான்முகன், மூன்று சிறிய விமான அமைப்புகள் இங்கு மேலும் ஐந்து தலைப் பாம்பும், அதற்கு இடப்புறம் மூன்று பெண்களும், வலப்புறம் ஒரு பெண்ணும் ஒரு சிங்கமும் உருவாக்கப்பட்டுள்ளன. கங்கை வார் சடைக்கரந்த பெருமானும், அவனுக்கு மேல்பிச்சை உகக்கும் பெம்மானும் காணப்படுகின்றனர் இங்குள்ள புரையில் கங்கையைத் தாங்கும் பெருமான்

வடிவம் உள்ளது. சுகாசனத்தில் உட்கார்ந்துள்ள இவனது இடது தொடைமீது அன்னை உட்கார்ந்துள்ளாள். அன்னையின் வலக்கை இறைவனை அணைத்தபடியும், இடக்கையில் நீலோற்பல மலரும் காணப்படுகின்றன. இறைவனது பின் இரு கைகளில் மானும் மழுவும் இருக்க, முன் இடக்கை அன்னையை அணைத்தபடியும். முன்வலக்கை அன்னையின் தாடையைத் தொட்டபடியும் உள்ளன. இவனது விரிந்த சடையின் ஒரு பகுதியில் கங்கை அமைக்கப் பட்டுள்ளாள். இவை கங்கையை இறைவன் தாங்கியதால் ஏற்பட்ட அன்னையின் ஊடலை இறைவன் தணிப்பதை உணர்த்துவனவாக உள்ளன. இவையன்றி இங்கு கங்கா விசர் ஜனமூர்த்தி மற்றும் துர்க்கையின் வடிவங்களும் உள்ளன. கங்கா விசர் ஜனமூர்த்தியின் முன் இடக்கை அன்னையை அணைத்த படியும், பின் இடக்கையில் மானும் இருக்க, பின் வலக்கை சடையைத் தாங்கும் நிலையில் உள்ளது. திரிபங்க நிலையில் நின்றுள்ள இவனது இடக்கால் நேராக இருக்க, வலக்கால் வளைந்து பூதத்தின் மேல் காணப்படுகிறது. அன்னையின் வலக்கையில் மலரும், இடக்கை கத்ய வலம்பித முத்திரையிலும் உள்ளன. எருமை மேல் நின்றுள்ள துர்க்கையின் எட்டுக் கைகளில் முன்இரு கைகள் அபய மற்றும் கத்ய வலம்பித முத்திரைகளில் இருக்க, ஏனையவற்றில் சக்கரம், கத்தி, சங்கு, கேடயம் போன்ற படைக் கலங்கள் உருவாக்கப் பட்டுள்ளன. கலைத் திண்மையுடன் கூடிய வடிவம் இது.

**சமய மாண்பு :**

சம்பந்தர் மற்றும் அப்பர் பெருமக்களது திருப் பாடல்களைப் பெற்ற திருத்தலம். மணிவாசகப் பெருந்தகையும், அருணகிரிப் பெருமானும் போற்றிய பதி இது. இதை,

"வெண்கொடி சேர் நெடுமாடம் கடைநவிலும் கடம்பூர்"

என ஞானக் குழந்தையும்,

"பொங்கு சேர் மணற்புன்னையும் ஞாழலும்
தெங்கு சேர் கடம் பூர்"

"கொல்லை முல்லை கொழுந்தகை மல்லிகை
நல்ல சேர்கடம்பூர்"

"கிளரும் பேரொலி இன்னரம் பாட்டறாக்
களரியார் கடம்பூர்"

என வாகீசப் பெருமானும் பாடியருளியுள்ளார்கள்.

அப்பர் பெருமான் இத்தலத்து இறைவனைப் பற்றிப் பாடிய பாடல்களில் ஒன்றை இந்நாள் மக்கள் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகினால், உலகமே சொர்க்க லோகமாகி விடுமே! அந்தப் பாடல் வருமாறு:

"நங்கடம் பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடியேனையுந் தாங்குதல்
என் கடன் பணி செய்து கிடப்பதே"

இறைவனிடம் எல்லாவற்றையும் ஒப்படைத்துவிட்டு நாம் நம் கடமைகளைப் பயன் நோக்காது ஆற்ற வேண்டும் என்பதை எவ்வளவு அழகாக அருளியுள்ளார்.

மணிவாசகப் பெருமான் "கடம்பூர் தன்னில் இடம் பெற இருந்தும்" எனக் "கீர்த்தி திருவகவிலும்", "கடம்பூர் மேவிய விடங்கா போற்றி" எனப் "போற்றி திருவகவலிலும்" இந்தலத்தை வழுத்தியுள்ளார்.

சேக்கிழார் பெருமான் தம் திருத் தொண்டர் புராணத்தில் "வார் புகழ் கடம்பை" என இந்தத் தலத்தைப் போற்றியுள்ளார்.

கலைப் பெருமை :

கி. பி. 1070 முதல் 1120 வரை சோழ அரியாசனத்தை அலங்கரித்த முதற் குலோத்துங்க சோழனால் கற்றளியாகக் கட்டப்பெற்றது இந்தக் கோயில் இரதத்தின் அமைப்பை இந்தக் கோயில் கொண்டமையால் இது தமிழகக் கோயில் கட்டிட மற்றும் சிற்பக்கலை வளர்ச்சியில் ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்தது. இதை முன்னோடியாகக் கொண்டு ஒரிசா மாநிலத்தில் கொனார்க் என்ற இடத்தில் உலகப் புகழ் பெற்ற சூரியன் கோயில் போன்றவை கட்டப் பெற்றன.

இதற்கு முன்னால் கட்டப்பெற்ற கோயில்களில் கருவறையின வெளிப்புறச் சுவரை ஒட்டினாற் போல் தான் புரைகள் அமைக்கபபட்டன. ஆனால் இங்கு ஒரு சில புரைகளுக்கு முன்னால் சிங்கமுகங் கொண்ட கூடுகளுடன் கூடிய அழகிய மண்டபங்கள் முதன்முதலில் கட்டப்பெற்றன மேலும் இங்கு கபோதம், கொடுங்கை, குமுதம் ஆகியவற்றில் வரந்தைகள் காணப்படுகின்றன. இத்தகைய அமைப்பு வேறு எங்கும் இல்லை. விமானங்களில் பொதுவாக மாலை போன்று அமைக்கப்பெறும் சாலை, கூடம் இங்கு இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கதாம்.

உட்கார்ந்த நிலையில் உள்ள கங்கையைத் தாங்கும் இறைவனது வடிவமும் பூதத்தின் மேல் கால் வைத்துள்ள கங்கா விசர் ஜனமூர்த்தி வடிவமும் எங்கும் காண இயலாக் கலை வடிவங்களாகும்.

இங்குள்ள செப்புச் சிலைகளில் காளை மீது நடனம் ஆடவல்லான் வடிவம் சிறப்புமிக்கதாம். பத்து கைகளைக் கொண்ட இந்த வடிவைச் சுற்றிப் பிள்ளையார் முருகன் ஆகியோர் அமைக்கப்பட்டுள்ளனர். வங்க நாட்டுப் பாணியில் உள்ள இந்தச் சிலை முதல்

இராசேந்திர சோழனின் வட நாட்டுப் படையெடுப்பின் வெற்றிச் சின்னயாகக் கருதப்படுகிறது. இத்தகைய வடிவம் தமிழகத்தில் வேறு எங்கும் இல்லை. (இந்த வடிவைப் பற்றிய விவரங்கள் இந்த நூலாசிரியரால் எழுதப்பெற்ற "தமிழகக் கலைச் செல்வங்கள்" என்ற நூலில் விரிவாகத் தரப்பட்டுள்ளன.)

நம் முன்னோர்களின் சிற்பக் கலைத் திண்மைக்கு இந்தக் கோயில் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

---

## 'கண்கண்ட தெய்வமாம்' சகலகலாவல்லி கோயில்

உலகில் எதுவும் இயங்க அல்லது எதையும் இயக்க சக்தி இன்றியமையாதது. தள்ளாத வயோதிகனுக்கு நடக்க சக்தி இல்லை; குருடனுக்குப் பார்க்கச் சக்தி இல்லை; செவிடனுக்குக் கேட்க சக்தி இல்லை; மின் சக்தி இல்லையெனில் இரவில் பட்டி தொட்டி முதுர் கொண்டு இருட் கடலில் அழுந்தி விடுகிறது. பணவீக்க காலத்தில் பணத்தின் சக்தி குறைந்து விடுகிறது ஆண்டவனை அடைய ஆன்மீக சக்தி தேவைப்படுகிறது இதனால்தான் தேசீய மகாகவி பாரதியார்,

"வாழ்வு பெருக்கும் மதியே சக்தி
மாநிலம் காக்கும் மதியே சக்தி
தாழ்வு தடுக்கும் சதிரே சக்தி
சஞ்சலம் தீர்க்கும் தவமே சக்தி

வீழ்வு தடுக்கும் விறலே சக்தி
விண்ணை அளக்கும் விரிவே சக்தி
ஊழ்வினை நீக்கும் உயர்வே சக்தி
உள்ளத்து ஒளிரும் உயர்வே சக்தி''

என்றெல்லாம் பாடியுள்ளார்.

இந்து மதத்தின் அறு சமயங்களில் சக்தியை முழுமுதற் கடவுளாகவும், சக்தியினின்றும் எல்லாம் தோன்றியதாகவும் போற்றி வணங்குவது சாக்தம் எனப்படும். எல்லாம் வல்ல மகாலட்சுமியின் சத்வ, ராஜஸ, தாமஸ குணங்களினின்றும் முறையே சரசுவதி, இலட்சுமி மற்றும் மகாகாளி தோன்றியதாக மார்க்கண்டேய புராணத்தில் தேவி மகாத்மியத்தில் கூறப்பட்டுள்ளது.

சக்தி வழிபாட்டிற்குரிய முக்கிய திருவிழா நவராத்திரியாகும். முதல் மூன்று நாட்கள் வெற்றியைத் தொடுக்க அன்னை பராசக்திக்கும், இடையில் உள்ள மூன்று நாட்கள் செல்வத்தை வாரி வழங்க இலட்சுமிக்கும் கடைசி மூன்று நாட்கள் கல்வியை அளிக்க சரசுவதிக்கும் உரியனவாகக் கொண்டு வழிபடப்படுகிறது. எல்லா நாட்களிலும் வழிபாடு இயற்ற இயலாதவர்கள் கடைசி நாளன்று சரசுவதியை வணங்குவர். எனவே அந்நாள் சரசுவதி பூசை செய்யும் நாளாகக் கொள்ளப் படுகிறது.

கல்விக் கடவுளாகிய கலைமகள் பிரமாவின் நாவில் உறைவதாகப் போற்றப்படுகிறாள். ''அஞ்சத்துவசம் உயர்த்தோன் செந்நா'' அவளது உறைவிடங்களில் ஒன்று என்பர் குமரகுருபரசுவாமிகள். ''நாவிற் சரசுவதி நற்றுணையாக'' என்பது கந்தர் சட்டி கவசம். ஒருவன் கசடறக் கற்று உணர்ந்தவனா அல்லது மூடனா என்பது அவளது வாக்கு தெளிவாக உணர்த்திவிடும். எனவே நாமகள் எனத் துதிக்கப்பெறும் சரசுவதியை

நாவிறகுடி கொள்வதாகக் கருதுவது பொருத்தமாகத் தெரிகிறது.

காளியை மூலவராகக் கொண்ட கோயில்கள் தமிழகத்தில் பல உள்ளன என்பது யாவரும் அறிந்த ஒன்று. அஷ்டலட்சுமி திருவுருவங்களை மூலவர்களாக உடைய கோயில் அண்மையில் சென்னையில் கட்டப் பட்டுள்ளது. கலைமகளை மூலவராகக் கொண்ட ஒரே கோயில் தஞ்சை மாவட்டத்தில் கூத்தனூரில் உள்ளது.

திருவாரூர்-மாயவரம் பாதையில் பூந்தோட்டம் என்ற ஊரினின்றும் ஏறக்குறைய முக்கால் கி. மீ. தொலைவில் அரசலாற்றின் கரையில் கூத்தனூர் உள்ளது. கி.பி. 1146 முதல் 1173 வரை சோழ அரியணையை அலங்கரித்த இரண்டாம் இராசராச சோழன் தன் அவைப்புலவரான ஒட்டக்கூத்தருக்கு இந்த ஊரைப் பரிசாக வழங்கிய காரணத்தால், இது கூத்தனூர் என்ற பெயர் பெற்றது. ஹரி நாதேஸ்வரம் என்ற மற்றொரு பெயரும் இந்த ஊருக்கு உண்டு.

இங்கு அமைந்துள்ள கலை மகளுக்கு உரிய கோயில் திருச்சுற்று, முகமண்டபம், அர்த்தமண்டபம், அந்தரானம் கருவறை ஆகியவற்றைக் கொண்டது. ஒட்டக் கூத்தர் இங்கு அருள் பெற்றதைக் குறிக்க அவரது சிலை முகமண்டபத்தின் வாயிலுக்கு இடப்புறம் அமைக்கப் பட்டுள்ளது. அவரது வலக்கையில் எழுத்தாணியும், இடக்கையில் ஓலைச்சுவடியும் காணப்படுகின்றன. கருவறையில் தாமரை மலர் மீது பத்மாசனத்தில் அமர்ந்துள்ள அன்னையின் நான்கு கைகளில் பின் இரு கைகளில் தன் கணவனான பிரமாவைப் போன்று அக்க மாலையும், கமண்டலமும் உருவாக்கப்பட்டுள்ளன. எனவே இவள் ஞான சரசுவதி என வணங்கப்படுகிறாள். முன் இருகைகளில் ஓலைச்சுவடியும், சின் முத்திரையும்

காணப்படுகின்றன. தலையில் சடாமகுடம் அழகு செய்ய, ஸ்காந்த புராணத்தின்படி இவளுக்கு மூன்று கண்கள் அமைக்கப்பட்டுள்ளன. புன்னகை தவழும் கருணை பொழியும் இவளது திருமுகம் "சொல்விற்பனமும் அவதானமுங் கவி சொல்ல வல்ல நல்வித்தையும் தந்து அடிமை" கொள்வதாக அமைந்துள்ளது. அர்த்த மண்டபத்தில் பிரமா, பிள்ளையார், இலிங்கம், முருகன் ஆகியோர் உள்ளனர். பலிபீடத்தில் வலம்புரி விநாயகரும், இலிங்கத்தை அணைக்கும் நாகமும் உருவாக்கப் பட்டுள்ளன. திருச்சுற்றில தென்மேற்கு மூலையில் நடன விநாயகர் காணப்படுகிறார்.

ஒட்டக்கூத்தர் வரகவி பாடும் திறனை எய்த வேண்டி இங்கு அன்னையை நோக்கித் தவம் செய்த தாகவும், அன்னை அவருக்குத் தன் வாய்த் தாம்பு லத்தை அளித்ததாகவும், அதனால் அவர் வரகவி பாடும் வல்லமையை அடைந்ததாகவும் இங்கு ஒரு செவி வழிச் செய்தி நிலவுகிறது. மேலும் இங்கு செங்குந்தர்களில் தலைகளை ஒட்டவைத்ததாகவும் சொல்லப்படுகிறது, ஒட்டக்கூத்தர் இவளை "ஆற்றங்கரை சொற்கிழத்தி வாழிய" எனப் போற்றியுள்ளார்.

"பண்ணும் பரதமும் கல்வியும் தீஞ்சொற்
பனுவலும் எளிதில் எய்த
இங்கு எழுந்தருளி யுள்ள
நிலந்தோய் புழைக்கை
நற்குஞ்சரத்தின் பிடியோடு அரசு அன்னம்
நாணநடை கற்கும் பதாம்புயத்தாளாம்"

அன்னையைப் போற்றித் துதித்து உய்வோமாக.

## ''கடம்பூர் தேவர் பெருமாள்''
### (திருப்புகழ்)

ஒவ்வொரு இறைவடிவிற்கும் ஒவ்வொரு மலர் சிறப்பாகப் பேசப்படுகிறது. எடுத்துக்காட்டாக, சிவ பெருமானுக்குக் கொன்றை என்றால், திருமாலுக்குத் துளசியாம். அதே போன்று முருகப் பெருமானுக்கு கடம்பு, குராமலர், வெட்சி, செங்கழுநீர்மலர், காந்தள் என்ற மலர்கள் உரியனவாகத் திருவருட் செல்வர்களால் போற்றப்பட்டுள்ளன.

''ஒண்கடம்பும் புனையும்'' (திருப்புகழ்–19)

''குரவணி தரு சண்முகனே''
(திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ்-29)

''இசைமுரல் மதுரை முறை முறை பெடையுடன் இடறிய
முகைவில செச்சைவனப்பன்''
(திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்-8)

''செங்கழுநீர் மலர் மருவிய குருபரன்'' (திருவகுப்பு-18)

''கொங்கார்த்து இறைக்கும் நறைக்காந்தள்
குறிஞ்சி மலரோடு
அணிந்த நறுங் குஞ்சிப் பெருமாள்''
(முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ்-5)

என்பன அவர்களது திருவாக்குகளாம்.

இவ்வாறு பல மலர்கள் அவனுக்குச் சொல்லப் பட்டாலும், அவற்றில் மிகச் சிறந்தது கடம்பமலர். நக்கீரனார் தமது திருமுருகாற்றுப் படையில்,

''இருள்படப் பொதுளிய பராஅரை மராஅத்து
உருள்பூந் தணிதார் புரளு மார்பினன'' (வரி 10-11)

என்பர். இருள் உண்டாகும்படி நெருங்கித் தழைத்த, பருத்த அடியை உடைய செங்கடம்பினது பூ தேர் உருளை போன்ற வடிவினை உடையது. அத்தகைய பூக்களால் அமையப் பெற்ற மாலையை மால்மருகன் அணிந்துள்ளான் என்பதாம். அவன் உறையும் இடங்களில் "புதுப்பூங்கடம்பும்" ஒன்று அவர் மேலும் கூறுகிறார்.

மாங்குடி மருதனர் தம் மதுரைக் காஞ்சியில்,

"கடம்பின்
சீர் மிகு நெடு வேட்பேணி" (வரி 613-614)

எனக் கடம்பமரத்தின்கண் புகழ் மிக்க முருகன் வணங்கப் பட்டதாகக் குறிப்பிட்டுள்ளார், இளங்கோவடிகள்தம் சிலப்பதிகாரத்தில் அறுமுகனை "அலா கடம்பன்" என்றும், "கார் கடம்பந்தார் எங்கடவுள்" என்றும், "கடம்புசூடி" என்றும் "கடம்புண் தெய்வமாக" என்றும் பலவாறாகப் பேசுவதின் வாயிலாக கந்தனுக்கும் கடம்புக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை வலியுறுத்துகிறார். பரிபாடல், பெரும்பாணாற்றுப் படை, மணிமேகலை ஆகிய நூல்களிலும் இந்தத் தொடர்பு பேசப்படுகிறது.

முருகன் அணிந்துள்ள பல மலர்களையும் தம் 'வேல் விருத்தத்தில்' குறிப்பிடும் அருணகிரிப்பெருமான் கடம்ப மலருக்குத் தான் முதலிடம் அளித்துப் பெருமைப்படுத்துகிறார். அந்தப் திருப்பாடல் பின் வருமாறு:

"கொந்தார் மலர்க்கடம்புஞ் செச்சை மாலையுங்
குவளையுஞ் செங்காந்தளுங்
கூதாள மலருந் தொடுத்தணியு மார்பினன்" (6)

"நாளென் செயும் வினைதானென் செயும்எனை நாடிவந்த
கோளென் செயுங் கொடுங்கூற்றென்
செயுங் குமரேசர்இரு

தாளுஞ்சிலம்புந் சதங்கையுந் தண்டையுந் சண்முகந்
தோளுங்கடம்பும் எனக்கு முன்னேவந்து தோன்றிடினே"
88)

என்ற நம் "கந்தர் அலங்கார"த் திருப்பாடலில் அருணை கிரி வள்ளல் கடம்ப மலரைத்தான் சிறப்பிக்கிறார்.

இத்தகு நெருங்கிய தொடர்பு உடைமையால், அவன் கடம்பன என்ற பெயரையும் பெற்றான். "நங் கடம்பன்" என்பது அப்பர் திருவாக்கு. வேறு மலர்களால் அவன் அழைக்கப் பெறுவதில்லை என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. மேலும் இறைவனது வேறு எந்த வடிவமும் மலரால் அழைக்கப்படுவதில்லை. இவ்வாறாக முருகப் பெருமான் கடம்பமரத்தின் கீழ உறைவதாகவும், கடம்ப மாலையை அணிந்துள்ள தாகவும் கொள்ளப்படுகிறான் கடம்ப மரம் கார் காலத்தில் மலருவதால், கார் கடம்பு எனப் படுகிறது. கார் பருவம் வளப்பத்தைக் குறிப்பது கார்காலத்தில் மலரும் கடம்ப மலரை மாலையாக அணிந்து கடம்ப மரத்தில் கந்தன் உறைவது அவனது அருட்சிறப்பை உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

இத்தகு சிறப்பு மிக்க கடம்பமரத்தைத் தல மரமாகக் கொண்ட இரு தலங்களின் பெருமைகளை இந்தக் கட்டுரையில் காண்போம். தென் கடம்பந் துறை என்ற கடம்பர் கோயில் ஒன்று; மற்றொன்று திருக்கடம்பூர் என்ற மேலைக் கடம்பூர்.

தெனகடம்பந்துறை :

திருச்சி-கரூர் பெருவழியில் உழள குளித்தலையி னின்றும் ஒரு கிலோத் தொலைவில் இந்தக் கோயில் கடம்ப மரத்தைத் தலமரமாக உடைமையால் கடம்பம். கடம்பந்துறை, கடம்பவனம் என்றெல்லாம் அழைக்கப் படுகிறது. இம்மரத்தின் அடியிலிருந்து இறைவன்

கண்ணுவ முனிவருக்கும் அமரர்களுக்கும் காட்சி அளித்ததாகப் புராண வரலாறு படைத்த பதி இது.

''காலைக் கடம்பர், மத்தியானம் சொக்கர், அந்தித் திருவேங்கி நாதன்'' என மக்களிடையே வழங்கப்படுகிறது அதன்படி காலையில் வணங்கப்பட வேண்டிய தலம் இது. அப்பர் பெருமானது திருப் பாடலைப் பெற்ற இத்தலத்து இறைவன் வடக்கு நோக்கி இருப்பது ஒரு சிறப்பு. கங்கைக்கரையில் காசு விசுவநாதர் கோயில் வடக்கு நோக்கி இருப்பதுபோன்று காவிரிக்கரையில் இந்த ஆலயம் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. இறைவனது திருப்பெயர் கடம்பவன நாதர்: இறைவியின் திருநாமம் முற்றிலா முலையம்மை.

கருவறையில் மூலவருக்குப் பின்னால் உள்ள சுவரில் இறை வடிவை அமைக்கும் மரபைப் பல்லவப் பேரரசன் இராச சிம்மன் தோற்றுவித்தான். அவன் அமைத்த வடிவம் சோமாஸ் கந்த திருவுருமாம். பனமலைதளபுரீசுவரர் கோயில், மல்லை கடற்கோயில், காஞ்சிபுரம் கயிலாய நாதர் கோயில் ஆகிய வற்றில் இத்தகு அமைப்பினைக் காணலாம். திருவதிகையில் அன்னையும் அத்தனும் இருக்க, வேதாரண்யத்தில் இறைவனும் இறைவியும் திருமணக் கோலத்தில் காணப் படுகின்றனர். ஆனால் இங்கு மூலவருக்குப் பின்னால சப்த கன்னியர்களை உருவாக்கியிருப்பது வேறு எங்கும் இல்லாத தனிச் சிறப்பாகும். சிவ பெருமான் அந்தகா சூரனைத் தன் சூலத்தில் கோத்து ஆடியபோது அவனது உடம்பினின்றும் தரையில் சிந்திய இரத்தத்தில் ஆயிரக் கணக்கான அந்தகாசூரர்கள் தோன்றினர். இதைத் தடுக்க பிரமா, திருமால் ஆகியோர் தத்தம் சக்திகளை அனுப்பினர். அவர்களே சப்தகன்னியர் எனப்படுவர். பிரம்மி, நாராயணி, மகேசுவரி, கௌமாரி, இந்திராணி, வராகி, சாமுண்டி என்பவர்களே அவர்கள். இறைவனுக்கும் இவர்களுக்கும் உள்ள இந்தத்

தொடர்பைக் குறிக்கவே இங்குள்ள மூலவருக்குப் பின்னால் சப்தகன்னியர் அமைக்கப்பட்டனர் போலும்.

இங்குள்ள முருகன் ஆறுமுகங்களுடனும், பன்னிரு கைகளுடனும், வேடமங்கை வேழமங்கை இருபாலும் திகழ, நின்ற திருக்கோலத்தில் காட்சி அளிக்கிறான். திருவீதி உலாநாயகா ஒரு முகத்துடன் மயில் மீது சுகாசனத்தில் அமர்ந்த கோலத்தில் விளங்குகிறான். அவனது பின இரு கைகளில் சக்தியும் வச்சிரமும் இருக்க, முன் இரு கைகள் அபய, வரத முத்திரைகளில் உள்ளன. கலை அழகு மிக்க திருவுரு இது.

இவனை அருணகிரிப் பெருமான் ''புணரியு'' எனத் தொடங்கும் திருப்புகழால் பாடிப் பரவியுள்ளார். அதில் பழனி, திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், வயலூர், அடியார்கள் உள்ளம் ஆகிய இடங்களில் வாழும் வடிவேலனது வடிவைக் குறிப்பிடும்போது அவன் தன் தோள்களில் கடம்பமாலை அணிந்துள்ளதாகப் பாடியுள்ளது இத் தலத்திற்குப் பொருத்தமானதாகத் தோன்றுகிறது.

''துணர்விரி கடம்பமென் தொங்கலும்''

என்பது அவரது திருவாக்காம்.

**மேலைக்கடம்பூர் :**

சிற்ப உலகில் தனி இடம் பெற்றுள்ள இதன் சிறப்புகள் ''கரக்கோயில்'' என்ற கட்டுரையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

இந்தத் தலத்தில் சுற்றுப்புறத் தெய்வமாக விளங்கும் ஆறு தலைகள் பன்னிரண்டு கைகள் கொண்ட முருகப் பெருமானை அருணகிரிநாதர் ''வாருமிங்கே'' என்ற திருப்புகழில் அருள வேண்டுகிறார். மேலும் இந்தத் திருப்புகழில் கடல் வாடவும் சூரியன் தேர்

ஓடவும் முருகன் வேலை எறிந்ததாகவும் அருளி யுள்ளார்.

"சூரணங்கோட ஆழிபோய்கிடந் தேவாட
சூரியன் தேரோட அயிலேவி"

என்பது அவரது திருவாக்காம். தேரைப் போன்று அமைந்துள்ள இந்தக கோயிலில் எழுநதருளியுள்ள முருகனைப் பற்றிய திருப்பாடலில் அவன் ஏவிய வேலாயுதத்தால சூரியன் தேர் ஓடியதாக அருளி யுள்ளது படிததுப் படித்து இன்புறத்தக்கது.

---

## குடிமல்லம பரசுராமேசுவரர்

சைவ சமயத்தில் முழுமுதற் கடவுளாக வணங்கப் பெறும் சிவபெருமான் கோயில்களில் இலிங்கத் திருவுருவில் பொதுவாக மூலவராகத் தொழப்பட்டு வருகிறான். இலிங்கத் திருவுருவில் எந்த வடிவமும் அமைக்கப்படுவதில்லை. ஆகமங்களில் முகலிங்கம் என ஒரு வகை இலிங்கத் திருவுருவைப் பற்றி விதி உள்ளது. அதன்படி இலிங்கத்தில் ஒன்று முதல ஐந்து முகங்களை அமைக்கலாம். மூன்று முகங்களைக் கொணட இலிங்கத் திருவுருவை மூலவராகத் தென்னார்க்காடு மாவட்டத்தில் திருவக்கரையிலும், நான்கு முகங்கள் உடைய இலிங்கத் திருவுருவை அதே மாவட்டத்தைச் சார்ந்த திருவதிகைக் கோயிலின் திருச்சுற்றிலும் காணலாம். இத்தகைய அரிய அமைப்பு தமிழகத்தில் வேறு எந்தக் கோயிலிலும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகம விதிகளுக்கு வேறுபட்டுச் சிவபெருமானின் முழுவடிவைக்

கொண்ட அரிய இலிங்கத் திருவுரு குடிமல்லம் என்ற இடத்தில் உள்ளது.

ஆந்திர மாநிலத்தில் ரேணுகுண்டாவை அடுத்து இந்தச் சிற்றூர் உள்ளது. புகழ் மிக்க திருப்பதியி னின்றும் இங்கு செல்லப் பேருந்து வசதி உள்ளது. இங்குள்ள கோயில் சிறிய அளவிலானது. கருவறை வட்டவடிவமாக உள்ளது. இது கஜப்ருஷ்ட அமைப்பு அதாவது தூங்கானை அமைப்பு அல்லது ஓங்கார வடிவம் என்று சொல்லப்படும், மூலவராக உள்ள வடிவம் பரசு என்ற படைக்கலத்தை உடைமையில் பரசுராமர் என்ற திருமாலாகவும், இந்த வடிவத்தின் காலடியில் இருப்பது பிரமாவாகவும் கருதப்பட்டு, இந்த வடிவம் திருமூர்த்தி என இப்பகுதியில் வணங்கப்பட்டு வருகிறது. இந்தக் கருத்து முற்றிலும் தவறானதாகும்.

இங்குள்ள இலிங்கத் திருவுருவிற்குக் கீழே பொது வாகக் காணப்படும் ஆவுடையார் என்ற அமைப்பு இல்லை. ஏறத்தாழ ஐந்து அடி உயரம் உள்ள இந்த இலிங்கத் திருவுருவில் முன் பகுதியில் இரு கைகளுடன் சிவபெருமான் நின்ற நிலையில் உருவாக்கப் பட்டுள்ளான். இவனது வலக்கை தன் அன்பிற்கு உரிய மானின் பின் இரு கால்களையும் பிடித்துக்கொண்டிருக் கிறது. மான் தலைகீழாக உள்ளது. இடக்கையில் குண்டிகை அமைக்கப்பட்டுள்ளது. பரசு என்ற படைக் கலம் அவனது தோள்மீது சாத்தப்பட்ட நிலையில் உள்ளது. தலையில் தலைப்பாகை போன்ற அமைப்பு உருவாக்கப்பட்டுள்ளது; காதுகளில் குண்டலங்களும், தோள்களில் வாடுவலயங்களும், கைகளில் கடகங்களும், மார்பில் மாலையும் அமைக்கப்பட்டுள்ளன. மார்பில் முப்புரி நூல் உருவாக்கப்படவில்லை. ஆடை மிகவும் நுண்ணியதாக அமைக்கப்பட்டுள்ளதால், ஆண் குறி, தொடை ஆகியவை நன்றாகத் தெரிகின்றன. இந்த வடிவம் கலைத் திண்மையுடன் எழிலுற அமைந்

துள்ளது கண்டு இன்புறத் தக்கதாம். கைகளைக் கீழே ஊன்றியபடி உட்கார்ந்துள்ள ஒரு அரக்கனது இரு தோள்கள்மீது இவன் நின்றுகொண்டுள்ளான். அரக்கனது தலையில் சடா மகுடமும், கழுத்தில் மாலையும் காணப் படுகின்றன. அவனது இரு காதுகளும் நீண்ட அமைப்பினை உடையதாக உருவாக்கப்பட்டுள்ளன. அவன் சிரித்த முகத்துடன் காணப்படுகிறான்.

பரசு, மழு இரண்டும் ஒரே படைக்கலத்தைத் தான் குறிக்கிறது. பரசுராமனை ''மழுவலங்கை கொண்ட இராம நம்பீ'' எனப் பெரியாழ்வாரும், ''வென்றிமா மழுவேந்தி'' என மங்கை மன்னனும் அருளி யுள்ளதி னின்றும் இதை அறியலாம். சிவபெருமான் மழுவை ஏந்தியுள்ளதாகப் பல இடங்களில் தேவாரம் பாடிய மூவர்கள் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். சம்பந்தர் ''பரசு பாணியர்'' என்றும், அப்பர் ''பரசுதர பாணியானை'' என்றும் அருளியிருக்க, சுந்தரர் 'பரசாருங்கரவா' எனக் கூறியுள்ளார். எனவே பரசும் மழுவும் ஒன்றே என்பது தெளிவாகிறது. மான் சிவ பெருமானுக்கு உரிய அடையாளம்; திருமாலுக்கு அல்ல. ''மான் மருவுங் கையானை'' என்பது சுந்தரர் திருவாக்கு. சிவபெருமானது இடக்கையில் மானும், வலக்கையில் மழுவும் அமைப்பது மரபு. மேலும் அவனது கங்காள வடிவத்தில் ஆகமவிதிகளின்படி, அவனது பின்வலக்கை தன் அன்பிற்கு உரிய மானுக்கு ஏதோ அளிப்பது போன்ற தோற்றத்தில் இருக்க வேண்டும். எனவே இங்குள்ள வடிவம் சிவபெருமானே யன்றி, பரசுராமர் அன்று. இந்த வடிவத்துடன் பரசு என்ற படைக்கலம் இருப்பதால், இவன் பரசுரா மேசுவரர் என அழைக்கப்படுகிறான். இவன் காலடியில் உள்ளது பிரமா என்பதற்கு நான்கு தலைகளோ அல்லது கைகளில் அக்கமாலை, குண்டிகை போன்ற அடையாளங்கள் ஏதும் இல்லை. உருவம் அரங்கனைப் போன்றுதான் உள்ளது. சிவபெருமானது ஆட

வல்லான், ஆலமர் செல்வன் ஆகிய வடிவங்களின் காலடியில் முயலகன் என்ற அரக்கன் இருப்பதைக் கருத்தில் கொண்டால், இதை அரக்கனாகக் கொள்வதே பொருத்தமாகந் தோன்றுகிறது.

இந்திய நாட்டில் உள்ள இரண்டு தொன்மையான இலிங்கத் திருவுருவங்களில் இது ஒன்று; மற்றொன்று இலக்னோ அருங்காட்சியகத்தில் உள்ளதாகத் தெரிகிறது. தொன்மையானது மட்டுமன்றி, கலை அழகுமிக்க இந்த வடிவம் காணவேண்டிய ஒன்றாகும்.

---

## ஆந்திர மாநில சிற்பக் கருவூலம்

ஆந்திர மாநிலத்தில் புகழ்மிக்க சிற்பங்களைக் கொண்ட அமராவதி போன்ற இடங்களுடன் எண்ணத் தக்க ஊர் அருட்டப்பள்ளி. இந்தச் சிற்றூர் பல அரிய இறை வடிவங்களைக் கொண்டிருப்பினும் வெளியுலகிற்கு அவ்வளவாகத் தெரியாது இருப்பது உண்மையிலேயே வருந்தத்தக்கதாம்; சென்னையினின்றும் நாகலாபுரம் செல்லும் வழியில் இந்தச் சிற்றூர் அமைந்துள்ளது. இந்த ஊருக்குச் செல்லும் வழியில் புகழ்மிக்க பெரிய பாளையம் பவானி அம்மன் கோயில் உள்ளது. தமிழகத்தைச் சார்ந்த ஊத்துக்கோட்டையினின்றும் ஏறக்குறைய ஒரு கிலோத் தொலைவில் ஆனால் ஆந்திர மாநிலத்தில் இந்த ஊர் உள்ளது.

இந்தத் தலம் திரு நீலகண்டேசுவரர் திருத்தலம் எனப் போற்றப்படுகிறது. பள்ளி கொண்டேசுவரர் திருக்கோயில் எனப் பெறும் இங்குள்ள திருக்கோயிலில்

மூலவராக எழுந்தருளியுள்ள இலிங்கத் திருவுரு வால்மீகேசுவரர் என அழைக்கப்பெறுகிறான். இந்தக் கோயிலை அடுத்துள்ள மண்டபத்தில் நீலகண்டேசுவரரின் வடிவம் காணப்படுகிறது. பள்ளி கொண்ட திருக்கோலம் திருமாலுக்கு உரிய ஒன்று. இருப்பினும் இங்கு சிவபெருமான் பள்ளி கொண்ட நிலையில் உள்ளது வேறு எங்கும் இல்லாத ஒன்றாம். கிழக்கு நோக்கிப் படுத்துள்ள ஏறத்தாழ ஏழு அடி நீளமுள்ள இவன் கட்டமைந்த உடலைக் கொண்டவன். தெற்கில் தலைவைத்துப் படுத்துள்ள இவனது நான்கு கைகளில் முன்வலக்கை தலைக்குக் கீழ் உள்ளது. நீட்டியபின் பின்வலக்கையில் மழுவும், நீட்டிய பின்இடக்கையில் மானும் காணப்பட, முன்இடக்கை தொடை மீது அமைக்கப்பட்டுள்ளது. சடா மகுடத்தில் திங்களும் கங்கையும் காணப்படுகின்றன. இவன் பெண் சுமந்த பாகத்தான் என்ற காரணத்தால் இவனது வலக் காதில் குழையும், இடக்காதில் தோடும் உள்ளன. இறைவனுக்கு மேல்புறமாக இரு கைகளைக் கொண்ட சர்வமங்கல நாயகி என்ற பெயருள்ள அன்னை உட்கார்ந்த நிலையில் காணப்படுகிறாள். அவளது வலக்கையில் தாமரை மலர் இருக்க, இடக்கை இறைவனது கழுத்துக்கு நேராக நீட்டிய நிலையில் உள்ளது. இது இறைவன் உண்ட நஞ்சைத்தொண்டையில் நிறுத்தும்படி அவனை அன்னை வேண்டிக் கொள்வதைச் சுட்டிக் காட்டுகிறது. சுதையிலான இந்த வடிவிற்கு அபிடேகம் கிடையாது. அவ்வப்போது புனுகுச் சட்டம் சாத்தப் பெறுகிறது. இறைவனுக்கு அபிடேகம் செய்யப்படாத காரணத்தால், அவனது திருவடி அமைந்துள்ள ருத்ர பாதத்திற்குத்தான் அபிடேகம் செய்யப்பெறுகிறது. ஆகமத்தில் விதித்தபடி நஞ்சை அருந்திய இந்த வடிவம் நின்ற நிலையிலும் இல்லை; உட்கார்ந்த நிலையிலும் இல்லை. அதினின்றும் மாறுபட்டுப் படுத்த நிலையில் உள்ளது. நஞ்சை உண்டபின் ஏற்பட்ட மயககம்

எனப்படுவதால், இங்கு இந்த வடிவம் படுத்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. ஆளுடைய நம்பிகள் தம் திரு நாகைக் காரணோம் திருப்பதிகத்தில்,

"உலவுதிரைக்கடல் நஞ்சை அன்று அமரர்வேண்ட
உண்டருளிச் செய்தது உமக்கு இருக்க
ஒண்ணாதிடவே"

என்பர். அமரர்கள் வேண்டுகோளின் பேரில் நஞ்சை உண்ட இறைவனால் இருக்க இயலவில்லை என்பதாம். இதனால்தான் இங்கு இறைவனைப் பள்ளி கொண்ட நிலையில் அமைத்துள்ளார்கள். மேலும் நஞ்சினை ஏற்கனவே உண்டுவிட்டமையால், இந்த வடிவம் நஞ்சு உண்டு கிண்ணத்தை, ஆகமத்தின்படி, ஏந்தியபடி அமைக்கப்படவில்லை. நஞ்சுண்ட திருத்தலம் எனப் படுவதால், இது காள கூட க்ஷேத்திரம் என்று அழைக்கப்படுகிறது நஞ்சை உண்ட மயக்கத்தால், உலகம் எங்கும் இருள் பரவிவிட்டது; அமரர்கள் அதனை நீக்க இறைவனை வேண்டினர். அவர்களது வேண்டுகோளுக்கு இணங்கி, இறைவன் இருளை நீக்கி அருள் புரிந்த காலம் "பிரதோஷகாலம்" என்றும், ஏனைய சிவாலயங்களைவிட கால கூட க்ஷேத்திரமாகிய இங்கு பிரதோஷ பூசனை தனிச்சிறப்பு பெற்றது என்றும் சொல்லப்படுகிறது.

"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதா நட்பு" (788)

என்பர் தெய்வப்புலவர் திருவள்ளுவநாயனார். உடுத்த ஆடை குலைந்தபோது அதைச் சரிசெய்யக் கைவிரைந்து செல்கிறது; அது போன்று நண்பனுக்குத் துன்பம் உற்ற போது அதைத் துடைக்க உடனடியாக உதவுவதே நட்பின் நல்லிக்கணம் எபைதாம். இதற்கு ஓர் இலக்கியமாக இங்கு சிவபெருமானின் நண்பன் எனப் படும் குபேரன் அவனது மயக்க நிலையைப் போக்க

அவனுக்கருகில் சாமரம் வீசும் நிலையில் காணப்படுகிறாள். மேலும் அகத்தியர், புலத்தியர் மற்றும் கௌதமர் ஆகியோரும் உள்ளனர். வடபுறச் சுவரில் தும்புரு, வசிட்டர், மற்றும் விசுவாமித்திரரும், தென் புறச் சுவரில் பிருகு மற்றும் பிரமாவும் காணப்படுகின்றனர். கதவை ஒட்டிய கீழ்ப்புறச்சுவரில் இந்திரன் வால்மீகி, திருமால், மார்க்கண்டேயர் மற்றும் நாரதர் உள்ளனர். இறைவன் படுத்துள்ள இருக்கையை ஒட்டிப் பிள்ளையாரும், இரு துணைவியர்களுடன் முருகனும் அமைக்கப்பட்டுள்ளனர்.

சிவபெருமானின் மேலே குறிப்பிட்ட அரியதிருவுருவுடன் வால்மீகேசுவரர் திருக்கோயிலில் காணவேண்டிய சிற்பங்கள் மூன்று இறைவனது கருவறையின் தென்புறச் சுவரின் வெளிப்புறப் புரையில் எல்லா சிவன் கோயில் களிலும் உள்ளது போன்று இங்கும் ஆலமர் செல்வன் வடிவம்தான் காணப்படுகிறது. திருமயிலாடுதுறை வள்ளலார் கோயில், தென் ஆற்காடு மாவட்டத்தைச் சார்ந்த மேலைக் கடம்பூர் அமிர்தகடேசுவரர் கோயில், சேந்த மங்கலம் ஆபத்சகாயேசுவரர் கோயில் போன்ற ஒரு சில கோயில்களில் உள்ளது போன்று இங்கும் அவனுடன் அவளது ஊர்தியான காளை அமைக்கப் பட்டுள்ளது. இது மட்டுமன்றி, அவனுடன் அன்னையும் உருவாக்கப்பட்டுள்ளது இந்தக் கோயிலின் தனிச் சிறப்பாகும்.

உத்குடி இருக்கையில் காளைமீது உட்கார்ந்துள்ள இவனது நான்கு கைகளில் பின்வலக்கையில் மழுவும், பின்இடக்கையில் மானும் இருக்க, முன்இடக்கை முழங்கால் மீதும், முன்வலக்கை சின்முத்திரையிலும் உள்ளன. இவன் அணிந்துள்ள யோகபட்டையைச் சுற்றிப் பாம்பு அமைக்கப்பட்டுள்ளது. இவனது காலடியில் முயலகன் இருக்க, இருக்கைமீது முனிவர்கள் காணப்படுகின்றனர். பெண் ஒரு பாகம் உடையான்

என்பதற்கு ஏற்ப, இவனது இடக்காதில் தோடும், வலக் காதில் குண்டலமும் அமைக்கப்பட்டுள்ளன. இவனது இடப்பக்கம் அன்னை இவனை அணைத்தவாறு காணப்படுகிறாள்.

அறவடிவு, அறவாசான் வடிவு மற்றும் மறவடிவு என்ற இறைவனது மூன்று வடிவங்களில் அறவாசான் வடிவம்தான் ஆலமர் செல்வன் வடிவம். இறைவன் பெண் ஒரு பாகத்தான் எனினும் அவனது யோக இயல்பு தான் திருவருட்செல்வர்களால் வலியுறுத்தப்படுகிறது.

"மதிநுதல் மங்கையோடும் வடபால் இருந்து
மறையோதும் எங்கள் பரமன்" (கோளறு பதிகம்-1)

என்பர் ஞானக்குழந்தை.

"நேரிழை யாளைக் கலந்து இருந்தே புலன்கள்
ஐந்தும் வென்றானை"
(திருவீழிமிழலைத் திருத்தாண்டகம்-3)

"மங்கையைக் கெழுவின யோகினர்"
(திருஅதிகை வீரட்டானம்-5)

என்பன அப்பர் அடிகளின் திருவாக்குகள். இக் கருத்தையே கருவூர்த் தேவர் தம் கங்கை கொண்ட சோழீச்சரத்தைப் பற்றிய திருவிசைப்பாவில்,

"மங்கையோ டிருந்தே யோகு செய்வானை" (11)

என வலியுறுத்தியுள்ளார். இதனின்றும் இறைவன் மக்கள் மனையறம் பேண வேண்டி மங்கையொரு பாகத்தனனாக விளங்கினாலும், அவனது யோக இயல்புதான் சிறப்புமிக்கது என்பது தெளியலாம். திருவருட் செல்வர்களது திருவாக்குகளுக்கு இந்த வடிவம் ஓர் இலக்கியமாக அமைந்துள்ளது என்னலாம்.

அன்னை பராசக்தியின் வடிவங்களில் ஒன்று இராசராசேசுவரி. பொதுவாக இந்த வடிவை உட்கார்ந்த

நிலையில் அமைப்பதுதான் மரபு, இந்த மரபை மீறி அவன் இங்கு நின்ற நிலையில் காணப்படுகிறான். அன்னையின் கருவறையின் தென்புற வெளிப்புறச் சுவரில் உள்ள புரையில் இந்த வடிவம் உள்ளது. நான்கு கைகளைக் கொண்ட இந்த வடிவத்தின் முன்வலக்கையில் அம்பும், முன் இடக் கையில் கரும்பு வில்லும் இருக்க, பின் வலக்கையில் அங்குசமும், பின்இடக்கையில் பாசமும் உள்ளன.

அடுத்துக் காண வேண்டியது திருச்சுற்றில் கருவறைக்குப். பின்புறம் உள்ள திருமாலினது வடிவம் இவனது பின்வலக்கையில் சக்கரமும், பின்இடக் கையில் சங்கும் இருக்க. முன் இடக்கை வரதமுத்திரை யிலும், முன்வலக்கையில் கபாலமும் அமைக்கப் பட்டுள்ளன. கபாலம் சிவபெருமானது அடையாளங் களில் ஒன்று. "கபால மேந்துங்கையர்" என சம்பந்தரும், "கையிலோர் கபாலம் ஏற்றி" என அப்பரும் அருளி இருக்க, "கையது கபாலம்" என்பர் சுந்தரர். கையில் கபாலம் உடைய காரணத்தால், அவனுக்கு "காபாலி" என்ற பெயரும் உண்டு. இவனது பிச்சாடன வடிவத்தில் முன்இடக்கையில் கபாலம இருக்க வேண்டும என்பது ஆகமத்தில் உள்ள விதி. இவ்வாறு சிவபெருமானது அடையாளமான கபாலத்தை இங்கு திருமால் தன் கையில் ஏந்தி யுள்ளான்.

அரியும் அரனும் ஒன்றே என்பது ஆன்றோர்கள் திருவாக்கு.

"அலை கடல்நடு **அறிதுயில் அமர் அரியுரு** வியல் பினள்"

எனச் சம்பந்தர் சிவபெருமான் கடல் நடுவில் அரியுருவில் அறிதுயில் புரிவதாக தம் திருச்சிவபுர திருப்பதிகத்தில் குறிப்பிடுவதன்மூலம் இருவரும் ஒருவரே என உணர்த்துகிறார்,

"நான்முகனே முக்கண்ணப்பர் என்பொல்லாக்
கனிவாய் தாமரைக்கட் கருமாணிக்கமே"

என நம்மாழ்வார் திருமாலைப் பிரமனாகவும், சிவ பெருமானாகவும் போற்றுவதின் மூலம் சம்பந்தப் பெருமானது கருத்தை வலியுறுத்துகிறார். இவ்வாறு சிவபெருமானும், திருமாலும் ஒருவனே எனப்படுவதால் சிவபெருமானுக்கு உரிய கபாலத்தைத் திருமாலின் கையில் அமைத்தான் போலும் இந்தச் சிலையை உண்டாக்கிய சிற்பி.

இங்ஙனம் இறைவனது பல அரிய வடிவங்களைத் தன்னகத்தே கொண்ட இந்தக் கோயிலை சென்னை செல்லும் இறையன்பர்கள் சென்று வணங்கலாம்.

---

## சாளுக்கியர்களின் கலைச் செல்வங்கள்

இந்திய திருநாட்டில் பல்வேறு சிறப்புகளுடன் செங்கோலோச்சிய புகழ்மிக்க அரச பரம்பரைகளில் சாளுக்கியர் வம்சம் ஒன்று. இவர்கள் 5ஆம் நூற்றாண்டு முதற்கொண்டு ஐஹோலே, பட்டடக்கல் மற்றும் வாதாபி ஆகியவற்றை ஒன்றன்பின் ஒன்றாகத் தலை நகராகக் கொண்டு ஆட்சி புரிந்தார்கள். இருப்பினும் இவர்கள் வாதாபி சாளுக்கியர் என்றே அழைக்கப் பட்டனர். சாளுக்கியர்கள் என வரலாற்றில் இடம் பெற்றனர்.

பெங்களூரினின்றும் ஷோலாப்பூர் செல்லும் இருப்புப் பாதையில் பாதாமி என்ற இருப்புப் பாதை நிலையம் உள்ளது. அங்கிருந்து ஏறக்குறைய நான்கு

கிலோ மீட்டர் தொலைவில் பாதாமி என்ற ஊர் உள்ளது. இங்கிருந்து பட்டடக்கல் ஐஹோலே ஆகிய இடங்களுக்குச் செல்லப் பேருந்து வசதி உள்ளது.

**ஐஹோலே :**

பரசுராமர் அரசர்களைப் பழிவாங்கும் எண்ணத்தில் அவர்களைக் கொன்றதால், இரத்தம் பெருக்கெடுத்து ஓடுகிறது. அதனால் ஐஹோலேயை அடுத்துள்ள ஆற்றில் தண்ணீருக்குப் பதில் இரத்தமே ஓடியது, இதைக் கண்ணுற்ற மக்கள் ஐஹோலே (என்ன இப்படி ஆகிவிட்டதே) எனத் தம் வியப்பை வெளியிட்டனர். அதனால் இந்த ஊருக்கு ஐஹோலே என்ற பெயர் ஏற்பட்டதாக ஒரு செவிவழிச் செய்தி இங்கு நிலவுகிறது.

இங்கு எழுபதுக்கு மேற்பட்ட கோயில்களும், இரு குடைவரைகளும் உள்ளன. இங்குதான் சாளுக்கிய மன்னர்களின் சிறப்புமிக்க இரண்டாம் புலிகேசியின் (கி. பி. 608 முதல் 642 வரை அரசாண்டவன்) வரலாற்றுப் புகழ் கொண்ட கல்வெட்டு உள்ளது. இங்குள்ள கோயில்கள் பல பாணிகளில் கட்டப் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. கோட்டையை அடுத்துள்ள கோயில் துர்க்கா கோயில் என்று அழைக்கப் படுகிறது. இந்தப் பெயரினின்றும் இது துர்க்கையை மூலவராக உடைய கோயில் எனக்கருதலாம். உண்மை அது அன்று. தூர்க்கம் அதாவது கோட்டையை அடுத்துள்ள கோயில் என்ற காரணத்தினால் இது துர்க்கா கோயில் என்ற பெயரைப் பெற்றது. இங்குள்ள சில கோயில்கள் இதைப் போன்ற காரணங்களில் இத்தகைய விசித்திரமான பெயர்களைப் பெற்றுள்ளன. கவுடர் கோயில், லாட்கானா கோயில் என்பனவற்றை எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம். துர்க்கா கோயில் ஓங்கார வடிவினைக் கொண்ட தனிச்சிறப்பு உடையது.

தமிழகத்தில் தொண்டை மண்டலத்தில் கோயில்களின் விமானம் ஒங்கார வடிவு அதாவது தூங்கானை அமைப்பில் கட்டப்படும் மரபு பின்பற்றப்பட்டு வந்தது. சென்னை அடுத்துள்ள திருவொற்றியூர்க் கோயிலை உதாரணமாகக் கூறலாம். ஒரு சில கோயில்களில்—எடுத்துக்காட்டாகச் சென்னையை அடுத்த போரூர் கோயிலில் கருவறை இந்த அமைப்பினைக் கொண்டுள்ளது. ஆனால் இங்குக் கோயிலே இந்த அமைப்பில் உள்ளது ஒரு அரிய படைப்பாகக் கருதலாம். இங்குமேலும் காதம்பரி நாகர் பாணியில் சூரியன் கோயில், ரேகா நாகரி பாணியில் சக்கரகுடி கோயில், திராவிடப் பாணியில் நாதர் கோயில், ஒரு மாடி கொண்ட கவுடா கோயில், இரட்டைமாடி கொண்ட லாட்கானா கோயில் போன்ற பல அமைப்புகளைக் கொண்ட கோயில்கள் இங்கு உள்ளன. இந்திய நாட்டில் உள்ள கோயில்களின் பல்வேறு அமைப்புகளை ஒரே இடத்தில் இங்குக் காண்பது போன்று வேறு எங்கும் காண இயலாது.

சூரியனை மூலவராகக் கொண்டது லாட்கானா கோயில், தாமரையை ஏந்தியுள்ள சூரியனைச் சுற்றி இந்திரன், வாயு, வருணன் என்ற எட்டுத்திக்குப் பாலர்கள் காணப்படுகின்றனர். ஒரே கல்லில் எட்டு திக்கு பாலர்களுடன் கூடிய சூரியன் வடிவம் காண்டற்கரிய சிறப்பான ஒன்றாம்.

இங்குள்ள இரு குடைவரைகளில் ஒன்று ஊரை அடுத்தும், மற்றொன்று அருகில் உள்ள மலை மீதும் உருவாக்கப்பட்டுள்ளன. இவற்றின் காலம் கி. பி. 500 முதல் 550 என பெர்கூசன் மற்றும் பர்கஸ் "இந்திய குடை வரைக் கோயில்கள்" என்ற தம் நூலில் குறிப்பிட்டுள்ளனர்.

ஊரை அடுத்துள்ள குடைவரையில் மையமண்டபத்தின் ஒரு பக்க சுவரில் கங்கை வார் சடைக்கரந்தார்

வடிவம் புடைச் சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளது. கங்கையைத் தன் தலையில் ஏற்ற காரணத்தால், சிவ பெருமானது தலையில் கங்கைதான் அமைக்கப் பட்டிருப்பாள். ஆனால் இங்கு சிவபெருமானது தலைக்கு மேல் கங்கையுடன் யமுனையும் சரசுவதியும் காணப்படுகின்றனர். வடநாட்டில் உள்ள சமயப் பெருமை மிக்க திரிவேணி சங்கமத்தை உணர்த்தத்தான் இத்தகைய அமைப்பினை உருவாக்கினார்கள் போலும். இது காணத்தக்க ஒன்றாம்.

மைய மண்டபத்தை அடுத்துள்ள மேடைப் பகுதியில் சிவபெருமானது ஆடவல்லான் வடிவம் காணப்படுகிறது. இவனைச் சுற்றி மகேசுவரி, இந்திராணி, ஆகிய சப்த மாதர்கள் புடைச்சிற்பங்களாக உருவாக்கப்பட்டுள்ளனர். அந்தகா சூரனுடன் சிவ பெருமான் நடத்திய போரில் சப்த மாதர்கள் உதவி யுள்ளார்கள், அந்தகாசூரனை அடக்கிய வெற்றிக் களிப்பில் சப்தமாதர்களுக்கு இடையில் சிவபெருமான் நடனமாடியதை இது குறிப்பதாகக் கொள்ளலாம். சப்தமாதர்களுடன் சிவபெருமான் நடனமாடுவது பிற்காலத்தில் இராஜபுத்ர பரம்பரையைச் சார்ந்த சாண்டல்ல மன்னர்களின் கலையில் சிறப்பிடம் பெற்றுள்ளது. கங்கைவார் சடைக் கரந்தான் மற்றும் சப்த மாதர்களுடன் கூடிய ஆடவல்லான் வடிவங்கள் கலைத்திண்மையுடன் உருவாக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

பட்டடக்கல்:

ஐஹோலே யில் இருப்பது போன்று பெரும் பெரும் அளவில் கோயில்கள் இங்கு இல்லாவிடினும், இங்கும் ஒரு சில அமைப்புகளைக் காணலாம். அவற்றில் நாகரி பாணியில் கனகநாதர் மற்றும் பாப நாதர் கோயில்கள், திராவிடப்பாணியில் விருபாட்சர்,

மல்லிகார்சுனர் மற்றும் சங்கமேசுவரர் கோயில்கள் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இவற்றில் விருபாட்சர் கோயில் சிறப்புமிக்கது. இங்கு சூரியனது அரிய வடிவம் ஒன்று காணப்படுகிறது. ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் சூரியன் நின்ற நிலையில் காணப்படுகிறான். அவனுக்கு முன்னால் அவன்றன் தேரோட்டியான அருணன் உட்கார்ந்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளான். இது,

"நிரைமணிப் புரவி ஓரேழ் பூண்ட
ஒருதனி யாழிக் கடவுள் தேர்மிசை
காலைச் செங்கதிர்க் கடவுள்"
(நீர் படைக்காதை-வரிகள் 135-137)

என்ற சிலப்பதிகார வரிகளை நினைவூட்டுவதாக அமைந்துள்ளது.

பாதாமி :

இந்த ஊரின் நடுவில் உள்ள மலைமீது ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கடுக்காக நான்கு குடைவரைகள் உருவாக்கப்பட்டுள்ளன. தமிழகத்தில் உள்ள கருங் கற்களைப் போலன்றி இங்குள்ள கற்களில் சிற்பங்கள், குடைவரைகள் ஆகியவற்றை அமைப்பது எளிமையான தாம். இவற்றின் காலம் கி. பி. 550 முதல் 579 வரை என்பதாக வரையறுக்கப்பட்டுள்ளது. முதல் குடை வரை சிவனுக்கு உரியது; இரண்டாவது, மூன்றாவது குடைவரைகள் திருமாலுக்கு உரியன; மேலே உள்ள நான்காவது குடைவரை அருகனுக்கு உரியது. திரு மாலுக்கு உரிய குடைவரைகளில் வராகம் மற்றும் நரசிம்மம் ஆகிய வடிவங்கள் சிறப்பாக அமைந் துள்ளன.

சிவனுக்குரிய முதல் குடைவரையின் முகப்பில் பதினெட்டுக் கைகளைக்கொண்ட ஆடவல்லான் வடிவம்

உருவாக்கப்பட்டுள்ளது. ஆகமத்தில் கூறப்பட்டுள்ள ஒன்பது வகை ஆடவல்லான் வடிவங்களில் ஆறாவது வடிவிற்குத்தான் பதினாறு கைகள் விதிக்கப்பட்டுள்ளது. ஆனால் இங்குப் பதினெட்டுக் கைகள் அமைக்கப் பட்டுள்ளன. சூலம், மழு போன்ற பல படைக்கலங் களைக் கைகளில் ஏந்தியுள்ள இந்த வடிவின் முன் இடக்கைகளில் ஒன்று மார்பின் குறுக்காக கஜ முத்திரையில் காணப்படுகிறது. இது தண்ட முத்திரை என்றும் கூறப்படும். இவனது இரு கால்களும் சதுர அமைப்பில் அமைந்துள்ளது. இதை சதுர நடனம் என்பர். இவனுக்குப் பின்னால் இவனது ஊர்தியான காளை காணப்பட, இவனை அடுத்துப் பிள்ளையார் உருவாக்கப்பட்டுள்ளான். பதினெட்டுக்கைகளுடன் கலை அழகுடன் அமைக்கப்பட்ட இது காண வேண்டிய ஒரு அரிய படைப்பாகும்.

# போசாளர்களின் காலப் படைப்புகள்

மதிய இந்தியா என்ற தக்கணப் பகுதியில் அரசாண்ட புகழ்மிக்க அரச பரம்பரையில் ஹோய் சால வம்சம் ஒன்று. இவர்களில் கி. பி. 1100 முதல் 1106 வரை ஆட்சி புரிந்த முதலாம் வல்லாளன் பேளூரைத்தன் தலைநகரமாக்கினான். இவனுக்குப் பின் இவனது உடன்பிறப்பான பிட்ட தேவன் கி. பி. 1111 முதல் 1112 வரை செங்கோலோச்சினான். வைணவ சமய ஆசாரியரான இராமனுஜரால் இவன் சமணத்தை விட்டு வைணவத்தைத் தழுவினான், அதன்பின் விஷ்ணு வர்த்தனன் என்ற பெயரால் வழங்கப் பெற்றான். இவன் துவார சமுத்திரத்தைத் தன் தலைநகரமாகக் கொண்டான், இது தற்காலத்தில் ஹளேபேடு (பழைய வீடு) என்ற பெயரில் வழங்கி வருகிறது. இவனது காலத்தில் பேளூர் உட்பட பல இடங்களில் கோயில்கள் கட்டப் பெற்றன.

தக்கணத்தில் நான்கு நூற்றாண்டுகளுக்கு முன் ஆட்சி செலுத்திய சாளுக்கியர் காலத்தைவிட போசாளர்கள் காலத்தில் மென்மையான கற்கள் உபயோகப்படுத்தப்பட்டதின் காரணத்தால், தந்தம், தங்கம் போன்றவற்றில் செய்வது போன்று இந்தக் கற்களில் நுணுக்கமான வேலைப்பாடுகளைக் கொண்ட கலை அழகு மிக்க சிற்பங்களை உருவாக்க முடிந்தது. போசாளர்கள் காலத்தில் தக்கண கோயில் கட்டிட மற்றும் சிற்பக்கலை மகோன்னத நிலையை அடைந்த தாகக் கருதப்படுகிறது. இவர்களது கலைச் செல்வங்கள் மிக்க கோயில்கள் சோமநாதபுரம், பேளூர் மற்றும் ஹளேபேடு ஆகிய இடங்களில் உள்ளன. சோமநாதபுரம் மைசூரினின்றும் நாற்பது கிலோ மீட்டர் தொலைவிலும்,

பேளூர் பெங்களூரினின்றும் இருநூற்று இருபத்திரண்டு கிலோ மீட்டர் தொலைவிலும், ஹளபேடு பேளூரி னின்றும் பதின்மூன்று கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ளன. பேளூர் மற்றும் ஹளபேடு ஆகிய இரு இடங்களில் உள்ள கோயில்களின் சிறப்புகளை இங்கு காணலாம்.

**பேளூர் :**

இங்குள்ள சென்னகேசவப் பெருமாள் கோயில் போசாளர்கள்பாணியில் உயரமாகக் கட்டப்பெற்ற மேடைமீது நட்சத்திர வடிவில் அமைந்துள்ளது. மூலவர் திருமால் என்பதற்கு ஏற்ப இருகைகளுடன் கூடிய கருடன் திருச்சுற்றில் கோயிலின் முகப்பில் காணப்படுகிறான். கோயிலுக்கு உள்ளே செல்லும்படி களுக்கு அருகில் உள்ள சிற்றாலயத்திற்கு கோபுர அமைப்பு உள்ளது இதன் தனிச் சிறப்புகளில் ஒன்றாம். இதை அடுத்து போசாளர்களின் அரச சின்னமான சிங்கத்துடன் கூடிய வீரன் காணப்படுகின்றான்.

அதிட்டானத்தின் கீழ் பகுதியில் சிறிய அளவிலான யானைகளில் வரிசை உருவாக்கப்பட்டுள்ளது. வெளிப் புறச் சுவரின் நடுப்பகுதியில் திருவாசியுடன் கூடிய நடனப் பெண்களின் சிறிய சிற்பங்கள், தூண்களைப் போன்ற அமைப்புகள் காணப்படுகின்றன. இதற்கு மேலே உள்ள பகுதி சற்று உள்ளடங்கி இருப்பது தற்காலத்தில் மாடிக் காட்டிடங்களில் உள்ள முன் பாகத்தை (பால்கனி) நினைவூட்டுவதாக உள்ளது. இங்கு காணப்படும் ஒவ்வொரு சிற்பத்திற்கும் மேலே கோபுரம் போன்ற அமைப்பு உருவாக்கப்பட்டிருப்பது இங்கு உள்ள மற்றுமொரு சிறப்பாகும்.

வெளிப்புறச் சுவர்களில் உள்ள பலகணிகள் தாம் எத்தனை எத்தனை விதமான வேலைப்பாடுகள்

கொண்டனவாக உள்ளன! இங்கு ஒரு பலகணியில் காணப்பெறும் சிக்கலான பின்னல் வேலைகள் தற்காலத்தில் இரும்பில் செய்யப்பெறும் வேலைகளுக்கு (Jolly works என்று சொல்லப்படும்) நிகர்ப்பனவாக உள்ளன. இந்தக் கோயிலில் உள்ள தூண்கள் வேறு வேறு அமைப்பில் உள்ளது கண்டு களிக்கத்தக்கனவாக உள்ளன. இவற்றில் பல திறப்பட்ட நுணுக்கமான சிற்ப வேலைப்பாடுகளும், வடிவங்களும் காணப்படுகின்றன. ஒரு தூணில் உருவாக்கப்பட்டுள்ள பெண்ணின் நல்லாள் ஒருத்தியின் முகப் பொலிவும், தலையில் அணிந்துள்ள மகுடமும், பருமனான கொங்கைகளும், அவற்றைத் தாங்க இயலாது ஒடிந்து விடுவது போன்ற துடி இடையும் நிற்கும் எழிலும் கலைக் கணகளுக்குப் பெரு விருந்தாக உள்ளது.

இது திருமாலுக்கு உரிய கோயிலாக இருப்பினும் இங்கு சிவபெருமானின் ஆடவல்லான், இராவணனுக்கு அருள்பாலிக்கும் அம்மான் போன்ற சைவத் திருவுருவங்கள் உருவாக்கப்பட்டுள்ளமை பரந்த சமய மனப்பான்மையினைச் சுட்டிக் காட்டுகிறது.

ஹளபேடு :

இங்குள்ள ஹொய்சாலேசுவரர் என்ற சிவபெரு மானுக்கு உரிய கோயிலின் அதிட்டானத்தில் சிறிய அளவிலான யானைகள், குதிரைகள் போன்ற பலவகை விலங்குகள் வரிசை வரிசையாகக் கலைப்பொலிவுடன் உருவாக்கப்பட்டுள்ளமை காண்போரைப் புல்லரிக்கச் செய்கிறது. இது சிவபெருமானுக்குரிய கோயிலாக இருப்பினும், இராமாயண நிகழ்ச்சிகளும் இங்கு காணப்படுகின்றன. இங்குள்ள யானைச் சிற்பங்களின் எண்ணிக்கை இரண்டாயிரத்துக்கு மேற்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

வெளிப்புறச் சுவர்களில் சிவபெருமான், அன்னை யுடன் கூடிய அண்ணல், ஆடவல்லான், பிள்ளையார், இராவணனுக்கு அருள்பாலிக்கும் அம்மான் போன்ற சைவத் திருவுருவங்கள் உள்ளன. இவையேயன்றி, கருடன் மேல் திருமால், கோவர்த்தன மலையைத் தாங்கும் கண்ணன் போன்ற வைணவ வடிவங்களும் சைவ வைணவ வேறுபாடின்றி அமைக்கப்பட்டுள்ளன. இவை இந்தக் கோயிலைக் கட்டிய மன்னனின் சமயப் பொறைக்கு ஒரு எடுத்துக்காட்டாம். இங்குள்ள வைணவத் திருவுருவங்களில் இராமபிரானைத் தாங்கும் எட்டுக் கைகள் கொண்ட அநுமானின் வடிவம் அரிய ஒன்றாம். தன் துணைவியருடன் பிரமர், கண்ணாடியில் தன் எழிலைக் கண்டு களிக்கும் பெண், இசைக்கருவியை இசைப்போள் போன்ற வடிவங்களும் காணப்படு கின்றன. ஒரு சிறிய இடம் கூட விடாது எங்கும் சிற்பங்களாக உள்ளது கண்கொள்ளாக் காட்சியாக உள்ளது.

இது போசாளர்களின் அதியுன்னதப் படைப் பாகக் கருதப்படுகிறது. இதன் வெளிப்புறச் சுவர்களில் காணப்பெறும் சிற்ப அற்புதங்களால் இது உலகில் உள்ள சிறப்புமிக்க கோயில்களில் ஒன்றாக எண்ணப்படுகிறது.

இங்கு உபயோகப்படுத்தப்பட்ட கற்கள் கருங் கற்களைவிட மென்மையாக இருப்பதால், இவற்றில் நுணுக்கமாக அரிய அழகுமிக்க சிற்பங்களை உருவாக்குவது எளிது என்பது சிற்பக்கலை வல்லுநர் களின் கருத்தாம். இருப்பினும் இங்குள்ள வடிவங்களின் கண்ணையும் கருத்தையும் கவரும் எழிலும், அவை அணிந்துள்ள அணிகலன்கள், ஆடைகள் இவற்றில் காணப்பெறும் நுண்ணிய வேலைப்பாடுகளும் காண்போரை வியப்பில் ஆழ்த்தும் என்பதில் சற்றும் ஐயமில்லை, இங்குள்ள சிற்பங்களில் காணப்பெறும் அலங்காரங்கள் துல்லியமாக வனப்புமிக்கவனவாக

உள்ளது போசாளர்கள் பாணிக்கு உரிய ஒன்றாகக் கருதப்படுகிறது.

---

## வரலாற்றுச் சிறப்புப் படைத்த விசயநகரம்

இந்து சமயத்தைக் காக்கும் பெருநோக்குடன் நிறுவப்பட்ட இந்துக்களின் கடைசி மாபெரும வல்லரசு விசயநகரப்பேரரசு. துவாரச முத்திரத்தில் ஆட்சி செலுத்திய போசாள மன்னர்கள் வீழ்ச்சியுற்றபின், அவர்களிடம் சிற்றரசர்களாக இருந்ததாகக் கருதப் படும் ஹரிஹரன், புக்கள் என்ற இரு சகோதரர்கள் ஏறத்தாழ கி. பி. 1386 இல் துங்கபத்திரை ஆற்றின் அக்கரையில் விசயநகரம் என்ற நகரை உண்டாக்கிப் புதிய பேரரசைத் தோற்றுவித்தனர். இங்கு செங் கோலோச்சிய மூன்று அரச பரம்பரையினர்களில் கி. பி. 1509 முதல் 1529 வரை அரசாண்ட கிருஷ்ண தேவராயர் புகழ் மிக்கவர், சிறப்புமிக்க தென்னிந்திய பேரரசர்களில் ஒருவர்.

கி. பி. 1565இல் தலைக்கோட்டை என்ற இடத்தில் விசய நகரப் பேரரசுக்கும் ஐந்து பாமினி அரசுகளுக்கும் நடந்த பெரும் போரில் விசய நகரம் தோல்வி அடைந்தது. வெற்றி பெற்றவர்கள் போர்க்களத்தில் இரு நாட்கள் ஓய்வு எடுத்துக்கொண்டு, விசயநகரத்தில் நுழைந்தார்கள். ஐந்து மாத காலம் அங்கு தங்கி அதனைக் கொள்ளையடித்து, சொல்லொணாக் கொடுமைகளைப் புரிந்து, தீக்கிரையாக்கினார்கள். மதவெறியின் கோரதாண்டவத்தை ''செவல்'' என்ற ஆங்கிலப் பேராசிரிர் தம் 'ஒரு மறக்கப்பட்ட பேரரசு'

"என்ற நூலில்" முதல் நாள் மக்கள் பல வளங்களுடன் செல்வச் செழிப்பு மிக்க வாழ்க்கை நடத்திவந்தார்கள். அடுத்த நாள் முற்றுகையிடப்பட்டு, கொள்ளையடிக்கப் பட்டு, முற்றிலுமாக அழிக்கப்பட்டனர். அச்சமூட்டும் வகையில் காட்டுமிராண்டித்தனமாகக் கொல்லப் பட்டனர். இவற்றை விவரிக்க வார்த்தைகளே இல்லை. சிறப்பு மிக்க ஒரு நகருக்கு திடீரென்று ஏற்பட்ட இத்தகைய மாபெரும் அழிவு உலக வரலாற்றில் ஒரு காலத்தும் நிகழ்த்தப்படவில்லை எனக் குறிப்பிட்டுள்ளார். ("Never perhaps in the history of the world has such havoc been wrought and wrought so suddenly on so splendid a city, teeming with a wealthy and industrious population in the full plentitude of prosperity one day, and on the next seized, pillaged and reduced to ruins, amid scenes of savage massacre and horrors, beggaring description") மனித நேயத்தை வளர்க்கும் மதத்தின் பெயரால் மதவெறியர்களால் இழைக்கப்பட்ட கொடுமைகளை உணர்த்த இதைவிட வேறு என்ன சான்று வேண்டும்!

பெங்களூரினின்றும் முன்னூற்று நாற்பது கி. மீ. தொலைவில் உள்ள ஹாஸ்பெட்டினின்றும் பதினொன்று கி. மீ. தொலைவில் விசயநகரம் உள்ளது. தற்காலத்தில் அது ஹம்பி என்றும் வழங்கப்படுகிறது. ஹாஸ்பெட்டினின்றும் ஹம்பி சென்றுவரப் பேருந்து வசதி உள்ளது. துங்கபத்திரை நதியின் தென்கரையில் அமைந்துள்ள இந்த நகரம் இருபத்தாறு சதுர மைல் பரப்பினைக் கொண்டது. நாற்புறங்களிலும் ஓங்கி உயர்ந்த மலைகளால் சூழப்பெற்றுள்ளது. எதிரிகளின் நடமாட்டங்களைக் கவனிக்க மலைகளில் உச்சிகளில் காவலர்கள் காவல் புரிந்ததை ஆங்காங்குள்ள சிதில

மான கட்டிடங்களிலிருந்து தெரியவருகிறது. இயற்கை இந்நகருக்கு அளித்து இருந்த பாதுகாப்பை நோக்கும் போது தலைநகரை நிர்மாணிக்க இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்த ஹரிஹரன் மற்றும் புக்கன் என்ற இரு சகோதரர்கள் எத்தகைய யுத்த தந்திர வல்லுநர்கள் (Strategist) என்பதை வியக்காமல் இருக்க முடியாது.

இங்குள்ள முக்கியமான இடங்களைக் காணப் பெரும்பாலும் நடந்து செல்லவேண்டியுள்ளது. பேருந்திலிருந்தும் இறங்கியவுடன் நேரில் தென்படுவது பம்பாதி கோயில். பம்பாதி என்பது ஹம்பி எனமருவி இந்த ஊருக்குப் பெயராக நிலைத்து விட்டது. இது விருபாட்சர் கோயில் என்றும் அழைக்கப்பெறுகிறது. இது விசயநகர மன்னர்களின் குலதெய்வத்தின் கோயிலாம். மேலும் இது இங்குள்ள கோயில்களில் மிகவும் தொன்மையானதும் புனிதமானதாகும். கிருஷ்ண தேவராயர் தன் முடிசூட்டு விழாவின் நினைவாக இந்தக் கோயிலில் அரங்கமண்டபம் ஒன்றைக் கட்டியுள்ளார். இங்கு நாள்தோறும் பூசை நடைபெற்று வருவது குறிப்பிடத்தக்கது.

சூலை பஜாரை (அந்தக் காலத்தில் நாட்டியப் பெண்களின் வீதி)க் கடந்து சென்றால், அச்சுராயர் கோயிலை அடையலாம். விட்டலா கோயிலைப் போன்ற அமைப்பினைக் கொண்டது. திருச்சுற்றின் உட்புறத்தில் உள்ள மண்டபத்தில் அமைக்கப்பட்டுள்ள தூண்களுக்குக் கீழ்ப்பகுதியில் எழில்மிக்க யானைகளின் வரிசை உருவாக்கப்பட்டுள்ளது.

அடுத்துக் காணவேண்டியது கோதண்டராமர் கோயில். இது நதியில் குளிப்பதற்கு மிகவும் புனிதமான இடமாகக் கருதப்படும் கரைக்கு எதிரில் அமைந்துள்ளது. ஒரு பெரிய பாறையில் இராமர் தன் துணைவியான சீதையுடனும் இளவலான இலட்சுமண

னுடனும் புடைச் சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளான். இந்த வடிவங்கள் பெரிய அளவில் கலை அழகுடன் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இங்கு நாள்தோறும் பூசை நடைபெற்று வருகிறது

இன்னும் சற்றுத் தொலைவு சென்றால், உலகப்புகழ் பெற்ற வித்தலா கோயில் உள்ளது. மராட்டிய மாநிலத்தில் மட்டும் திருமால் வித்தலா என்ற பெயரால் வணங்கப்படுகிறான். பண்டரிபுரத்தில் உள்ள வித்தலா கோயில் இதற்கு ஒரு எடுத்துக்காட்டாம். மராட்டிய மாநிலத்திற்கு வெளியில் இந்தப் பெயரில் திருக்கோயில்கள் இல்லை என்னலாம். கிருஷ்ண தேவ ராயரால் இந்தக் கோயில் கட்டத் தொடங்கப்பெற்றது. இது முழுமையாகக் கட்டப்படவில்லை; குடமுழுக்கும் நடைபெறவில்லை. இருப்பினும் இது இங்குள்ள கோயில்களில் அதி உன்னதப் படைப்பாகக் கருதப் படுகிறது.

இங்குள்ள கல்யாண மண்டபம், கோயில் கட்டிட மற்றும் சிற்பக்கலை வளர்ச்சியில் விசய நகரப்பாணி எனக் கருதப்படும் கல்யாண மண்டபங்களுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது, ஒவ்வொரு தூண்களின் தொகுப்பிலும் பல சிறு தூண்கள் உருவாக்கப்பட்டிருப்பது சிற்பக் கலைத்திறனை வெளியிடுகிறது.

இதனை அடுத்து சங்கீத மண்டபம் உள்ளது. பல கோயில்களில் எடுத்துக்காட்டாக, மதுரை மீனாட்சி அம்மன் கோயில், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில், சுசீந்திரம் தாணுமாலயன் கோயில் போன்ற வற்றில் சங்கீத தூண்கள் உள்ளன. இங்கு குறிப்பிட்ட கோயில்களில் இத்தகைய தூண்கள் நான்கு, ஐந்து தான் இருக்கும். ஆனால் இந்த மண்டபத்தில் உள்ள தூண் களின் தொகுப்புகளில் எல்லாம் நாதத்தை வெளிப்படுத்து

வனவாக உள்ளன. குறிப்பிட்ட தூண்களின் தொகுப்பி லிருந்தும் வரும் நாதத்திற்கு ஏற்ப இசைக்கருவியைத் தன் கையில் ஏந்திய ஒருவன் அதன் முகப்பில் காணப் படுகிறான். எடுத்துக்காட்டாக மத்தள ஒலி உண்டாகும் தூண்களின் தொகுப்பின் முகப்பில் மத்தளத்தைத் தன் கைகளில் வைத்துள்ள ஒருவன் அமைக்கப் பட்டுள்ளான். இந்த மண்டபத்திற்குச் செல்லும் படிகட்டுகளின் இருபுறமும் அழகுமிக்க சித்ரவேலைப் பாடுகளைக் கொண்ட அமைப்புகள் உள்ளன. இந்த மண்டபம் ஓர் அரிய அற்புதமான கலைப்படைப்பாகும். மதவெறியர்களின் கொடூரத்தினின்றும் இது தப்பியது இறைவனது திருவருளே!

சங்கீத மண்டபத்திற்கு முன்னால் கல் இரதம் உள்ளது. இது ஒரு கல்லினின்றும் உருவாக்கப் பட்டது என்று சொல்லப்படுகிறது. உண்மையில் இது பல கற்களால் கட்டப்பெற்றது. கிருஷ்ண தேவராயரால் கட்டப்பெற்ற இதன் சக்கரங்களைச் சுழற்றலாம்.

திரும்பி வரும் வழியில், இயற்கையாக அமைந் துள்ளது ஒரு குகை. இது சுக்ரீவன் குகை என்று அழைக்கப்பெறுகிறது. இங்கு சுக்ரீவன் சீதையின் அணிகலன்களைப் பாதுகாத்து வைத்திருந்ததாகச் சொல்லப்படுகிறது.

பம்பாதி கோயிலை அடைந்து அங்கிருந்து கமலா புரம் செல்லும் வழியில் எழிலார்ந்த கடலைக் கல்லுப் பிள்ளையார் கோயில் உள்ளது. இங்குள்ள பிள்ளையார் வடிவங்களில் இது மிகவும் பெரியது. அடுத்துக் காண வேண்டியது இருபத்திரண்டு அடி உயரமுள்ள நரசிம்மர் வடிவம் கிருஷ்ண தேவராயர் காலத்தில் ஒரே கல்லில் இது உருவாக்கப்பட்டது. இந்த வடிவம் உடைக்கப் பட்டிருப்பினும் இது ஒரு அரிய வடிவம் என்பதில் ஐயமில்லை.

ஹஜரா இராமர் கோயிலை அடையும் வழியில் நில மட்டத்திற்குக கீழே கட்டப்பெற்றுள்ள சிவபெரு மானுக்கு உரிய கோயில உள்ளது. கருவறையில் உள்ள இலிங்கத் திருவுருவினைச் சுற்றி நீர் இருக்கவேண்டும் என்ற நோக்கத்தில் இவ்வாறு கட்டப்பட்டது என்று கருதப்படுகிறது.

இதை அடுத்துள்ள ஹஜரா இராமர் கோயில் விசயநகரப் பாணியில் கட்டபெற்ற அதி அற்புதமான படைப்பாகக் கருதப்படுகிறது. இந்தக் கோயிலும் கிருஷ்ண தேவராயரால் கட்டத் தொடங்கப்பற்ற வற்றில் ஒன்றாம் இது விசய நகர அரச குடும்பத்தைச் சார்ந்தோரும் வணங்குவதற்காகக் கட்டப்பெற்றதாம். இங்குள்ள மதிலின் வெளிப்புறச் சுவர்களில் தசராவிழாக் காட்சிகள் உருவாக்கப்பட்டிருப்பது வேறு எந்தக் கோயிலிலும் இல்லாத தனிச்சிறப்பாகும். கருவறைக்கு முன்னால் உள்ள மண்டபத்தில் அமைக்கப்பட்டுள்ள வழ வழப்பான கருங்கற்களாலான தூண்களில் உருவாக்கப் பட்டுள்ள அழகு மிக்க வடிவங்கள் மதவெறியர்களால் பின்னப்படுத்தப்பட்டுள்ளன என்பது வேதனைக்குரிய ஒன்றாம். கடினமான கற்கள்; எனவே பெரு முயற்சி எடுத்து ஒவ்வொரு வடிவத்தின் ஒரு அங்கத்தையாவது அதாவது காது, மூக்கு என்று பின்னப்படுத்தி உள்ளது மதவெறியின் கொடூரத்தை இன்றும் உணர வைக்கிறது.

இங்கு மேலும் காணவேண்டியவை யானைகள் லாயம், லோடஸ் மகால், இராணிகள குளியல்மண்டபம், கறுப்புக்கிணறு, தசரா திப்பா ஆகியவையாம். லோடஸ் மகால் என்பது இந்து முகமதியப் பாணியில் கட்டப்பெற்றது. தசராவிழா வினை இராணிகள் கண்டு களிக்கக் கட்டப்பெற்றது. கறுப்புக் கிணற்றில் (Black well) படிக்கட்டுகளின் அமைப்பு கண்ணைக் கவரும் எழிலை உடையதாம். தசரா திப்பா என்ற சிம்மாசன மேடை ஒரிசாவில் பெற்ற வெற்றிக்குப்

பின் கி. பி. 1513 இல் கிருஷ்ண தேவராயரால் கட்டப் பெற்றதாம். ஹஜரா இராமர் கோயிலின் மதிலின் புறச் சுவர்களைப் போன்று இங்கும் புறச்சுவர்களில் தசராவிழாக் காட்சிகள் காணப்படுகின்றன. யானைகள், குதிரைகள், வீரர்கள், நாட்டியப்பெண்கள் ஆகியோர்கள் பல வரிசைகளாகக் காணப்படுகின்றனர். இத்தகைய விழாக் காட்சிகள் உருவாக்கப்பட்டிருப்பதில், இதுதான் அதியுன்னத படைப்பாகக் கருதப்படு கிறது. இங்குள்ள மேடைமீது அமர்ந்துதான் மன்னர்கள் தசரா விழா நிகழ்ச்சிகளைக் கண்டு களிப்பார்கள்.

ஐந்துமாதம் மதவெறியர்களால் கொடுமைகள் பல இழைக்கப்பட்டும், இவை நடைபெற்று நானூறு ஆண்டு களுக்கு மேலாகியும், இன்னும் இங்குள்ள கலைச் செல்வங்கள் காண்போரை மெய் சிலிர்க்க வைக்கிற தென்றால், இதன் பெருமைகளைச் சொல்லவும் வேண்டுமோ!



# தேவாரமும் சிற்பக்கலையும்

சைவ சமயத்தில் மறுமலர்ச்சி ஏற்படுத்தி அது தழைத்து ஓங்க அலலும் பகலும் அயராது உழைத்த சைவ சமய பரமாசாரியர்களில் சம்பந்தரும் அப்பரும் ஏழாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் வாழ்ந்தவர்கள். சுந்தரர் ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவராகக் கருதப்படுகிறார். இவர்கள் பல்வேறு தலங்களில எழுந்தருளியுள்ள இறைவன்மீது பாமாலை களைச் சூட்டி மக்களிடையே பக்தி நெறியை வளர்த்தார்கள்.

"நற்றமிழ்வல்ல ஞானசம்பந்தன நாவுக்கரையன்"
(திருப்புன்கூர்-4)

"நல்லிசை ஞானசம்பந்தனும் நாவுக்கரசரும்
பாடிய நற்றமிழ் மாலை" (திருவலிவலம்-5)

"நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞான சம்பந்தன்"
(திருக்கோலக்கா 8)

எனச் சுந்தரர் குறிப்பிட்டாற் போன்று, தேவாரப் பாடல்கள் பக்தி மணத்தைப் பரப்பியதோடு, இசைக் கலையை ஓங்கச் செய்தன; தமிழைத் தழைக்கச் செய்தன. இதுமட்டுமன்றி இவை சிற்பக் கலை சிறப்புற்று ஓங்கவும் உறுதுணையாக நின்றன. உதாரணத்திற்கு இரணடு வடிவஙகள் எடுத்துக்கொள்ளப் படுகின்றன.

சிவபெருமானைச் சாமகானப் பிரியன் என்பர். மேலும் அவன் வீணை வாசிப்பதில் மிகவும் விருப்பம் உடையவன என்பதை "மிக நல்ல வீணை தடவி" எனச் சம்பந்தரும், "மழலை வீணையர்" என அப்பரும் கூறுவதினின்றும் தெரியலாம். அவனது பல வடிவங்

களில் ஆலமர் செல்வன் வடிவம் ஒன்றைத்தான் வீணை யுடன் அமைப்பது மரபு. பிச்சை உகக்கும் பெம்மானுக்கு வீணையை அமைப்பதில்லை. அப்பர் தமது திருவலம் புரம் திருத்தாண்டகத்தில்,

"முறித்தொரு தோலுடுத்து முண்டஞ்சாத்தி
முனிகணங்கள் புடைசூழ முற்றந்தோறுந்
தெறித்ததொரு வீணையராய்ச் செல்வார்" (6)

என அருளியுள்ளார். இந்தப் பாடலின் அடிப்படையில் செப்புச் சிலை ஒன்று பிற்காலச் சோழர்கள் காலத்தில் உருவாக்கப்பட்டு, இன்றும் திருவலம்புரத்தில் உள்ளது. தற்காலத்தில் மேலப் பெரும் பள்ளம் என்ற அந்த ஊர் பூம்புகாரை அடுத்துள்ளது. பிச்சை உகக்கும் பெம்மானின் வடிவமான இதன் இருகைகளும் அப்பர் பெருமானின் திருவாக்குப்படி வீணையை ஏந்தும் நிலையில் உள்ளன. இந்த வடிவம் ஆகமவிதிகளின்படி ஆடையின்றி இருக்க வேண்டும். ஆனால் இங்கு அருளாளரின் திருவாக்கிற்கு ஏற்ப ஆடையுடன் உருவாக்கப்பட்டுள்ளது. இத்தகைய அரிய மட்டுமன்றிக் கலை வண்மையுடன் உருவாக்கப் பெற்ற திருவுருவம் தமிழகத்தில் வேறு எங்கும் இல்லை.

தமிழகத்திற்கு மட்டும் உரிய சிற்ப வடிவங்களில் சண்டிக்கு அருள் பாலிக்கும் பெம்மான் வடிவம் ஒன்று. தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த சேய்ஞலூர் என்ற ஊரில் தோன்றிய விசார சருமனார் தன் சிவபூசைக்கு இடையூறு விளைவித்த தன் தந்தையைத் தந்தை எனக் கருதாது அவரது இரு கால்களையும் துணித்தார். அவ்வமயம் சிவபெருமான் தோன்றி அவரது இறை யன்பைப் பாராட்டி, அவருக்குச் சண்டேசப் பதவியை அளித்தது மட்டுமன்றி, தன் முடியில் அலைந்து இருந்த கொன்றை மாலையை அவரது தலையில் சூட்டினான்.

சிவபெருமான் அருள் செய்தமையைச் சம்பந்தர்,

"பீரடைந்த பாலது ஆட்டப் பேணாதவன் தாதை
வேரடைந்து பாய்ந்தானை வேர் தடிந்தான் தனக்குத்
தாரடைந்த மாலை சூட்டித் தலைமை வகுத்தது என்னே"
(திருச் சேய்ஞலூர்-7)

என்றும், அப்பர்

"தாதைதாளை
கூர்மழுவு ஒன்றால் ஓச்சக்குளிர்
சடைக் கொன்றை மாலைத்
தாம நற்சண்டிக் கீந்தார்" (திருச்சாய்காடு-6)

என்றும், சுந்தரர்

"தாதைதாள் அற எறிந்த சண்டிக்குஉன்
சடைமிசை மலர் அருள் செயக்கண்டு"
(திருப்புன்கூர்-3)

என்றும் போற்றியுள்ளனர்.

திருவருட் செல்வர்களின் பாடல்களில் சிற்பிகள் திளைத்துத் தம்மை மறந்து சண்டிக்கு அருள்பாலிக்கும் அம்மானின் எழிலார்ந்த படைப்புகளைப் படைத்துள்ளனர். 9, 11 ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த இத்தகைய வடிவங்களைத் திருநெல்வேலி மாவட்டம் திருவாலீச்சரம், திருச்சி மாவட்டம் கங்கை கொண்ட சோழீச்சரம் ஆகிய கோயில்களில் காணலாம். இவற்றில் சிவபெருமான் அன்னையுடன் காணப்படுகின்றான். இவர்களது காலடியில் சண்டிகேசுவரர் தன் இருகைகளையும் கூப்பியபடி உட்கார்ந்துள்ளார். சிவபெருமான் சண்டிகேசுவரரின் தலையில் மாலையை அணிவிக்கிறான். சண்டேசப்பதவியை அளித்தமைக்குச் சான்றாகச் சிவபெருமான் சண்டிகேசுவரரின் தலையில் மாலையை அணிவித்தமையைத் தேவாரப் பாடல்களில் சிறப்பாகக்

குறிப்பிடப்பட்டுள்ளது. அதற்கு ஏற்ப மேலே குறிப்பிட்ட சிற்பங்கள் அமைந்துள்ளமை உய்த்து உணரத்தக்கது.

இவ்வாறாகத் தேவாரப் பாடல்கள் சிற்பக்கலை வளர்ச்சியை ஊக்குவித்தன.



# தமிழகத்தில் முருகன் திருவுருவம்

இறைவனது குறிப்பிட்ட வடிவங்களில் காலம் செல்லச் செல்ல மாறுதல் ஏற்பட்டுள்ளன என்பர் ஆராய்ச்சியாளர்கள். எடுத்துக்காட்டாக ஏழு மற்றும் எட்டாம் நூற்றாண்டுகளைச் சார்ந்த தொன்மையான கங்கைவார் சடைக் கரந்தான் வடிவங்களில் (திருச்சி, திருக்கோகர்ணம் குடைவரைக் கோயில்கள்) கங்கை யுடன் கூடிய சிவபெருமான் வடிவம் மட்டும் காணப்படு கிறது. அன்னை அமைக்கப்படவில்லை. பிற் காலத்தைச் சார்ந்த வடிவங்களில் (தாரமங்கலம் கைலாயநாதர் கோயில்) சிவபெருமானுடன் பராசக்தியும் உருவாக்கப்பட்டுள்ளாள். இதே போன்று குறிப்பிட்ட வடிவங்கள் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபட்டுக் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக ஆடவல்லான் வடிவம் வடநாட்டில் எட்டுக் கைகளுடன் அமைக்கப் பட்டால், தமிழகத்தில் அவனுக்கு நான்கு கைகள் தாம் பொதுவாகக் காணப்படுகின்றன. அங்கு அவனைச் சுற்றிலும் திருவாசியும் இல்லை; காலடியில் முயலகனும் இல்லை. ஆனால் இங்கு அவனைச் சுற்றிலும் திருவாசி யையும், காலடியில் முயலகனையும் உருவாக்கும் மரபு பின்பற்றப்பட்டு வருகிறது. வங்கத்தில் அவன் வீணை

யுடன் அல்லது தன் ஊர்தியான காளைமீது நடனம் புரியும் நிலையில் காணப்படுகிறான்.

தமிழ்க்கடவுள் என்று போற்றப்படும் முருகனுக்கு இருபத்திரண்டு வடிவங்கள் ஆகமங்களில் விதிக்கப் பட்டுள்ளன. குறிப்பிட்ட பகுதியில் அவனது குறிப்பிட்ட வடிவம் சிறப்பாக வணங்கப்படுகிறது. இதனால் குறிப்பிட்ட பகுதியில் குறிப்பிட்ட வடிவைத் தவிர வேறு வடிவங்கள் இல்லை என்றோ, அல்லது குறிப்பிட்ட வடிவம் குறிப்பிட்ட பகுதியைத் தவிர வேறு பகுதிகளில் இல்லை என்றோ பொருள் அல்ல. குறிப்பிட்ட வடிவைப் பெரும் அளவில் தொழப்படுவதின் அடிப்படையில், தமிழகத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை :- 1) வடஆற்காடு அம்பேத்கார், செங்கல்பட்டு அண்ணா மாவட்டங்கள் (தொண்டை நாடு, நடு நாடு); 2) தஞ்சை மாவட்டம் (சோழ நாடு); 3) கோவை, பெரியார், திண்டுக்கல் காயிதே மில்லத் மாவட்டங்கள் (கொங்கு நாடு).

**பிரமசாத்தா வடிவம் :**

வடஆற்காடு அம்பேத்கார், செங்கல்பட்டு அண்ணா மாவட்டங்களில் முருகனது பிரமசாத்தா வடிவம் சிறப்பாகக் காணப்படுகிறது. பிரணவப் பொருளை அறியாப் பிரமனைத் தண்டித்து, படைப்புத் தொழிலை முருகன் தானே மேற்கொண்ட வடிவம் இது.

> "ஒரு கரந்தனில் கண்டிகைவடம் பரித்து ஒருதன்
> கரதலந்தனில் குண்டிகை தரித்து இரு கரங்கள்
> வரதமொடு அபயந் தரப்பரம் பொருள் மகனோர்
> திருமுகங்கொடு சதுர் முகன்போல் விதி செய்தான்"
> (1-16-17)

என்பது கந்தபுராணம். ஒருமுகம் நான்கு கைகள் கொண்ட இந்த வடிவின் ஒரு கையில் கண்டிகை வடமும்

(அக்க மாலையும்), மற்றொரு கையில் குண்டிகையும் (கமண்டலமும்), ஏனைய இரு கைகள் அபய, வரத முத்திரைகளில் இருந்தன.

இந்த வடிவில்தான் எத்தனை, எத்தனை வேறுபாடுகள்! காஞ்சிபுரம் குமர கோட்டத்தில் துணைவியர் இன்றி இருக்கும் இந்த வடிவம், திருப்போரூர், வல்லக்கோட்டை ஆகிய தலங்களில் இரு துணைவியருடன் காணப்படுகிறது. பொன்னேரியை அடுத்துள்ள பெரும்பேடு என்ற ஊரில் வள்ளி, தெய்வயானை இருவரும் இடம் மாறியுள்ளனர். திருப்போரூரில் சிங்க ஊர்தியுடன் அமைக்கப்பட்டுள்ள இவன் வடஆற்காடு அம்பேத்கார் மாவட்டம் மேல்பாடி அரிஞ்சயேசுவரத்தில் யானை ஊர்தியுடன் காணப்படுகறான். செங்கல்பட்டை அடுத்துள்ள ஆனூரில் இவனது முன் வலக்கையில் மலர் உருவாக்கப்பட்டுள்ளது. குறுமுனியாம் அகத்தியன் வழிபடத் தமிழ் ஆசானாக அருள் வழங்கும் இவனது வடிவம் திருப்போரூரில் தூண் ஒன்றில் அமைக்கப்பட்டுள்ளது.

### வில்லேந்திய வேலவன் :-

வில் என்றாலே கோதண்டம் ஏந்திய இராமன்தான் நினைவிற்கு வருவான். முருகனுக்குச் சிறப்பான படைக்கலம் வேல் என்றாலும், வில்லும் அவனது படைக்கலங்களில் ஒன்றாக ஆகமங்களில் கூறப்பட்டுள்ளது. பன்னிரண்டு கைகள் கொண்ட சேனாபதி, சரவணன், சண்முகன் ஆகிய வடிவங்களுக்கும், எட்டுக் கைகள் உடைய இரவுஞ்சபேதனன் என்ற வடிவிற்கும் வில் படைக்கலமாக ஆகமத்தில் கூறப்பட்டுள்ளது. நான்கு கைகளை உடைய முருகனது ஏழு வடிவங்களில் ஒரு வடிவிற்கு வில் படைக்கலமாக விதிக்கப்படவில்லை.

வில்லுடன் அல்லது வில்லை ஏந்தும் நிலையில் நான்கு கைகளைக் கொண்ட முருகனது பலவடிவங்கள் தஞ்சை மாவட்டத்தில் உள்ளன. அவற்றில் காணப்படும் வேறுபாடுகள் பல. தன் ஊர்தியான மயில் இன்றி இவன் திருவிடைக்கழியில் இருக்க, சாயாவனத்தில் மயில் இவனுக்கு அருகிலும், திருவையாற்றில் இவனுக்குப் பின்னாலும் அமைக்கப்பட்டுள்ளது. பட்டீசுவரத்தில் இவனது இடது கால் மயில் மீது உள்ளது. சென்னையை அடுத்துள்ள வடவேதாரண்யம் (திருவேற்காடு) என்ற தலத்தில் இவனது வலது கால் மயில் மீது காணப்படுகிறது. திருவண்ணாமலையில் வில்லை ஏந்தியுள்ள இவனுக்கு ஆறு கைகள் உருவாக்கப்பட்டுள்ளன.

**தண்டாயுதபாணி :**

கொங்கு நாட்டில் பரவலாகக் காணப்படும் முருகனது சிறப்பான வடிவம் தண்டபாணியாம். சென்னிமலைத் தல புராணத்தில் இந்தத் திருவுருவின் பொலிவினை,

'குஞ்சித நிலைத்த சீரடி யிரண்டுங்
 கோவண ஆடையும் மேகலையுங்
விஞ்சு நூன் மார்பும் வேத்திரம் உக்கம்
 விளங்கு கைத்தலங்களும் குழைதாழ்
செஞ்செவித் துளையும் துணைமலர்க் கண்ணும்
 திகழ் தனி வதனமும் பின்றாழ்
எஞ்சலில் சிகையும்''

எனச் சொல்லோவியமாகத் தீட்டப்பெற்றுள்ளது. அறுமாமுகனின் அறுபடை வீடுகளில் மூன்றாவது படை வீடான திருவாவினன்குடியை அடுத்த, தமிழகத்தில் முருகனது புகழ் மிக்க தலமான, பழனியில் மூலவராக உள்ள வடிவம் தண்டபாணியே. முருகனது ஏழாவது படைவீடாக இன்று ஏற்றம் பெற்றிருக்கும் மருத

மலையிலும் இந்த வடிவமே மூலவராக உள்ளது. கிணத்துக்கடவு, குருந்தமலை, சென்னிமலை, உதயகிரி, ஊதியூர் என்று பல தலங்களிலும் தண்டாயுதபாணி வடிவில்தான் முருகன் எழுந்தருளியுள்ளான்.

ஏனைய பகுதிகளில் உள்ள முருகனது கோயில் களுக்கு இல்லாத தனிச் சிறப்பு கொங்கு நாட்டில் உள்ள சில முருகனது கோயில்களுக்கு உண்டு. அது அவற்றிற்குச் சித்தர்களுடன் உள்ள தொடர்புதான். பழனியில் உள்ள மூலவர் போகர் என்ற சித்தரால் நவபாஷாணங் களால் உருவாக்கப்பட்டவனாகப் போற்றப்படுகிறான். மேலும் திருக்கோயிலில் அவரது சமாதியும் உள்ளது. மருதமலையில் பாம்பாட்டி சித்தர், சென்னி மலையில் புண்ணாக்கு சித்தர் ஆகியோரின் சமாதிகளும், ஊதி யூரில் கொங்கணரின் திருமுன்னும் உள்ளன.

முற்றுந்துறந்த சித்தர்களான இவர்களால் தாபிக்கப்பட்ட அல்லது வணங்கப்பட்ட காரணத்தால் தான் இந்த வடிவங்களும் துறவிக்கோலத்தில் உருவாக்கப்பட்டனவோ என்று எண்ணத் தோன்றுகிறது. துறவிக்கோலத்தில் இவன் அமைக்கப்பட்டுள்ளதால், இரு துணைவியர்கள் இன்றிப் பழனி, மருதமலை, கிணத்துக்கடவு, குருந்தமலை, உதயகிரி போன்ற தலங் களில் காணப்படுகிறான். சென்னிமலையில் வள்ளி, தெய்வயானை ஆகிய இருவரும் மூலவருடன் அல்லாது தனியாக அமைக்கப்பட்டுள்ளனர். ஊதியூரிலும் அன்னை தனியாகக் காணப்படுகிறாள்.

இவ்வாறாகத் தமிழகத்தில் முருகன் குறிப்பிட்ட வடிவில் குறிப்பிட்ட பகுதியில் சிறப்பாக வணங்கப்பட்டு வருகிறான்.



# தமிழகத்தில் ஐயப்பன் வழிபாடு

அண்மைக் காலத்தில் தமிழகத்திலிருந்து கேரளா விலுள்ள சபரிமலைக்குச் செல்லும் அன்பர்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் அதிகரித்து வருவது யாவரும் அறிந்த ஒன்று. இதனால் ஐயப்பன் வழிபாடு தமிழகத்தில் புதியதாகத் தோன்றியது என்று ஒரு கருத்து தெரிவிக்கப்படுகிறது. இது முற்றிலும் சரியன்று.

சுமார் 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கிய மான இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்தில் ஐயப்பன் வழிபாட்டிற்கான சான்றுகள் உள்ளன. ஐயப்பன் அக்காலத்தில் சாத்தான் என்று அழைக்கப்பட்டான், சாத்தான், சாஸ்தா என்ற இரண்டும் ஒன்றுதான். தற்காலத்தில் இவன் கிராமங்களில் ஐயனார் என்று கிராம தேவதைகளில் ஒருவனாக வணங்கப்படுகிறான். இவன் காவல் தெய்வமாகக் கருதப்பட்டான். இவன் ஊரைக் காவல் செய்வதை உணர்த்த ஊருக்கு வெளியில் இவனது கோயில் அமைக்கப்பட்டது. இவ்வாறு இவன் புறப் பகுதியில் அதாவது வெளியே கோயில் கொண்டுள்ளதால், இவனுக்குப் புறம் பணையான் என்ற பெயர் ஏற்படலாயிற்று. சிலப்பதி காரத்தில் ''கனாத்திறமுரைத்த காதை''யில் இவனது கோயில் ''புறம்பணையான் வாழ்கோட்டம்'' என்று குறிப்பிடப்படுகிறது. அதாவது நகர்ப்புறப் பகுதி யிடத்தே வாழும் இயல்புடைய மகாசாத்தன் கோயில் என்ற பொருளாகும். மேலும் அவனைப் ''பாசண்ட சாத்தன்'' என்று சிலப்பதிகாரம் அழைக்கிறது. பாசண்டம் என்றால் தொண்ணூற்றாறு வகைச் சமய சமய சாத்திரத் தருக்கக்கோவை என்படுகிறது.

சாத்திரங்களைப் பயின்ற காரணத்தால் இவன் மகா சாத்திரன் என்ற பெயரைப் பெற்றான் என்பர் அடியார்க்கு நல்லார் என்ற உரை ஆசிரியர். சாத்திரன் என்பதே சாத்தன் என நாளடைவில் மருவி வழங்க லாயிற்று எனக் கொள்ளலாம். மேலே குறிப்பிட்ட சிலப்பதிகாரத் கதையில் சாத்தன் ஒரு அந்தணப் பெண்ணிற்காகக் குழந்தை உருக்கொண்டதும், இளைஞனான பின் தாயாதியுடன் நடந்த வழக்கில் வென்றதும், பெற்றோர்களுக்கு இறுதிக்கடன் செய்ததும், தேவந்தி என்பாளை மணந்து இல்லறம் நடத்தி அதன்பின் அவளுக்குத் தான் யார் என வெளிப் படுத்தி மறைந்ததும் ஆகிய வரலாறுகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான மணி மேகலையை இயற்றியவர் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்பது யாவரும் அறிந்ததே. புறநானூற்றில் (பாடல் 395) சோழநாட்டு பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனைப் பற்றிய பாடல் ஒன்று உள்ளது; சாத்தன் என்ற பெயரில் பல நல்லிசைப் புலவர்களது பாடல்கள் சங்கால இலக்கியங் களில் இடம் பெற்றுள்ளன. பாண்டிய நாட்டைச் சார்ந்த மோசிசாத்தனார் (பாடல் 272), சோழ நாட்டைச் சேர்ந்த உறையூர் முதுகண்ணன் சாத்தனார் (பாடல் 325) ஆகியோரது பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன. நற்றிணை என்ற நூலில் பேரி சாத்தனார்(பாடல் 25), பிரான்சாத்தனார் (பாடல்68), பெருந்தலைச் சாத்தனார் (பாடல் 262) என்போரின் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றினின்றும் சாத்தனார் என்ற பெயர் மக்களிடையே பெருவழக்கில் இருந்து வந்தது என்பதும், சாத்தனார் என்ற ஐயனார் வழிபாடு தமிழகத்தில் பரவலாக இருந்து வந்தது என்பதும் பெறப்படுகின்றன.

கந்தபுராணத்தில் அசுரகாண்டத்தில் மகா சாத்தப் படலத்தில் அரிகரபுத்திரனாகிய ஐயனார் பிறப்பு விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அவனது தோற்றத்தை

"மைக்கருங் கடல் மேனியும் வானுலாஞ்
செக்கர் வேணியுஞ் செண்டுறு கையுமாய்
உக்கிரத் துடன் ஓர் மகன் சேர்த்தலும் (2-32-49)

என்பர் கச்சியப்ப சிவாசாரியார். கரியமேனியும், சிவந்த சடையும், கையில் செண்டும் உடையவனாய்க் கோபத்துடன் சாத்தா தோன்றினான் என்பதாகும். தன் மனைவி இந்திராணியை அரக்கர்களிடமிருந்து காக்கவேண்டி இந்திரன் சாத்தானை ஒரு மனதாக எண்ணி வழிபட்டான். அவ்வமயம் சாத்தா தோன்றியதை,

"காருறழ் வெய்ய களிற் றிடையாகிப்
பாரிடர் எண்ணிலர் பாங்குற நண்ணப்
பூரண புட்கலை பூம்புறமேவ
வாரணம் ஊர்பவன் முன்னுற வந்தான் (2-32-59)

என்கிறது கந்தபுராணம். பூதகணங்கள் புடைசூழ யானைமீது பூரணை புட்கலை என்ற தன் இரு துணைவியருடன் சாத்தா இந்திரன் முன் தோன்றினான் என்பதாம். அவனது சிறப்பை,

"எங்கு மாகி இருந்துஎவ் வுலகையுங்
கங்குலும் பகல் எல்லையுங் காப்பனால் (2-35-54)

"மண்ண கத்தரும் வானவ ரும்மலர்
அண்ண லுந்தினம் அர்ச்சிக்கும் நீர்மையான்
கண்ண னும்புகழப்படு காட்சியான்
எண்ணின் அவனுக்கு எதிர் இல்லையே (2-32-55)

என இந்திரன் வியந்து கூறுகிறான். அதாவது அவன் இரவும் பகலும் எல்லா உலகங்களையும் காக்கிறான்;

மானிடர்களும், தேவரர்களும், பிரமனும் வணங்கும் தன்மையுடையவன். திருமாலாலும் புகழப்படத் தக்கவன். அவனுக்கு இணை யாரும் இல்லை என்பதாம். இதுவும் அவன் காவல் தெய்வம் என்பதை உறுதிப்படுத்துகிறது.

இவனுக்குத் தனியாகப் பெரிய அளவிலான கோயில் சோழப் பேரரசன் முதலாம் இராசேந்திரன் காலத்தில் கி. பி. 1014க்கும் 1018 க்கும் இடைப்பட்ட காலத்தில் திருச்சி மாவட்டத்தில் திருப்பிடவூர் என்ற ஊரில் கட்டப்பட்டது. திருச்சியினின்றும் சென்னை செல்லும் பெருவழியில் சிறுகனூர் என்ற ஊரினின்றும் பிரிந்து செல்லும் வழியில் இந்த ஊர் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இது தற்காலத்தில் திருப்பட்டூர் என்று அழைக்கப்பட்டு வருகிறது.

அப்பர் அடிகளது "க்ஷேத்திரக் கோவைத் திருத் தாண்டகத்தில்",

> "காம்பீலி பிடவூர் பேணுங்
> கூரார் குறுக்கை வீரட்டானமும்"

என்று அருளப்பட்டுள்ளதால் இது வைப்புத்தலமாகிறது. இதுவன்றி மேலே குறிப்பிடப்பட்ட புறநானூற்றுப் பாடல் (395) பிடவூரில் வாழ்ந்த வேளாண் மக்களின் குடி முதல்வனான பிடவூர் கிழானைப் பற்றியதாகும். அதில் இந்த ஊரைப் பற்றி,

> "செல்லா நல்லிசை உறைந்தைக் குணாது
> நெடுங்கை வேண்மாண் அருங்கடிப்பிடவூர்"

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது நல்ல புகழை உடைய உறையூருக்குக் கிழக்கே, நீண்ட கையையுடைய வேண்மாவுக்கு உரிய அரிய காவலை உடைய பிடவூர்

எனபதாம். இதனின்றும் இதன் தொன்மையைத் தெரியலாம்.

இங்குள்ள ஐயனார் கோயில் திருச்சுற்று, முக மண்டபம், உள் சுற்று, மகாமண்டபம், கருவறை ஆகியவற்றைக் கொண்டது. கோயிலின் வாயிலை மூன்று அடுக்குக் கோபுரம் அணி செய்கிறது. திருச்சுற்றில் கருவறைக்கு முன்னால் அவனது ஊர்தியான யானை காணப்படுகிறது. கருவறைக்குச் செல்லும் வழி பொதுவாக உள்ளது போன்று கருவறைக்கு நேராக இல்லாது திருவதிகை வீரட்டானம், தஞ்சைப் பெரிய கோயில ஆகியவற்றில் இருப்பது போன்று பக்கவாட்டில உள்ளது. முதலாம் இராசேந்திரனின் கல்வெட்டுகள் மட்டுமன்றிப் பிற்காலச் சோழர்கள், போசாள மன்னர்கள், இரண்டாம் பாண்டியப் பேரரசைச் சார்ந்த மன்னர்கள் ஆகியோரின கல்வெட்டுகள் காணப்படு கின்றன. கோபுரத்தில் உள்ள கல்வெட்டினின்றும் தேறி ஆதித்தன் என்ற பிச்சன கோபுரத்தைக் கட்டிய தாகத் தெரிகிறது. கருவறையில் பிற்காலத்தைச் சேர்ந்த ஐயனாரும் அவனது இரு துணைவியரும் காணப்படுகின்றனர். கரணாகமத்தின் இருகைகளுடன் அமைக்கப்பட்டுள்ள இவன் உத்குடி இருக்கையில் அமர்ந்துள்ளான். இவனது பெயர் "திருமண்டபம் உடைய நாயனார்" என்று கல்வெட்டில் குறிக்கப் பட்டுளளது. மண்டபத்தால் இவன் பெயர் பெற்றது குறிப்பிடத் தக்கது.

இங்குள்ள ஐயனாரைப் பற்றிச் சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தில் குறிப்பிட்டுள்ளார். சேரமான் பெருமான் நாயனார் கைலையில இறைவன் முன்பு அரங்கேற்றிய "திருக் கைலாய ஞான உலா" வினைக் கேட்ட சாத்தனார் திருப்பிடவூரில் யாவரும் கேட்ப உரைத்ததாகக் கூறியுள்ளார. அந்தப் பாடல் வருமாறு :

"சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்த
அத்திருவுலாப் புறம் அன்று
சாரல் வெள்ளியில் கயிலையிற் கேட்ட
மா சாத்தனார் தரித்திந்தப்
பாரில் வேதியர் திருப்பிடவூர் தனில்
வெளிப்படப் பகர்ந்து எங்கும்
நாரவேலை சூழ் உலகினில் விளங்கிட
நாட்டினர் நலத்தாலே"

(வெள்ளானைச் சருக்கம் 52)

எனவே சேக்கிழார் பெருமான் காலத்தும் இந்தக் கோயில் புகழ்மிக்கதாக இருந்திருக்க வேண்டும். இன்று இந்தக் கோயில் எங்கும் மரஞ்செடிகள் முளைத்து, கால்நடைகளுக்கு இருப்பிடமாகி, பூசனை ஏதும் இன்றி இருப்பது காலக்கொடுமையன்றி வேறு என்ன!

பல சமூகங்களைச் சார்ந்த பல பிரிவினருக்கும் ஐயனார் இன்றும் குலதெய்வமாகப் போற்றி வணங்கப் பட்டு வருகிறான். கிராமங்களில் இவன் கோயில்கள் பரவலாக ஊருக்கு வெளியில் இருப்பது யாவரும் அறிந்ததே.

இவற்றினின்றும் ஐயப்பன் என்ற ஐயனார் வழிபாடு தமிழகத்தில் தொன்று தொட்டு இருந்து வருகிறது என்பது தெளிவாகிறது.

# தமிழகக் கோயில்கள்

**கோயில்களின் தன்மை:**

தமிழகத்தில் கோயில் வழிபாட்டுமுறை பண்டைக் காலந்தொட்டு இருந்து வந்துள்ளது. இதற்கான சான்றுகள் இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் பரக்கக் காணலாம். எடுத்துக்காட்டாக, புறநானூற்றில் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெரு வழுதியைக் காரிக்கிழார் வாழ்த்தும்போது

> "பணியியரத்தை நின்குடையே முனிவர்
> முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" (6 வரி 17-18)

எனக் குறிப்பிட்டுள்ளார். முனிவர்களால் வணங்கப் பெறும் மூன்று கண்களையுடைய சிவபெருமானது கோயிலை வலம் வருவதற்கு நின் கொற்றக்குடை தாழ்க என்பதாம். பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை மதுரை மருதனின நாகனார் பாடிய பாடலினின்றும் திருச்செந்தூரில் முருகனது திருக்கோயில் இருந்தமை தெரிய வருகிறது.

> "தாழ்நீர்
> வெண்டலைப் புணரிய லைக்குஞ் செந்தில்
> நெடு வேணிலைஇய காமர் வியன்றுறை'
> (55-வரி 17-19)

என்பது அந்தப் பாடல். தாழ்ந்த நீரை உடைய கடலின் கண் திரை அலைக்குஞ் திருச்செந்தூரில் நெடிய முருக வேள் நிலை பெற்ற அழகிய துறை என்பதாம். பத்துப் பாட்டில் ஒன்றான "குறிஞ்சிப்பாட்டில்" கபிலர் "பிறங்கு மலை மீமிசைக் கடவுள் வாழ்த்தி" எனக் குறிப்பிட்டுள்ளார். அதாவது மலையின் உச்சியில்

உறையுங் கடவுளை அதாவது முருகனை வாழ்த்தி என்பதாம்.

ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரத்தில், இறைவனின் பல்வேறு வடிவங்களுக்குக் கோயில்கள் இருந்தமைக்குச் சான்றுகள் பல உள்ளன. எடுத்துக்காட்டாக "கனாத்திறமுரைத்த காதை"யில்

"அமரர்தருக் கோட்டம் வெள்யானைக் கோட்டம்
புகர்வெள்ளை நாகர்தங் கோட்டம் பகல்வாயில்
உச்சிக்கிழான் கோட்டம் ஊர்க்கோட்டம் வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம் புறம்பணையான் வாழ்கோட்டம்
நிகழ்ந்தக் கோட்டம் நிலாக் கோட்டம்" (வரி 9-13)

என்பதாகக் கூறப்பட்டுள்ளது. இதனின்றும் கற்பகத்தரு, இந்திரனின் ஊர்தியான ஐராவதம், அவனது படைக்கலமான வச்சிரம், பலராமன், சூரியன், சம்பாதி, முருகன், மாசாத்தன், அருகன், சந்திரன் ஆகியோருக்குக் கோயில்கள் இருந்தமை தெரிய வருகிறது. பூம்புகாரிலும் மதுரையிலும் சிவபெருமான், முருகன், பலராமன், திருமால் ஆகியோருக்குக் கோயில்கள் இருந்தமையை "இந்திர விழவூரெடுத்த காதை", மற்றும் "ஊர்காண் காதை" ஆகியவை தெரிவிக்கின்றன.

இன்றைய கோயில்களின் வளர்ச்சியில் முதற்கட்டமாகக் கருதப்படும் குடைவரைக் கோயிலைத் தோற்றுவித்த பல்லவப் பேரரசன் முதலாம் மகேந்திரவர்மன் தான் உருவாக்கிய தென்னாற்காடு மாவட்டத்தைச் சார்ந்த மண்டகப்பட்டில் உள்ள முதற் குடைவரைக் கோயிலில் "மரம், செங்கல் ஆகியவையின்றி மும்மூர்த்திகளுக்கு ஆலயம் கட்டியதாக"ப் பெருமிதம் கொள்கிறான்; இந்தக் கல்வெட்டினின்றும் பண்டை நாட்களில் மரம், செங்கல் ஆகியவற்றால் கோயில்கள் கட்டப்பெற்றமை தெரியலாம். இதைக் "குன்றுகண்டன்ன

கடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டம்'' என்று மணிமேகலை என்ற நூல் உறுதி செய்கிறது.

மகேந்திரவர்மனது சமகாலத்தவர்களான ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்த சைவ சமய பரமாசாரியார்களான ஞானவேந்தர் எனப் போற்றப்படும் சம்பந்தப் பெருமானும், தாண்டக வேந்தர் எனப் பரவப்பெறும் அப்பர் பெருமானும் ஆங்காங்கு உள்ள தலங்களில் எழுந்தருளியுள்ள இறைவன்மீது பக்திச் சுவை நனி சொட்டும் திருப்பாடல்களை அருளியுள்ளார்கள். இருநூற்றுப் பத்தொன்பது கோயில் சம்பந்தராலும், நூற்று இருபத்தைந்து கோயில்கள் அப்பராலும் பாடப் பெற்றுள்ளன. இவர்கள் இருவரும் பாடிய மொத்தக் கோயில்கள் இருநூற்று நாற்பத்தொன்பது. இவை யன்றிப் பிறதலங்கள் பற்றிய திருப்பாடல்களில் இடம் பெற்றுள்ள தலங்கள் அதாவது வைப்புத் தலங்கள் வேறு. எனவே தமிழகத்தில் கோயில்கள் பரவலாகப் பெரும் அளவில் தொன்று தொட்டு இருந்து வந்தமை நன்கு தெரிகிறது. மேலும் ஒரு சில தலங்களில் உள்ள கோயில்களுக்கென்று தனியாகப் பெயர்கள் வழங்கி வந்தன. எடுத்துக்காட்டாக

| ஊர்ப் பெயர் | கோயிலின் பெயர் |
|---|---|
| திருவாரூர் | பூங்கோயில் |
| திருவாரூர் | மூலட்டானம் |
| திருவாரூர் | திருவாரூர் அரநெறி |
| மதுரை | ஆலவாய் |
| திருப்புத்தூர் | திருத்தளி |
| திருச்செங்காட்டங்குடி | கணபதீச்சரம் |
| திருப்பனந்தாள் | தாடகையீச்சரம் |

இவையும் கோயில்களின் பழமைக்குச் சான்று பகர்கின்றன.

அப்பர் அடிகள் தம "அடைவுத்திருத்தாண்டகத்தில்"[3],

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதி னோரெட்டும் மற்றும்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற்கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக்கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து தாழ்ந்து
இறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே" (5)

என அருளியுள்ளார். இதனிலிருந்தும் கோயில்களின் பல வகைகள் தெரியவருகின்றன. அவையாவன :

1) பெருங்கோயில்
2) கரக்கோயில்
3) ஞாழற்கோயில்
4) கொகுடிக்கோயில்
5) இளங்கோயில்
6) மணிக்கோயில்
7) ஆலக்கோயில்

மேலும் ஞானக் குழந்தை தம் திரு ஆலவாய்த் திருப்பதிகத்தில்

"குலச்சிறை குலாவுங் கோபுரஞ்
சூழ் மணிக் கோயில்" (4)

எனக் கோயில்களுக்குக் கோபுரம் போன்ற அமைப்புகள் இருந்தமையைக் குறிப்பிட்டுள்ளார். இவர்கள் வாழ்ந்த ஏழாம் நூற்றாண்டில் பலவகைக் கோயில்கள் இருந்தன; அவை கோபுரம் போன்ற அமைப்புகளுடன் இருந்தன என்பவனவற்றைக் கருத்தில் கொண்டால், கோயில்கள் தமிழகத்தில் நீண்ட நெடுங்காலம் வேரூன்றி இருந்திருக்க வேண்டும் என்பது யாவராலும் மறுக்க முடியாத உண்மையன்றோ !

**கோயில்களின் சிறப்புகள் :**

தமிழகக் கோயில்கள் பல சிறப்புகளை உடையனவாக விளங்குகின்றன. அவற்றை ஒன்வொன்றாகப் பார்ப்போம்.

காஞ்சிபுரம், திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதம்பரம் ஆகியவை ஐம்பூதத் தலங்களாம். சிவபெருமான் முப்புரங்களை எரித்தது திருவதிகை. காலனைக் காலால் காய்ந்தது திருக்கடவூர். திருமால் வாமனன் வடிவங்கொண்ட திருப்பதி திருக்குறுங்குடி. இவ்வாறாக ஒவ்வொரு கோயிலும் புராண வரலாறுடன் தொடர்பு கொண்டுள்ளது.

சமயப் பெருமையை எடுத்துக்கொண்டால், நாயன்மார்களால் பாடல் பெற்ற தலங்கள்; ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திவ்ய தேசங்கள். பட்டினத்தடிகளுக்குப் பேய்க் கரும்பு திருவொற்றியூரில் இனித்தது. மைலாப்பூரில் ஞானப் பெருந்தகையாம் சம்பந்தர் எலும்பைப் பெண்ணுருவாக்கினார். திருக்கோட்டியூரில் இராமனுசர் மக்களுக்கு மகாமந்திரம் உபதேசித்தார்.

திருக்கோயில்கள் இலக்கியத்துடனும் தொடர்பு கொண்டுள்ளன. சேக்கிழாருக்கு ''உலகெலாம்'' என்று அடி எடுத்துக் கொடுக்கப்பட்டு, அவர் திருத்தொண்டர் புராணத்தை அரங்கேற்றிய தலம் சிதம்பரம். கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றியது சீரங்கம். அருணகிரிநாதருக்கு ''முத்தைத்தரு'' என்ற அடி எடுத்துக் கொடுத்த தலம் திருவண்ணாமலை. திருவிடை வாயிலில் வேறு எங்கும் கிடைக்காத திருஞான சம்பந்தரின் திருப்பதிகம் கல்வெட்டில் கிடைத்துள்ளது.

குடுமியான் மலையில் இசைக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. சித்தன்னவாசல் ஓவியங்களும், தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள சோழர் கால ஓவியங்களும் உலகப் புகழ் பெற்றவை. தமிழகக் கோயில்கள் சிற்பக் களஞ்சியங்களாக விளங்குகின்றன. காஞ்சிபுரம் கைலாயநாதர் கோயில் பல்லவர்களின் கலைக் கருவூலமாக விளங்க, தஞ்சைப் பெரிய கோயில், கங்கை கொண்ட சோழீச்சரம், தாராசுரம் ஆகியவை சோழர்களின் கலைத் திண்மையை உலகுக்குப் பறை சாற்றுகின்றன.

திருக்கோயில்களில் உள்ள கல்வெட்டுகள் அக்கால சமூக, பொருளாதார, அரசியல் அமைப்புகளையும், நாகரீகத்தையும், மொழி, இலக்கணம், இலக்கியம் ஆகியவை பற்றியும் அறியப் பேருதவியாக உள்ளன. உத்தரமேரூர் வைகுண்டப் பெருமான் மற்றும் மானூர் அம்பலவாண சுவாமி கோயில் ஆகியவற்றில் உள்ள கல்வெட்டுகளினின்றும் குடவோலை முலம் தேர்ந்தெடுக்கும் முறை வழக்கத்தில் இருந்தது தெரிய வருகிறது. இவ்வாறு கோயில்கள் வரலாற்றுக் கருவூலங்களாகத் திகழ்கின்றன.

பல திருக் கோயில்களில் வரலாற்றுப் புகழ்பெற்ற நிகழ்ச்சிகள் நடைபெற்றுள்ளன. தேவாரப் பாடல்களை அழிவினின்றும் மீட்டுக் கொடுத்த தலம் சிதம்பரம் திருக்கோயில், கி. பி: 1802இல் மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்த வில்லியம் காரோ என்பவர் பவானியில் தன்னை மாளிகை இடிந்து விழுவதினின்றும் காப்பாற்றியமைக்காகத் தந்தக்கட்டில் ஒன்றைக் கோயிலுக்குக் காணிக்கையாக அளித்துள்ளார்.

இவ்வாறு தமிழகக் கோயில்கள் பல பெருமைகளுடன் விளங்குகின்றன.

**நாகரீக வளர்ச்சியில் கோயில்களின் பங்கு :**

அன்றைய கோயில்கள் இறைவனை வழிபடும் தூய இடம் மட்டும் அன்று; மக்களின் நல்வாழ்வில் பல வகைகளில் உறுதுணையாக இருந்தன. அவற்றை ஒவ்வொன்றாகக் காண்போம்.

தாராசுரம் கோயிலில் நாயனமார்களின் சரிதம் கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ளது. திருக்கோயில் களில் திருவருட் செல்வர்களின் பாடல்கள் பாடப் பெற்று வந்தன. சமயச் சொற்பொழிவுகள் நடை பெற்று வந்தன. இவ்வாறு கோயில்கள் சமய அறிவைப் பரப்பி வந்தன.

சோழப் பேரரசன் வீரராசேந்திரன் காலத்தில் மாதவன் என்பான் திருமுக்கூடலில் வேதங்களைக் கற்பிக்கக் கலாசாலையையும், மாணவர் விடுதியையும், பதினைந்து படுக்கைகள் கொண்ட மருத்துவ விடுதி யையும் ஏற்படுத்தினான். இவை அங்குள்ள திருக் கோயிலின் ஆளுகையில் இருந்து வந்தன. ஆசிரியரும் மருத்துவரும் கோயிலின் மேற்பார்வையில் பணிபுரிந்து வந்தனர். இங்ஙனம் கோயில்கள் கல்விக் கூடங் களாகவும், மருத்துவமனைகளாகவும் செயல்பட்டு வந்தன.

சைவ மற்றும் வைணவ திருவருட் செல்வர்கள் ஆங்காங்கு உள்ள கோயில்களில் எழுந்தருளியுள்ள இறைவன் மீது கல் நெஞ்சும் கரைந்து உருகப் பக்திப் பாடல்களைப் பாடியுள்ளனர். இவை சைவத் திருமுறை களாவும், நாலாயிரத் திவ்யப் பிரபந்தமாகவும் வகுக்கப் பட்டன. கோயில்கள் இல்லையெனில் பக்தி இலக்கியம் என்றால், இல்லை என்பது சற்றும் மிகையாது.

சித்தன்னவாசல், திருப்பருத்திக் குன்றம், தஞ்சைப் பெரிய கோயில் ஆகியவற்றில் உள்ள ஓவியங்கள் தமிழக

ஓவியக் கலையின் சிறப்பிற்குச் சான்று பகர்கின்றன. கோயில்களில் நடனப் பெண்களின்மூலம் நாட்டியக் கலை வளர்க்கப்பட்டு வந்தது. எடுத்துக்காட்டாக, தஞ்சைப் பெரிய கோயிலில் நடனம் ஆட நானூறு பெண்களை மாமன்னன் முதலாம் இராசராச சோழன் ஏற்பாடு செய்திருந்தமையைக் கல்வெட்டுகள் தெரிவிக் கின்றன. இவ்வாறு கோயில்கள் ஓவியம், இசை, நடனம் போன்ற லளித கலைக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வந்தன.

கோயில்கள் சிற்பக் கலையை வளர்த்தமைக்கு இன்றைய ஆயிரக்கணக்கான கோயில்களே சான்றாக உள்ளன. "உலகில் வேறு எந்த நாட்டிலும் தென் னிந்தியாவைப் போன்று கோயில் கட்டிடக்கலை சிறப்பு மிக்க வளர்ச்சியை அடையவில்லை" என்றும் "பல வகையான நுணுக்கங்களிலும் சிக்கல் நிறைந்த வேலைப் பாட்டிலும் நிகரற்று விளங்குகிறது" என்றும் பெர்கூஸன் என்ற அறிஞர் கூறியுள்ளார். "தமிழ் இனம்தான் உலகிலேயே கோயில் கட்டுவதில் தலை சிறந்தது" என பிரிட்டானியக் கலைக்களஞ்சியத்தில் கூறப்பட்டுள்ளது.

பல்லவ மன்னன் முதலாம் பரமேசுவர வர்மனின் கூரம் செப்பேட்டினின்றும் "வித்ய விநோத பல்லவ பரமேசுவர கிருகம்" என்ற சிவன் கோயிலில் பாரதச் சொற்பொழிவு நடைபெற்று வந்தமை தெரியவருகிறது. தஞ்சைமாவட்டத்தில் செந்தலையீசுவரர் கோயிலிலும் பாரதச் சொற்பொழிவு நடந்துவந்தது. இதன் நோக்கம் மக்கள் பீமன், அருச்சுனன் போன்று மாவீரர் களாகத் திகழ வேண்டுமென்பதே. மக்களை வீரர் களாக்கும் பணியிலும் கோயில்கள் தம் பங்கை ஆற்றி வந்தன.

கோயில்கள் அறம் கூறும் அவைகளாகவும் செயல் பட்டன. கிராமச் சபைகளின் பல்வேறு குழுக்களின்

பெருமக்கள் கோயில்களில்கூடி நடைமுறைகளை விவாதித்தனர். எனவே கோயில்கள் கருத்தரங்குகள் நடைபெறும் இடங்களாகவும விளங்கின.

கோயில்களில் திருவலகிடுவோர், திருமெழுக்கிடுவோா போன்று பலர் தொழில் புரிந்துவந்தனர். நடன மாதர்கள், திருப்பதிகம் பாடுவோர்கள், ஓவியக் காரர்கள், சிற்பக் கலைஞர்கள் ஆகியோரும பணி புரிந்து வந்தனர். இவ்வாறு கோயில்கள் மக்களுக்குப் பல வழிகளில் வேலை வாய்ப்புகள் அளித்துவந்தன.

கோயில்களில் மன்னர்கள் தங்கள் பெயரில் திருவிழாக்கள் நடத்த ஏற்பாடு செய்துவந்தனர். எடுத்துக்காட்டாக வேதாரண்யம் கோயிலில் திருவிக்ரம சந்தி என்ற விழாக் கொண்டாட மூன்றாம் இராசேந்திர சோழன் நிபந்தம் அளித்துள்ளான். இதனின்றும் கோயில்கள் மக்களுக்குப் பொழுது போக்கும் இடமாகவும் பயன்பட்டு வந்தமை தெரியவருகிறது.

இவை மட்டுமன்றி மக்களுக்குத் துன்பம் உற்ற காலங்களில் அவற்றைத் துடைக்கவும் கோயில்கள் உதவிகள் புரிந்து வந்தன. கோயில் ஊழியர்களில் ''வீரமுட்டிகள்'' என்ற வீரர்கள் இருந்தனர். திருவில்லி புத்தூர் போன்ற கோயில்களின் திருவாயில்களில் மக்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் புகலிடமாகவும் விளங்கின.

ஊர்ப்பாதை அமைக்க, துறவிகளுக்கு அமுது அளிக்க போன்ற நற்காரியங்களுக்கு நிலங்கள் நிபந்தமாக அளிக்கப்பட்டதைக் கோயில்களில் கல்வெட்டுகளில் பொறிக்கும் மரபு பின்பற்றப்பட்டு வந்தது. கோயில்கள் அக்கால ஆவணப்பதிவு அலுவலகங்களாகப் பணிபுரிந்தமை தெரியவருகிறது.

இவ்வாறு கோயில்கள் மக்களின் வாழ்க்கையில் இரண்டறக் கலந்து நாகரீக வளர்ச்சியில் தலையாய பங்கை ஆற்றிவந்தன. இன்றைய மக்கள் நலம் நாடும் மக்கள் ஆட்சியின் முன்னோடியாகக் கோயில்கள் திகழ்ந்தனவாகக் கருதப்படுகின்றன. எனவேதான் அன்றைய நாகரிகத்தைக் "கோயில் நாகரிகம்" என்று அறிஞர்கள் அழைக்கிறார்கள். எவ்வாறு புராதன கிரேக்க நாட்டில் ஏதன்ஸ், ஸ்பார்டா ஆகிய நகரங்கள் நாகரிகத்தின் மையமாக இருந்தனவோ, அவ்வாறே தமிழகத்தில் மக்கள் நாகரிகத்தின் உறைவிடமாகக் கோயில்கள் திகழ்ந்தன. கோயில் இன்றேல் நாகரீகம் இல்லை; மக்கள் வாழ்வு காட்டுமிராண்டி வாழ்வாகத் தான் இருந்திருக்கும். இது பற்றியே திருநாவுக்கரசு நாயனாரும்

"திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும் ..
ஊரல்ல அடவிகாடே"

என்று அருளிச் செய்துள்ளார். மக்கள் நலம் நாடும் ஆட்சியின் தொடக்க நிலைக் களனாகக் கோயில்களைக் கொள்ளலாம். நாகரிக வாழ்க்கையின் உயர்ந்த பண்புகளையெல்லாம் தன்னகத்தே கொண்டு ஒளி வீசியது. "அறத்தின் அடிப்படையில் பிறந்த மனித நேயத்தால் நடத்தப்பெற்ற இடைக்கால இந்திய கோயில்களுக்கு மனித இனத்தின் வரலாற்றில் ஈடு இணை இல்லை" எனப் பேராசிரியர் கே ஏ. நீலகண்ட சாஸ்திரி குறிப்பிடுகிறார். "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்றால் ஆண்டவனைத் தொழத் தூய இடம் இல்லை; எனவே அங்கு குடியிருக்க வேண்டாம் என்ற கருத்தில் மட்டும் கூறப்பட்டதாகத் தெரியவில்லை. கோயில் இல்லை என்றால் நாகரிகம் இல்லை; நாகரிக வளர்ச்சிக்கே இடம் இல்லை; மக்களின் வாழ்க்கையே மலர இயலாது; எனவே அந்த ஊரில்

## கோயில் கட்டிடக் கலையின் வளர்ச்சி:

ஏற்கனவே குறிப்பிட்டாற் போன்று, பண்டைக் காலந்தொட்டுக் கோயில்கள் இருந்து இருப்பினும் அற்றை நாள் கோயில்கள் இன்று இல்லை. அதற்குக் காரணங்கள் இரண்டு: 1) அவை யாவும் மரம், செங்கல் ஆகியவற்றால் கட்டப்பட்டிருந்ததால், அவற்றால காலத்தை எதிர்த்து நிற்க இயலவில்லை, 2) கற்றளிகள் (கருங்கற்களால் கட்டப்பெற்றவை) பெரும் அளவில் கட்டத் தொடங்கியபின், மண்தளிகள் (செங்கற்களால் கட்டப்பெற்றவை) பல கற்றளிகளாக மாற்றப்பட்டன.

கி. பி. 610 முதல் 640 வரை பல்லவ அரியணையை அலங்கரித்த முதலாம் மகேந்திரவர்மன் காலமும் கணக்கும் கடந்த காரணனுக்குக் காலத்தால் அழிக்க இயலாத கோயில்களைக் கட்ட எண்ணங்கொண்டான். அண்டை நாட்டை ஆண்ட மேலைச் சாளுக்கியர்களைப் பின்பற்றி அவன் தமிழகத்தில் குடைவரைக் கோயில் களைத் தோற்றுவித்தான். தென்னாற்காடு மாவட்டம் மண்டகப்பட்டில் உள்ளது தான் முதற் குடைவரைக் கோயில். மாமல்லபுரம் நீங்கலாகத் தமிழகம் எங்கும் எண்பது குடைவரைக் கோயில்களும் மலைத்தளியும் உள்ளன.

தமிழகக் கோயில் கலையின் நுணுக்கங்களை ஆராய்ந்த ஜோவியோ தூப்ரே என்ற பிரான்ஸ் நாட்டு பேரறிஞர் இந்தக் கலையின் வளர்ச்சியை ஐம்பெரும் பகுதிகளாகப் பிரித்துள்ளனர்.

## 1. பல்லவர்கள் பாணி (கி. பி. 600 முதல் 850 வரை)

வரை என்றால் மலை; அதைக் குடைந்து உருவாக்கப் பெற்ற கோயில்கள் குடைவரைக் கோயில்கள் என்று அழைக்கப்பெற்றன. பல்லவர்களைப் பின்பற்றிப் பாண்டியர்களும் முத்தரையர்களும் தங்கள் தங்கள் பகுதிகளில் குடைவரைக் கோயில்களைத் தோற்றுவித்தனர். எனவே குடைவரைக் கோயில்களை உருவாக்கும் பாணி பல்லவர்கள் பாணி, பாண்டியர்கள் பாணி, முத்தரையர்கள் பாணி என மேலும் மூன்று வகையாக வகைப்படுத்தப்பட்டுள்ளது. பல்லவர்கள் பாணி மேலும் நான்கு வகையாகப் பகுக்கப் பட்டுள்ளது. அவை :

| | | |
|---|---|---|
| மகேந்திரவர்மன் பாணி | : | 610 முதல் 640 வரை |
| மாமல்லன் மாணி | : | 640 முதல் 674 வரை |
| இராசசிம்மன் பாணி | : | 674 முதல் 800 வரை |
| அபராசிதன் பாணி | : | 800 முதல் 850 வரை |

## 2. முற்காலச் சோழர்கள் பாணி (கி. பி. 850 முதல் 1100 வரை)

மிக அற்புதமான மிகப் பெரிய விமானங்களே இக் காலக் கோயில்களில் குறிப்பிடத்தக்கவை. தஞ்சைப் பெரிய கோயில், கங்கை கொண்ட சோழீச்சுரம ஆகிய வற்றை இதன் சான்றுகளாகக் கூறலாம்;

## 3. பிற்காலச் சோழர்கள் பாணி (கி. பி. 1100 முதல் 1350 வரை)

வானளாவிய உயர்ந்த, வேலைப்பாடு மிக்க அழகிய கோபுரங்கள்தாம் இக்காலப் பாணியாகக் கருதப் படுகின்றன. இது பாண்டியர்களின் பாணி என்றும் அழைக்கப்பெறுகிறது. மதுரை, சிதம்பரம் போன்ற

கோயில்களை இதற்கு எடுத்துக்காட்டுகளாகக் கொள்ளலாம்.

4. விசய நகரப் பாணி (கி. பி. 1350 முதல் 1600 வரை)

கல்யாண மண்டபங்களும், ஆயிரங்கால் மண்டபங்களும் இககாலத்தில் தோன்றின. காஞ்சிபுரம, வேலூர் ஆகிய இடங்களில் உள்ளவற்றைச் சான்றுகளாகக் கூறலாம்.

5. தற்காலப் பாணி கி. பி. 1600 முதல் இன்று வரை)

மிகப் பெரிய திருச்சுற்றுகளே இக்காலக் கோயில்களின் தனிச் சிறப்பாக உள்ளன. இராமேசுவரம் கோயிலை இதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

குடைவரைக் கோயில்களை அடித்தளமாகக் கொண்டு தமிழகத்தில் சென்ற பதின்மூன்று நூற்றாண்டு காலமாகக் கோயில் கட்டிட மற்றும் சிறபக்கலை உலகோர் வியக்கத்தக்க வளர்ச்சியை அடைந்துளளது. இந்த வளர்ச்சி பிறநாட்டுக் கலாசாரக் கலப்பின்றித் தனித்து வளர்ந்துள்ளதாக ஜோவியோ தூப்ரே தம் நூலில் பாராட்டியுளளார்.

**கோயில்களின் இலக்கணம் :**

கட்டப்பட வேண்டிய கோயிலின் அளவுக்கு ஏற்றபடி நிலத்தில் சதுரம் வரையப்படும். பக்கத்திற்கு எட்டாக அறுபத்து நான்கு சதுரங்களோ அல்லது ஒன்பதாக எண்பத்தொன்று சதுரங்களோ அமைக்கப்படும். நடுவில் உள்ள சதுரத்தில் கருவறையும், ஓரங்களில் உள்ள சதுரங்களில் திருச்சுற்று, சுற்றுப்புறத் தெய்வங்களின் திருமுன் ஆகியவை இருக்கவேண்டும். இடைப்பட்ட சதுரங்களில் எந்தக் கட்டடமும் கட்டப்படாது காலியாக இருக்கவேண்டும். இவை ''மர்ம தானங்கள்'' எனப்படும்.

மூலவர் இருக்கும் இடம் கருவறை என்று அழைக்கப்பெறும். இதைச் சுற்றிலும் கட்டப்படும் கட்டிடம் ஆறு வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை; 1) அதிட்டானம் (அடி); 2) சுவர் (கால்); 3) பிரஸ்தாரம் அல்லது கூரை (தோள்); 4 கிரீவம் (கழுத்து); 5) சிகரம் (தலை); 6) ஸ்தூபி அல்லது குடம் (முடி), கட்டிடத்தின் ஆறு பாகங்களும் மனித உடலுடன் இவ்வாறாக ஒப்பிடப்படுகிறது.

உபானம், ஜகதி, குமுதம், பத்மம், வரி, வரிமானம் என்ற உட்பிரிவுகளைக் கொண்டது அதிட்டானம் என்ற அடிப் பகுதி. இதுதான் கட்டிடம் முழுமையும் தாங்குகிறது. இதற்குக் கீழே உபபீடம் என்ற பகுதியை அமைத்தால், அது கட்டிடத்திற்கு அழகைத் தரும்.

அதிட்டானத்தின் மேல் பகுதி கால். இது அரைத் தூண்கள், புரைகள், மகர தோரணங்கள் ஆகியவற்றால் அழகு பெறச் செய்யப்பட்டிருக்கும். தூண் என்பது தனியாக இருப்பது; தூண் போன்ற அமைப்பு சுவரை ஒட்டி இருப்பின், அது அரைத்தூண் எனப்படும். சுவரில் சிலைகளை வைக்க அமைக்கப்படும் குழி போன்ற பகுதி புரை என்று அழைக்கப் பெறுகிறது.

இதற்கு மேல் உள்ளது பிரஸ்தாரம் என்ற கூரையாகும். இங்கு பூதகணவரிசை, கொடுங்கை, யாளி வரிசை என்பவை காணப்படும். கிரீவம் இதற்குமேல் அமைக்கப்படும். அது சதுரமாகவோ, வட்டமாகவோ அல்லது எட்டுப்பட்டை கொண்டதாகவோ இருக்கும். இங்கு நீண்ட அமைப்பினைக் கொண்ட சாலையும், சதுர அமைப்பினை உடைய கூடமும் மாலை போன்று அமைக்கப்படும். இப் பகுதியின் தென் புறத்தில் ஆலமர் செல்வனையும், மேல்புறத்தில் யோக நரசிம்மரையும் அமைப்பது மரபு. வடபுறத்தில் பிரமா அல்லது முருகன், கிழ்ப்புறத்தில் இந்திரன் அல்லது அன்னையுடன் கூடிய சிவபெருமான் வடிவம் இருக்கும்.

கிரீவத்தின் மேல் பகுதி சிகரம் என்று அழைக்கப் பெறும். இது வட்டமாகவோ, சதுரமாகவோ, எட்டுப் பட்டையாகவோ அல்லது தூங்கும் யானை போன்றோ இருக்கும். வட்டமாக இருந்தால், "வேஸர சிகரம்" என்றும், சதுரமாக இருந்தால் "நாகர சிகரம்" என்றும், எட்டுப் பட்டையாக இருந்தால் "திராவிட சிகரம்" என்றும், தூங்கும் யானை போன்று இருப்பின் "தூங்கானை மாடம்" என்றும் அழைக்கப்பெறும். சிகரத்தின் மேல் பகுதி கலசம், குடம் அல்லது ஸ்தூபி எனப்படும்.

கருவறை கீழே அமையாது மேல் நிலையில் இருந்தால், அது மாடக் கோயில் என்று அழைக்கப்படும். ஒரு சில திருமால் கோயில்களில் ஒன்றின்மேல் ஒன்றாக மூன்று கருவறைகள் காணப்படும். அங்கு திருமாலின் நின்ற திருக்கோலம், வீற்றிருந்த கோலம், சயனத் திருக்கோலம் என்ற மூன்று திருக் கோலங்களும் இருக்கும். காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமான் கோயில், உத்தரமேரூர் சுந்தர வரதப் பெருமான் கோயில், மன்னார் கோயில் வேத நாராயணன் கோயில் ஆகியவற்றை எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம். கருவறையும் அதற்கு மேல் பகுதியும் ஸ்ரீகோயில் அல்லது விமானம் எனப்படும்.

கருவறைக்கு முன்னால் உள்ள சிறிய அறை போன்ற பகுதியை அந்தராளம் என்பர். பல மண்டபங்களைக் கொண்ட கோயில்களில் அந்தராளத்தை ஒட்டிய மண்டபம் அர்த்தமண்டபம் என்றும், முகப்பில் உள்ள மண்டபம் முகமண்டபம் என்றும் கூறுவர். இவற்றிற்கு இடையில் உள்ள மண்டபம் மகா மண்டபம் என அழைக்கப்பெறும். பல சிறிய தூண்களைத் தன்னகத்தே உடைய தூண்களின் தொகுப்புகள் பலவற்றைக் கொண்ட மண்டபம் தனியாக அமைக்கப்பட்டிருக்கும்.

இதைக் கல்யாண மண்டபம் அல்லது ஆயிரங்கால் மண்டபம் என்பர்.

கோயிலின் நுழைவாயிலை அலங்கரிப்பது கோபுரம். அது 3, 5, 7, 9 நிலைகள் உடையதாக இருக்கும். கோயிலைச் சுற்றிலும் கட்டப்பட்ட சுவர் திருச்சுற்று மதிலாகும். இதை ஒட்டி மாளிகை இருப்பின், அதைத் திருச்சுற்று மாளிகை என்பர்,

**அறுவகைச் சமயங்களும் இறை வடிவங்களும் :**

இந்து சமயம் ஆறு வகைகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது, அவை சைவம், வைணவம், சாக்தம், கணபத்யம், கௌமாரம், சௌரம் என்பனவாம். சைவத்தில் சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்று வணங்கப்படுவது போன்று, வைணவததில் திருமாலும், சாக்தத்தில் சக்தியும், கணபத்தியத்தில் பிள்ளையாரும், கௌமாரத்தில் முருகனும், சௌரத்தில் சூரியனும் முழுமுதற் கடவுளாகப் போற்றப்படுகின்றனர்.

சிவபெருமானது மகேசுவர வடிவங்கள் இருபத்தைந்து. அவை :—

1) சந்திரசேகரமூர்த்தி; 2) உமாசகிதமூர்த்தி; 3) விருஷபாரூடமூர்த்தி; 4) நிருத்தமூர்த்தி; 5) கல்யாண சுந்தரமூர்த்தி: 6) பிச்சாடன மூர்த்தி; 7) காமதகனமூர்த்தி; 8) காலாந்தகமூர்த்தி; 9) திரிபுராந்தகமூர்த்தி; 10) சலந்தரவதமூர்த்தி; 11) கஜாரி மூர்த்தி; 12) வீரபத்திரமூர்த்தி; 13) சங்கரநாராயண மூர்த்தி; 14) அர்த்தநாரீசுவரமூர்த்தி; 15) கிராத மூர்த்தி; 16) கங்காளமூர்த்தி; 17) சண்டேசானுக்கிரக மூர்த்தி; 18) விஷபாகரணமூர்த்தி; 19) சகரதான மூர்த்தி; 20) விக்னேசுவர அனுக்கிரகமூர்த்தி; 21) சோமாஸ்கந்தமூர்த்தி ; 22) ஏகபாதமூர்த்தி ;

23) சுகாசன மூர்த்தி; 24) தட்சிணா மூர்த்தி; 25) இலிங்கோற்பவ மூர்த்தி.

திருமாலின் வடிவங்கள் நின்ற திருக்கோலம், வீற்றிருந்த திருக்கோலம், சயனத் திருக்கோலம் என மூன்று வகைப்படும். இவை ஒவ்வொன்றும் யோக மூர்த்தி, போகமூர்த்தி, வீரமூர்த்தி, அபிசாரமூர்த்தி என மேலும் நான்கு வகைப்படுத்தப்பட்டுள்ளன. இந்தப் பன்னிரண்டு வடிவங்கள் உத்தமம், மத்திமம், அதமம் என மேலும் மூன்று பிரிவுகளாக வகைப்படுத்தப் பட்டுள்ளன. இவையன்றி அவனது பத்துத் தோற்றங் களுக்கும் (அவதாரங்களுக்கும்) தனித்தனியாகப் பல வடிவங்கள் கூறப்பட்டுள்ளன. கஜேந்திரனுக்கு அருள் செய்யும் வடிவம் போன்றவையும் உள்ளன.

சக்தியின் ஐந்து வடிவங்கள் கூறப்பட்டுள்ளன. அவை பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்பனவாம். மார்க்கண்டேய புராணத்தில் ராஜஸம், சாத்வீகம், தாமசம் என்ற மூன்று குணங் களைக் குறிக்க மூன்று தேவிகள் கூறப்பட்டுள்ளனர். அவர்கள் இலட்சுமி, மகாகாளி மற்றும் சரசுவதியாம். இவையன்றி துர்க்கையின் பல வடிவங்களும், மகிஷாசுர மர்த்தினி போன்ற வடிவங்களும் உள்ளன.

கணபதி பல வடிவங்களில் வணங்கப்படுகிறான். அவை பாலகணபதி, தருணகணபதி, பக்தவிக்னேசுவரர், வீரவிக்னேசுவரர்; லட்சுமிகணபதி, உச்சிஷ்டகணபதி, மகாகணபதி, ஊர்த்துவகணபதி, பிங்கலகணபதி, நடன கணபதி, ஏகதந்தகணபதி, ஹேரம்பகணபதி, பிரசன்ன கணபதி என்பனவாம்.

''குமாரதந்திரம்'' என்ற நூலில் முருகனது பதினாறு வடிவங்கள் கூறப்பட்டுள்ளன அவை: 1) சக்திதரன்: 2) கந்தன்; 3) சேனாபதி; 4) சுப்ர மணியன்; 5) கஜவாகனன்; 6) சரவணபவன்;

7) கார்த்திகேயன்; 8) குமரன்; 9) சண்முகன்; 10) தாரகாரி; 11) கிரவுஞ்சபேதனன்; 12) சேனானி; 13) பிரமசாத்தா; 14) சிகிவாகனன; 15) பாலசுவாமி; 16) வள்ளி கல்யாணசுந்தர வடிவம். இவையன்றி, "ஸ்ரீதத்வநிதி" என்ற நூலில் மேலும் ஆறு வடிவங் களுக்கான விதிகள் உள்ளன. அவை 1) அக்னிஜாத சுப்ரமணியன்; 2) சௌரபேய சுப்ரமணியன்; 3) காங்கேய சுப்ரமணியன்; 4) குகசுப்ரமணியன்; 5) பிரமச்சாரி சுப்ரமணியன்; 6) தேசிக சுப்ரமணியன்.

தன் இரு கைகளில் தாமரை மலர்களை ஏந்தியபடி சூரியன் அமைக்கப்பட்டிருப்பான். அவனது தலையைச் சுற்றிலும் ஒளிவட்டம் காணப்படும். ஏழு குதிரைகள் பூட்டிய தேரிலும் அவன் அமைக்கப்படலாம். முற் காலத்தில் சிவாலயங்களில் கருவறையைச் சுற்றி உள்ள எட்டுச் சுற்றுப்புறத் தெய்வங்களில் இவன் ஒருவன். இவன் நுழைவாயிலுக்கு இடப்புறம் காணப்படுவான். இது சிவபெருமானது மூன்று கண்களில் சூரியன் வலக் கண் என்பதைக் குறிக்கிறது.

**கலைச் சிறப்புமிக்க கோயில்கள் :**

ஒவ்வொரு கோயிலும் பல சிறப்புகளை உடையது என்பதை முன்னரே பார்த்தோம். இப்பகுதியில் கலைச் சிறப்பு மிக்க கோயில்கள் மாவட்ட வாரியாக சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இதை முழுமை எனக் கூற இயலாது; விடுதல்கள் இருக்கலாம். அங்ஙனம் இருப்பின், இதைப் படிக்கும் இறையன்பர்கள் பொறுத்து அருள்வார்களாக.

## செங்கல்பட்டு அண்ணா மாவட்டம்

**கைலாய நாதர் கோயில், காஞ்சிபுரம் :** பல்லவர்களின் கலைக் கருவூலம் என்றாலே போதும், இதன் சிறப்பை உணர்த்த,

**வைகுண்டப்பெருமாள் கோயில், காஞ்சிபுரம்:** பல்லவ அரச பரம்பரையின் வரலாற்றுக் கருவூலமாகத் திகழ்கிறது.

**வரதராஜப்பெருமாள் கோயில், காஞ்சிபுரம் :** இங்குள்ள கல்யாண மண்டபம் அத்தகு படைப்புகளில் சிறப்பிடம் வகிக்கிறது.

**சுந்தர வரதப் பெருமாள் கோயில் உத்தரமேரூர்:** மூன்று அடுக்குக் கருவறை கொண்டது. அஷ்டாங்க விமானத்தை உடைய இந்தக் கோயிலில் ஒன்பது மூலவர்கள் உள்ளனர்.

**கடற்கரைக் கோயில் மாமல்லபுரம் :** உலகப் புகழ் பெற்ற சிறப்பை உடையது.

**சுப்ரமணிய சுவாமி திருக்கோயில், திருப்போரூர் :** முருகனது அரிய வடிவங்கள் பலவற்றைக் கொண்டது.

## வட ஆற்காடு அம்பேத்கார் மாவட்டம்

**ஜலகண்டேசுவரர் கோயில், வேலூர் :** இங்குள்ள கல்யாண மண்டபம் கலைச் சிறப்பு மிக்கது.

## தென் ஆற்காடு மாவட்டம்

**வீரட்டானேசுவரர் திருக்கோயில், திருவதிகை :** இங்கு விமானம் தேர் போன்ற அமைப்பினைக் கொண்டது. சுதை வேலைப்பாடு மிக்கது. தஞ்சைப் பெரிய கோயிலுக்கு முன்னோடியாகக் கருதப்படுவது.

**கரக்கோயில், மேலக்கடம்பூர் :** இருபுறமும் குதிரைகள் விமானத்தை இழுப்பது போன்ற அமைப்பினை உடையது. ஒரிசா மாநிலத்தில் உள்ள கொனார்க் என்ற இடத்தில் உள்ள உலகப் புகழ் பெற்ற சூரியனார் கோயிலுக்கு முன்னோடியாகத் திகழ்வது. வங்க

நாட்டைச் சார்ந்த காளை மீது நடனம் புரியும் ஆடவல்லான் சிலை இங்கு உள்ளது.

**திருத்தூங்கானை மாடம், பெண்ணாகடம்:** தூங்கானை மாடம் என்ற சிறப்புப் பெயர் பெற்ற இந்தக் கோயில் மூலவரை நான்கு புறங்களினின்றும் காணலாம்.

**ஆடவல்லான் கோயில் சிதம்பரம்:** பொன்னால் வேய்ந்த விமானத்தை உடைய இந்தக் கோயிலின் தெற்கு வெளி கோபுர நுழைவாயிலில் பரதநாட்டிய சாத்திரத்தில் விதிக்கப்பட்ட நடனங்களும் அவற்றிற்கான பாடல்களும் பொறிக்கப்பட்டுள்ளன.

## தஞ்சை மாவட்டம்:

**பெரிய கோயில் தஞ்சாவூர்:** கோயில்களின் சக்கரவர்த்தி எனப் புகழப் பெறுவது. பொதுவாகக் கோபுரம் விமானத்தை விட உயரமாக இருக்கும். இங்குதான் முதன் முதலில் விமானம் கோபுரத்தைவிட உயரமாக அமைக்கப்பட்டது. நுழைவாயிலை இரு கோபுரங்கள் அணி செய்கின்றன. இங்குள்ள சோழர் கால ஓவியங்களும், பரதநாட்டியத்தின் எண்பத்தொன்று நடனங்களைப் பற்றிய சிவபெருமானின் புடைச் சிற்பங்களும் புகழ்மிக்கவை.

**இராசராசேச்சுவரம் தாராசுரம்:** இங்கு நாயன்மார்களின் சரிதம் புடைச் சிற்பங்களாகப் பொறிக்கப்பட்டுள்ளது. இராச கம்பீர மண்டபம் கலை அழகுடன் திகழ்கிறது. ஒரு சிறு இடம் கூட விடாது சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

**கம்பேசுவரர் கோயில், திரிபுவனம்:** இங்குள்ள சரபேசுவரர் திருமுன் முன்னுள்ள இரு கொடிப் பெண்கள் எழிலார்ந்த கலை வடிவங்கள்.

**நாகேசுவரர் கோயில், கும்பகோணம்:** இதன் கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் அமைக்கப்பட்ட பெண்களின் அழகு கலைக்கண்களுக்கு பெருவிருந்தாக உள்ளது.

**தண்டாயுதபாணி சுவாமி கோயில், பொரவச்சேரி:** சிக்கலை ஒட்டியுள்ள இந்த ஊரில் உள்ள முருகன் காமனும் கண்டு வெட்குறும் அழகன் என்பதற்கு ஒரு இலக்கியமாகத் திகழுகின்றான். தமிழகத்தில் உள்ள முருகனது திருவுருவங்களில் இது ஓர் இணையற்ற எழிலை உடைத்தாய் உள்ளது.

## புதுக்கோட்டை மாவட்டம்

**மூவர் கோயில்:** இருக்கு வேளிர்களின் தலைநகரமாக இருந்த இங்கு ஒரே திருச்சுற்றில் மூன்று கோயில்கள் கட்டப்பெற்றதில் தற்போது இரண்டுதாம் உள்ளன. பல அழகிய சிற்பங்களைத் தன்னகத்தே கொண்டது.

**விசயாலய சோழீச்சுரம், நார்த்தாமலை:** பல்லவர் பாணி மற்றும் சோழர் பாணி இரண்டும் கலந்து கட்டப் பெற்ற கோயில்.

**ஆத்மநாதர் கோயில், ஆவுடையார் கோயில்:** இங்குள்ள கொடுங்கைகள் அதி அற்புத வேலைப்பாடுகள் கொண்டவை.

**அறவன் கோயில், சித்தன்ன வாசல்:** இங்குள்ள ஓவியங்கள் சிறப்பு மிக்கவை. "தமிழக அஜந்தா" எனப் புகழப் பெறுவது.

## திருச்சி மாவட்டம்

**கங்கை கொண்ட சோழீச்சுரம், கங்கை கொண்ட சோழபுரம்:** தஞ்சைப் பெரிய கோயில் ஆணின் மிடுக்

குடன் காணப்பட்டால், இது பெண்மையின் நளினத்துடன் மிளிர்கிறது. இங்குள்ள ஞான சரசுவதி, சண்டிக்கு அருள் பாலிக்கும் அம்மான் வடிவங்கள் சிற்ப உலகில் தனி இடம் பெற்றவை. முதலாம் இராசேந்திர சோழனின் வெற்றியின் நினைவாக இங்கு ஒரே கல்லில் அமைக்கப்பட்ட நவகோள்கள், பதினெட்டு கைகள் கொண்ட துர்க்கை, கலிங்க நாட்டுப் பிள்ளையார் ஆகியோர் உள்ளனர்.

அகத்தீசுவரம், சோழீச்சுரம், பழுவூர் : பழுவேட்டரைகளின் தலைநகரமாக விளங்கிய இங்கு ஒரே திருச் சுற்றில் இரு கோயில்கள் உள்ளன. பல அழகிய சிற்பங்களைத் தன்னகத்தே கொண்டது.

குரங்கநாதர் கோயில், சீனிவாச நல்லூர் : இங்குள்ள கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் ஒன்றின்மேல் ஒன்றாக இரு அடுக்குகள் அமைந்தது போன்று உள்ளது இதன் தனிச் சிறப்பாகும். இங்குள்ள பெண்களின் புடைச் சிற்பங்களும் கலைத்திண்மை மிக்கவை.

அரங்கநாதர் கோயில், சீரங்கம் : பொன்னால் வேயப்பட்ட விமானத்தை உடையது. இங்குள்ள சேஷகிரி மண்டபத்தில் உள்ள குதிரைகளின் அமைப்பு வியக்கத் தக்கதாக உள்ளது.

## சேலம மாவட்டம்

கைலாயநாதர் கோயில், தாரமங்கலம் : இங்குள்ள தூண்களின் வேலைப்பாடுகள், மேல் விதானத்தில் உள்ள தாமரைப்பூவின் கலை அழகு புகழ் மிக்கவை.

## பெரியார் மாவட்டம்

மகி மாலீசுவரர் கோயில், ஈரோடு : ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்தக் கோயில் முழுக்க முழுக்க

செங்கல்லால் கட்டப்பெற்றது; இன்றும் நல்ல நிலையில் உள்ளது.

சுப்ரமணிய சுவாமி கோயில், சென்னிமலை: ''ஸ்ரீதத்வநிதி'' என்ற நூலில் விதிக்கப்பட்ட முருகனது அரிய வடிவங்கள் நான்கை உடையது.

## கோவை மாவட்டம்

குமார சுப்ரமணியசுவாமி கோயில் ஒதிமலை: ஐந்து தலைகள் எட்டுக் கைகள் கொண்டு எழிலார்ந்த வடிவம் கொண்ட முருகனை மூலவராக உடையது.

நாகேசுவரர் கோயில், முட்டம்: பதினாறு துளைகள் கொண்ட மேகலாபரணம் அணிந்துள்ள அன்னையின் வடிவழகு கண்ணையும் கருத்தையும் கவருவதாக உள்ளது.

## மதுரை மாவட்டம்

மீனாட்சி அம்மன் கோயில்: பாண்டியர் மற்றும் நாயக்கர்கள் காலத்தில் தமிழகம் சிற்பக்கலையில் அடைந்திருந்த உன்னத நிலைக்குச் சான்றாக அமைந்துள்ளது.

## இராமநாதபுரம் மாவட்டம்

இராமநாத சுவாமி கோயில், இராமேசுவரம்: இதன் திருச்சுற்று உலகப் புகழ் பெற்றது.

## திருநெல்வேலி மாவட்டம்

திருவாலீசுவரர் கோயில், திருவாலீசுவரம்: சிறப்பு மிக்க சிற்பங்கள் பலவற்றைக் கொண்டது.

வெட்டுவான் கோயில், கழுகுமலை : பாண்டியர்களின் அதியுன்னதப் படைப்பான மலைத்தளிஐ மலையின் ஒரு பகுதியே கோயிலாக அமைக்கப்பட்டுள்ளது. இங்குள்ள மிருதங்க தட்சிணாமூர்த்தி வடிவம் இந்திய நாட்டில் வேறு எங்கும் இல்லை. ''தென்னக எல்லோரா'' என்ற புகழ் படைத்தது.

கரிவரதப்பெருமாள் கோயில் கிருஷ்ணாபுரம் : நாயக்கர்களின் கலைத் திண்மைக்கு ஒரு எடுத்துக்காட்டு.

— — —

# பிறசேர்க்கை 1

## ஆசனம், முத்திரை ஆகியவற்றின் விளக்கங்கள்.

### ஆசனம்

| | |
|---|---|
| சுகாசனம் | : உடம்பு எப்பக்கமும் சாய்வின்றி, நேராக நிமிர்த்தி, ஒருகால் பொதுவாக இடக்கால் இருக்கை மீது படுக்கையாக இருக்க, மற்றொருகால் தொங்கிய நிலையில் இருத்தல்; |
| பத்மாசனம் | : இரு கால்களும் இருக்கைமீது ஒன்றின்மீது ஒன்று மடித்து இருத்தல்; ஒன்றின் உள்ளங்கால் மற்றொன்றின் தொடைமீது இருக்க வேண்டும். |
| உத்குடி இருக்கை | : ஒருகால் இருக்கைமீது குத்திட்டும், மற்றொரு கால் தொங்கிய நிலையிலும் இருத்தல். |
| வீராசனம் | : ஒரு கால் தொங்கவிட்டுக் கீழே ஊன்றி இருக்க, மற்றொரு காலை அதன் மீது படுக்கையாகவும் விறைப்பாகவும் நீட்டியிருத்தல்— உடல் சமநிலையில் நேராக இருத்தல். |

### முத்திரை

| | |
|---|---|
| அபய முத்திரை | : விரல்கள் மேல் நோக்கி நீட்டிய நிலையில், உள்ளங்கை எதிரில் |

இருப்பவர் பக்கம் திரும்பி இருக்க, தன்னை அடைக்கலம் அடைந்தோரை "அஞ்சேல்" என்று கூறுமாப் போன்று இருத்தல்.

வரத முத்திரை : இடக்கை உள்ளங்கை எதிரில் இருப்பவர் பக்கம் திரும்பி இருக்க, விரல்கள் கீழ் நோக்கித் தாளினைச் சுட்டிக்காட்ட, தன் அடியை அடைந்தால் வேண்டிய வேண்டியாங்கு பெறலாம் எனக் கூறுமாப் போன்று இருத்தல்.

கத்யவலம்பித முத்திரை : கை கீழே தொங்கிய நிலை.

கடிமுத்திரை : கடி என்றால் இடுப்பு; கைகள் இடுப்பில் ஊன்றிய நிலை.

ஊருமுத்திரை : ஊரு என்றால் தொடை; கைகள் தொடைமீது ஊன்றிய நிலை.

சூசிமுத்திரை : ஆட்காட்டி விரலை மட்டும் நீட்டி, எதிரே இருக்கும் பொருளைச் சுட்டிக் காட்டுதல்—ஏனைய விரல்கள் மடங்கி இருத்தல்.

சின்முத்திரை : ஆட்காட்டி விரல் மற்றும் பெரு விரல் நுனிகள் ஒன்று சேர்ந்து, உள்ளங்கை எதிரில் இருப்பவரை நோக்கி இருத்தல்.

ஞானமுத்திரை : நடுவிரல் மற்றும் பெருவிரல் நுனிகள் ஒன்று சேர்ந்து,

உள்ளங்கை மார்பை நோக்கி, அதன் அருகில் இருத்தல்.

கடகமுத்திரை : கடகம் என்றால் நண்டு; பெரு விரல் நீங்கலாக ஏனைய விரல்கள் நான்கும் வளைந்து பெரு விரல் அருகில் காணப்படும்; ஆனால் பெரு விரலைத் தொடாது நண்டு போல் தோற்றம் அளிக்கும்.

### கால்களின் நிலை

திரிபங்க நிலை : ஒரு கால் நேராகவும், மற்றொரு கால் சாய்ந்தும் காணப்படும்.

———

## பிற்சேர்க்கை 2

## BOOKS CONSULTED

1. A history of South India by K. A. Nilakanda Sastri.
2. Cholas by K. A. Nilakanda Sastri.
3. Pallava antiquities Vol I & II by G. Jouveau Dubreuil
4. Dravidian architecture by G. Jouveau Dubreuil.
5. The historical Sculptures of the Vaikuntha Perumal Temple, Kanchi by C. Minashi.
6. Indian temple styles (The Personality of Hindu architecture) by K. V. Soundararajan.
7. Early chola art (Part I) by S. R. Bala Subramanyam.
8. Early chola temples by S. R. Balasubramanyan.
9. Middle chola temples by S. R. Balasubramanyam.
10. Later chola temples by S. R. Balasubramanyam.
11. South Indian temples inscription Vol. III Part I by T. N. Subramaniam.
12. Epigraphica indica Vol. 25 1939-40.
13. History of the Pallavas of Kanchi by R. Gopalan.
14. Cave temples of Pallavas by K. R. Srinivasan.

15. A college text book of Indian history Vol. I by R. Sathianathaier.

16. A history of India Part II The Muhammadam period by H. L. O. Gatrett and Sita Ram Kohli.

17. Elements of Hindu Iconography Vol. I & IV by T. A. Gopinatha Rao.

18. The Development of Hindu iconography by L. N. Banerjee.

19. The cave temples of India by Fergusson and and Burgess.

20. Nataraja in art, thought and culture by C. Sivaramamurti.

22. Humpi ruins by A. H. Foughurst.

22. பல்லவர் வரலாறு by டாக்டர் மா; இராச மாணிக்கம் பிள்ளை.

23. தென்னிந்திய கோயிற் சாசனங்கள் by T. N. சுப்ரமணியம்:

24. சோழர் கலைப் பாணி by எஸ். ஆர். பாலசுப்ர மணியம்.

25. தமிழகக் கோயிற் கலைகள் by டாக்டர் இரா. நாகசாமி - மா. சந்திரமூர்த்தி.

---

கிடைக்குமிடம் :

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட்.,

தலைமை நிலையம் :

154, டி.டி.கே. சாலை,
ஆள்வார்பேட்டை, சென்னை-18.

கிளை நிலையங்கள் :

79, பிரகாசம் சாலை (பிராடுவே),
சென்னை-108.

திருநெல்வேலி-6. மதுரை-1.
கோயமுத்தூர்-1. கும்பகோணம்-1.
திருச்சிராப்பள்ளி-2. சேலம்-1.

விலை ரூ. 25-00

அப்பர் அச்சகம், சென்னை-108.